# மெய்கண்ட நூல்களுள் ஏழு



இருபா இருப∴து
வினா வெண்பா
போற்றிப் ப∴றொடை
கொடிக்கவி
நெஞ்சுவிடு தூது
உண்மைநெறிவிளக்கம்
சங்கற்பநிராகரணம்

தெளிவுரை
சி.சு. மணி

அருள்நந்திசிவம் அருட்பணி மன்ற வெளியீடு
78. செல்விநகர் சிந்துபூந்துறை, திருநெல்வேலி. 1.

ARUNA....

சிவமயம்

# மெய்கண்ட நூல்களுள் ஏழு

6








தெளிவுரை

சி. சு. மணி

வெளியிடுவோர்

அருள்நந்திசிவம் அருட்பணி மன்றம்
78, செல்விநகர், சிந்துபூந்துறை
திருநெல்வேலி - 627 001.

விலை ரூ. 45-00

வெளியீடு எண் : 17

முதற் பதிப்பு : மார்ச் 1993
இரண்டாம் அச்சு : அக்டோபர் 1999
உரிமை : திருமதி. செல்வி மணி

# BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of Book | : | Meikanda Noolgalul Ezhu (Seven books from Meikanda Sastra Works) |
| Author | : | SI. SU. Mani. |
| Publisher | : | S. Chithambaranatha Kalyani<br>Arulnandhi Sivam Arutpani Manram<br>Tirunelveli-627 001. |
| Language | : | Tamil |
| Date of Pubilcation | : | October 1999 |
| Print | : | Second Reprint |
| Size of the Book | : | 21 × 14 c.m. |
| Printing types used | : | 10 Point |
| Number of Copies | : | 600 |
| Number of Pages | : | 189+4 |
| Price | : | Rs. 45-00 |
| Printers | : | Rexy Printers, Tirunelveli-627 001. |
| Binding | : | Pulp Board |
| Subject | : | Commentaries on Seven Meikanda Sastra works. |

உ

சிவமயம்



# பதிப்புரை

அருள்நந்திசிவம் அருட்பணி மன்றம் திருவருளாலும் மெய்கண்டார் திருமரபின் குருவருளாலும் மெய்கண்ட சாத்திரங்கள் பதினான்கையும் எளிய தெளிவான உரைகளுடன் வெளியிடுவது என்ற குறிக்கோளை வகுத்துக் கொண்டது. இந்த வெளியீட்டுடன் சேர்த்து, சிவஞான போதம் தவிர்ந்த மற்றைய மெய்கண்ட நூல்கள் யாவும் திருவருளின் துணையால் வெளிவந்துள்ளன.

மெய்கண்டாரின் சிவஞான போத நூல் மாதவச் சிவஞான முனிவர் வகுத்த மாபாடியத்துடனும் மாபாடியத்திற்கு விளக்க குறிப்புகளுடனும் வெளியிடுவதற்கான பணிகள் இம்மன்றத்தால் மேற்கொள்ளப் பட்டுள்ளன. கயிலாயநாதப் பெருமான் திருவருளால் அந்த நூலும் விரைவில் வெளிவரும்.

சைவ சித்தாந்த மெய்ப் பொருளியல் கருத்துக்கள் பெரும்பான்மையான மக்களிடம் அவர்களுக்குப் புரிகிற மொழி நடையிலே எடுத்துச் சொல்லப்பெறல் வேண்டும் என்பது எங்கள் மன்றத்தின் குறிக்கோள். அதற்கான பணிகள் பல காத்திருக்கின்றன.

இந்தத் தொகுதியில் உள்ள மெய்கண்ட நூல்கள் ஏழுக்கும் தெளிந்த உரை எழுதித் தந்த திரு. சி. சு. மணி அவர்களுக்கு எமது நன்றி.

நூலை அச்சிட்டுத் தந்த ரெக்ஸி அச்சக உரிமையாளர் கயிலைமணி திரு. கோ. சீதாபதி அவர்களுக்கும், அச்சக நண்பர்களுக்கும் எங்கள் நன்றி.

அன்புள்ள

கயிலைமணி S. சிதம்பரநாதகல்யாணி
தலைவர், அருள் நந்தி சிவம்
அருட் பணி மன்றம்
78-செல்வி நகர், சிந்துபூந்துறை.
திருநெல்வேலி - 627 001.



என் அருமைத் தந்தையார்

**சிவத்திரு. A. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள்**

நினைவிற்கு இந்நூல்

சமர்ப்பணம்

**S. சிதம்பரநாதகல்யாணி**

உ

சிவமயம்



# இருபா இருபஃது

த.ந. உலகநாதன்

மெய்கண்ட சாத்திரங்கள் பதினுன்கனுள் ஐந்தாவதாக வைத்துப் போற்றப்படுவது இருபா இருபஃது என்னும் இந்நூல். இதன் ஆசிரியர் புறச்சந்தான குரவர்களுள் இரண்டாமவராகிய அருள்நந்தி சிவாசாரியார் இவர் சிவஞான போதம் என்ற முதல் நூலை வழங்கியருளிய மெய்கண்ட தேவநாயனுரின் மாணவர்கள் நாற்பத்தொன்பதின்மருள் முதன்மையானவர் என்பர்.

அருள்நந்தி சிவம் என்னும் திருப்பெயர் இவருக்கு இவருடைய ஞானுசிரியராகிய மெய்கண்ட தேவநாயனுரால் தீக்கைத் திருப்பெயராகச் சூட்டப்பட்டது என்பர். அதற்கு முன் இவர் சகல ஆகம பண்டிதர் என்னும் புகழ்ப் பெயர் தாங்கி இருந்தார் என்று கூறுவர். மெய்கண்ட தேவநாயனுரின் ஆணையை ஏற்றுச் சிவஞான போதத்துக்குச் செய்யுள் நடையில் அமைந்த விளக்க உரை போன்ற சிவஞான சித்தியார் என்னும் அரிய நூலை ஆசிரியர் அருள் நந்தி சிவம் இயற்றினுர். அந்நூல் பரபக்கம், சுபக்கம் என்னும் இரு பகுதிகளைக் கொண்டது. பரபக்கத்துள் பிறர் கூறும் கொள்கைகள் மறுக்கப்பட்டும் சுபக்கத்துள் சைவ சித்தாந்தச் செம்பொருள் நிலைநாட்டப்பெற்றும் உள்ளன.

இருபா இருபஃது இந்நூலாசிரியரின் இரண்டாவது நூலாகும். இந்நூல் பத்துத் திருவெண்பாக்களையும் பத்துத் திருவாசிரியங்களையும் கொண்டது. எனவே யாப்பின் அடிப்படையிலும் பாடலின் எண்ணிக்கை அடிப்படையிலும் இந்நூலுக்குப்பெயர் வழங்குவதாயிற்று. இது அந்தாதித் தொடையில் மண்டலித்து முடியும் வகையில் அமந்துள்ளது

நூலாசிரியராகிய அருள்நந்தி சிவம் தமக்கு ஏற்பட்ட ஐயங்களை தமக்கு ஞானுசிரியராக எழுந்தருளி உபதேசம் செய்த மெய்கண்ட தேவ நாயனுரிடம் வினவி அறிவதுபோல் இந்நூலின் போக்கு அமைந்துள்ளது. எழுப்பப்படும் வினுக்கள் யாவும் மிகவும் நுட்பமானவை. வினுக்கள் யாவற்றுக்கும் நேரடியான விடைகள் தரப்படவில்லை. எனினும் வினுக்கள் அமைந்திருக்கும் விதத்தில் விடைகள் சுட்டப்படுகின்றன.

சிவஞான போதத்தையும் அதன் வழி நூலாகிய சிவஞான சித்தியாரையும் கற்கின்ற நுட்ப அறிவுடையாருக்கு எழுகின்ற ஐயங்களே இந்த நூலில் தொடுக்கப்படும் வினுக்களாக அமைந்துள்ளன. எனவே இவற்றின் விடை முற்கூறிய இரண்டு நூல்களிலும் காணக்

கிடைப்பன. ஆதலால் இந்நூலின் பயிற்சி சிவஞானபோதம், சிவஞான சித்தியார் ஆகிய நூற்களுக்குத் தெளிவான பொருள்விளக்கம் காண்பதற்கு உதவும். ஆசிரியரின் திருவுள்ளமும் அதுவே என்று கொண்டால் மிகையன்று.

**1 கண்ணுதலும் கண்டக் கறையும் கரந்து அருளி
மண் இடையில் மாக்கள் மலம் அகற்றும்-வெண்ணெய்நல்லூர்
மெய்கண்டான் என்று ஒரு கால் மேவுவரால் வேறுஇன்மை
கைகண்டார் உள்ளத்துக் கண்.**

சிவபெருமான் தமது நெற்றிக் கண்ணையும் தம் திருக்கழுத்தில் உள்ள கறையையும் வெளித் தோன்றுவண்ணம் மறைத்துக்கொண்டு இவ்வுலகில் உள்ள உயிர்களின் மும்மலங்களையும் அகற்றும் பொருட்டுத் திருவெண்ணெய்நல்லூரில் மெய்கண்ட தேவ நாயனார் என்ற திருப்பெயர் தாங்கி ஞானாசிரியப் பெருந்தகையாக எழுந்தருளியுள்ளார் என்று ஒரு முறை நினைந்து வாழ்த்துகின்றவர்கள். தம் உள்ளத்தில் அப்பெருமான் ஒன்றாகி நிற்கும் தன்மையைக் கண்டவர் ஆவர்.

நெற்றித் திருவிழியும், ஆலகால நஞ்சு தங்கிய மணிமிடறும் சிவ பெருமான் ஒப்பற்றவன் என்பதனையும் அவன் சிற்றுயிர்களுக்கு இரங்கி அருள் பாலிப்பவன் என்பதனையும் காட்டுகின்ற அடையாளங்கள். திருவெண்ணெய்நல்லூரில் மெய்கண்ட தேவநாயனார் என்ற திருப்பெயர் தாங்கி ஞானாசிரியராக அப்பெருமான் எழுந்தருளியபோது இத் திரு அடையாளங்களை மறைத்துக்கொண்டு மானுடச் சட்டை தாங்கி எழுந்தருளினான் என்று ஆசிரியர் கூறுகிறார்.

இறைவனே குருவடிவாக எழுந்தருளினான் என்பதை உணர்ந்து அவன் திருவடியை ஒரு முறை நினைந்தாலும் அவ்வாறு நினைபவர் களுக்குச் சிவத்தோடு ஒன்றுகின்ற பெரும் பேறு வாய்க்கும் என்று பெருமானின் கருணைப் பெருக்கை உணர்த்தினார்.

**2 கண் அகல் ஞாலத்துக் கதிரவன் தான்என
வெண்ணெயில் தோன்றிய மெய்கண்டதேவ!
காரா கிரகக் கலிஆழ் வேலை நின்
பேரா இன்பத்து இருத்திய பெரும!
வினவல் ஆன்று உடையேன். எனது உளம் 5
நீங்கா நிலைமை ஈங்கும் உளையால்
அறிவின்மை மலம் பிரிவு இன்மை எனின்
ஓராலின உணர்த்தும் விராய் நின்றனையேல்
திப்பியம் அந்தோ பொய்ப்பகை ஆகாய்
சித்தின் அமலன் சோதி நாயகன் 10**

முத்தன் பரம்பரன் எனும்பெயர் முடியா
வேறுநின்று உணர்த்தின் வியாபகம் இன்றாய்ப்
பேறும் இன்றாகும் எமக்குஎம் பெரும!
இருநிலம் தீநீர் இயமானன் கால் எனும்
பெருநிலைத் தாண்டவம் பெருமாற்கு இலாதலின் 15

வேறா உடனா விளம்பல் வேண்டும்
சீறி அருளல் சிறுமை உடைத்தால்
அறியாது கூறினை அபக்குவ பக்குவக்
குறிபார்த்து அருளினம் குருமுதலாய் எனின்
அபக்குவம் அருளினும் அறியேன் மிகத்தகும் 20

பக்குவம் வேண்டில் பயன்இலை நின்னால்
பக்குவம் அதனால் பயன்நீ வரினே
நின்னைப் பருவம் நிகழ்த்தாது அன்றோ
தன்ஒப் பார்இலி என்பதும் தகுமே
மும்மலம் சடம்அணு மூப்பு இளமையில் நீ 25

நின்மலன் பருவம் நிகழ்த்தியது யார்க்கோ?
உணர்வு எழும் நீக்கத்தை ஓதியது எனினே
இணைஇலி ஆயினை என்பதை அறியேன்
யானே நீக்கினும் தானே நீங்கினும்
கோனே வேண்டா கூறல் வேண்டும் 30

''காண்பார் யார்கொல் காட்டாக் கால்'' எனும்
மாண்பு உரை உணர்ந்திலை மன்ற பாண்டியன்
கேட்பக் கிளக்கும் மெய்ஞ்ஞானத்தின்
''ஆட்பால் அவர்க்கு அருள்'' என்பதை அறியே. 34

பரந்த இந்நிலவுலகத்தில் சூழ்ந்திருந்த புற இருளை நீக்குவதற்கு எழுந்த கதிரவனைப் போன்று, உயிர்களின் அறியாமை ஆகிய இருளை அகற்றுவதற்காகத் திருவெண்ணெய்நல்லூரில் எழுந்தருளிஇருக்கும் மெய்கண்ட தேவனே, அறியாமையாகிய சிறைச்சாலையில் துன்புற்றுக் கிடந்த எனக்கு உமது திருவருளை வழங்கி என்றும் மாறாத பேரின்பத்தில் மகிழ்ந்திருக்குமாறு பெருவாழ்வு அளித்த பெருமானே, எனக்கு உற்ற ஐயங்களை உம்மிடத்திலே வினவி நீர் தரும் விளக்கங்களால் ஐயத்தின் நீங்கித் தெளியவேண்டும் என்ற அளவற்ற ஆசையுடையேன். அவ்வினாக்களைக் கேட்டு என் ஐயத்தைத் தீர்த்தருளுவீராக.

பதிப்பொருளாகிய நீர் எனது உள்ளத்தை விட்டு எப்போதும் நீங்காதிருக்கின்றீர் என்று அருள் நூல்கள் கூறும். அவ்வாறு இருந்தும் என்னிடத்தில் அறியாமை எப்படி வந்து பொருந்திற்று?

உயிர்களுக்கு அறியாமை என்பது ஆணவ மலத்தால் வந்தது. ஆணவமலம் உயிர்களைத் தோற்றமில் காலந்தொட்டே பற்றியுள்ளது. அது இடையில் வந்து பொருந்தின்தன்று என்று நீர் விடையிறுத்தால், ஆணவமலம் என்னைப் பற்றுங்காலத்து நீர் என்னைவிட்டு விலகியிருந்தீர் என்று ஆகிறது. ஒருபோதும் நீங்கியதில்லை உயிரோடு எக்காலத்தும் விரவியே இருந்தோம் என்று கூறுவீராயின் நீர் என்னைவிட்டு விலகாதிருந்தபோதும் அறியாமை வந்து என்னைப் பற்றிக்கொண்டது என்றால் அது விந்தையிலும் விந்தை அன்றோ?

நீர் பொய்க்குப் பகைவன், வரம்பில் ஆற்றல் உடையவன், இயல்பாகவே பாசங்களில் நீங்கியவன், அறிவே வடிவாகிய பேரொளிப் பிழம்பாகியவன், கட்டற்றவன், யாவர்க்கும் தலைவன் என்றெல்லாம் உம்மைப்பற்றி உரைக்கப்படும் பெருமைகள் பொருந்தாதனவாய் முடியுமன்றோ?

உயிர்களுக்கு அருள்பாலிக்கும் போது அவற்றோடு இயைந்து நின்று அருளுவதில்லை வேறாய்நின்றே அருளுவோம் என நீர் விடை பகர்வீராயின் நீர் எங்கும் நிறைந்திருக்கிறீர் என்பதற்கு இழுக்கு நேரும் அன்றோ? இறைவனோடு ஒன்றித்து நிற்பதே வீடுபேறு என்பதனால் உம்மின் வேறாய எனக்கு வீடுபேறு என்ற ஒன்றே இல்லாது போகும்.

மேலும் பெருமானே, எங்களை விட்டு விலகி நின்றீர் என்று சொன்ன அளவிலேயே உமக்கு எங்கும் எப்பொழுதும் நீக்கமற நிறைந்திருக்கும் வியாபகத்தன்மை இல்லாது ஆகுமன்றோ?

அப்பர் பெருமான் திருத்தாண்டகத்துள் "இருநிலனாய்த் தீயாகி நீருமாகி இயமானனாய் எறியும் காற்றுமாகி" என்று இவ்வாறு உமது சர்வ வியாபியாகும் தன்மையைப் பேசியுள்ளாரே அது பொருந்தாது போகுமோ? எனவே என்னைப்பற்றியிருக்கும் அறியாமையை என்னுடன் நின்று போக்குவீரோ? அல்லது என்னின் வேறாய் நின்று போக்குவீரோ? என்பதை விளம்பி அருள வேண்டும். இவ்வாறு எல்லாம் நான் கேட்பது என் அறிவால் உம்மைப் புரிந்துகொள்ள முடியாததனால் தான் என்பதன்றி வேறன்று. எனவே என் மீது சினம் கொள்ளாது அருளுவீராக.

அறியாமல் கூறினாய், பக்குவமின்மையும் பக்குவம் உடைமையும் சீர்தூக்கிப் பார்த்து குரு முதல்வனாய் எழுந்தருளி வந்து அருளுவோம் என்று நீர் கூறினால் அப்போதும் எனக்குச் சில ஐயங்கள் எழுகின்றன. நான் பக்குவம் பெறாதவனாயின் நீர் அறிவித்தாலும் என்னால் எதனையும் அறிய இயலாது. நான் பக்குவம் உடையவனாயின் அந்த நிலையே உமது அருளுக்கு ஏற்ற முதிர்ச்சியை நான் எய்தியுள்ளேன் என்பதைக்

காட்டும். எனவே நீர் எழுந்தருளி வந்து அருளுவதனுல் பயனில்லை என்ருகும். மேலும் பக்குவம் என்பது தான் ஏது? அது ஒரு சடப் பொருள். அப்பொருள் ஒப்பற்றவராகிய உம்மை என்னிடத்து வருவிக்கும் ஆற்றல் அற்றது. அன்று, உனக்குப் பக்குவம் வந்தால்தான் நாம் எழுந்தருளுவோம் என்ருல், உம்மைக் கட்டுப்படுத்தும் முதன்மை பக்குவத்திற்கு உரியதாகி, நீர் ஒப்பற்றவர் உம்மை ஒப்பார் ஒருவருமிலர் என்ற உமது தன்மைக்கு இழுக்கு நேரிடும்.

பக்குவநிலை என்று சொல்லப்படுவது இறை உயிர் தளை என்ற முப்பொருள்களில் எதற்கு வேண்டும் என்ற கேள்வியும் எழுகிறது. மும்மலங்களும் சடம். சடப்பொருள்கள் கிடந்தபடியே கிடக்கும் என்பதன்றி அவற்றுக்குப் பக்குவம் வருவதில்லை. உயிர் சார்ந்ததன் வண்ணமாகிப் பிறவி தோறும் வேறு வேறு உடலில் பொருந்தி நீங்கி வருவது. உடலுக்குத்தான் இளமையும் மூப்பும் வருமேயன்றி ஆன்மாவுக்கு இளமையும் இல்லை. மூப்பும் இல்லை. எனவே உயிருக்குப் பக்குவம் என்பதும் பொருந்தாது. முதல்வனுகிய நீரோ இயல்பாகவே பாசங்களின் நீங்கியவர். நின்மலர். உமக்குப் பக்குவம் என்ற பேச்சுக்கே இடமில்லை.

ஆன்மாவின் அறிவு படிப்படியாக வளர்ந்து இருவினை ஒப்பும் மல பரிபாகமும் எய்துவதே பக்குவம் எனப்படுமாயின், பக்குவத்தைத் தானே தேடிக் கொண்ட உயிருக்கு நீர் வந்து வழங்குவதென்ன? உம்முடைய இசைவற்ற அருளின் இயல்பினை நான் எவ்வாறு அறிவேன்? ஏனெனில் மும்மலங்களும் தானே நீங்கினுலும் அல்லது நானே நீக்கிக் கொண்டாலும் ஒப்பற்ற தலைவராகிய நீர் அங்கு வேண்டியதில்லையே? உம்மால் ஆகும் பயன் ஏதும் இல்லாதவிடத்து உம்மை ஒப்பற்றவன் என்று கொள்ளுவது எவ்வாறு? இதற்கு விடை கூறி அருள வேண்டும்.

இவற்றுக்கு விடை வேண்டுமெனில் திருநாவுக்கரசு நாயனுர் அருளிச் செய்த ''ஆட்டுவித்தால் யார் ஒருவர் ஆடாதாரே'' எனத் தொடங்கும் திருத்தாண்டகத்தின் உட்பொருளையும், திருஞான சம்பந்த நாயனுர் பாண்டிய மன்னன் கேட்குமாறு பாடிய ''ஆட்பாலவர்க்கு அருளும் வண்ணமும்'' என்று தொடங்கும் திருப்பாடலின் மெய்ப்பொருளையும் உணர்தல் வேண்டும். இவற்றி னின்றும் நீ எழுப்பிய வினுக்களுக்கான விடையை அறிவாயாக.

இந்த முதற்பாடல் பதி இலக்கணத்தைப் பற்றிய விளக்கங்களைக் கேட்கின்ற பாடலாக அமைந்துள்ளது. முதலில் தமக்கு அருளுரை வழங்கிய மெய்கண்ட நாயனுரைப் போற்றிப் பாராட்டி ஆசிரியர் தம் வினுக்களைத் தொடுக்கிருர். அந்த வினுக்களைக் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்தலாம்.

1) பெருமானே, நீ எங்கும் நிறைந்திருப்பவன். எனது உள்ளத்தில் நீங்காது கலந்திருக்கின்ற தன்மை உனக்கு உண்டு. அப்படி இருந்தும் என் உயிர் ஆணவ மலத்திஞல் பற்றப்பட்டு அறியாமையே வடிவாய் நிற்கிறது. அவ்வாருயின் என் உள்ளத்தை விட்டு நீ நீங்கி நின்றனையோ?

2) உன்னைவிட்டு ஒரு பொழுதும் நீங்கி நின்றதில்லை என்று நீ பதில் அளித்தால் பொய்யினைக் கடியும் வல்லவன் என்றும் தூய்மையான வன் என்றும் நின்மலன் என்றும் அறிவே பிழம்பாயவன் என்றும் வீடு பேருய் நின்றவன் என்றும் எல்லாவற்றுக்கும் தலைவன் என்றும் புகழப் படும் உனக்கு அப்புகழ் மொழிகள் பொருந்தா ஏனெனில் உன்னையும் மீறி என்னை ஆணவ மலம் பற்றிக் கொண்டதன்றே?

3) எனக்கு அறிவினை உணர்த்தி அறியாமையை நீக்கும் பொழுது என்னை விட்டு வேருக நின்று நீ உணர்த்துவாய் என்னில் உனது வியாபகத் தன்மைக்கு இழுக்காகும் அத்துடன் உன்னைப் பிரியாது நிற்கும் பெரும் பேறும் எனக்கு வாய்க்காது. அப்பரடிகளின் 'இருநில ஞய்த் தீயாகி' என்ற திருத்தாண்டகத்தில் கூறப்படும் அனைத்துமாய் நின்ற நிலை உனக்கு இல்லாமல் போகும். ஆதலால் நீ வேறு நிற்கின் றனையா? உடனுய் நிற்கின்றனையா? கூறியருளுக.

4) உயிர்களின் பக்குவ நிலை அறிந்து யாம் அருள் பாலிப்போம் என்று கூறிஞல் கீழ்க்கண்ட ஐயங்கள் எழுகின்றன. என்னுடைய பக்குவ மற்ற நிலையில் நீ அருளிஞல் என் அறியாமையிஞல் அதனை அறிகின்ற அறிவு எனக்கு இல்லாமல் போகும். பக்குவம் உள்ள காலத்து உணர்த்துவேன் எனக் கூறிஞல் உன்ஞல் ஆகும் பயன் யாதுமில்லை. அதுவுமல்லாமல் பக்குவம் தலைமை நிலையை அடைந்து நீ அதன்வழிச் செயல்படுபவன் ஆவாய். எனவே உன்னை ஒப்பார் ஒருவரும் இலர் என்பது பொருந்தாது ஆகுமன்றே?

5) பக்குவம் என்பது முப்பொருள்களுள் எதற்கு உரைக்கப் பட்டது? மலங்கள் சடம் எனவே அவற்றுக்குப் பக்குவம் விளையாது. உயிர் உடல்தோறும் தங்கிப் பல்வேறு பிறவிகளுக்கு ஆட்படுவதால் அதற்கு மூப்பும் இளமையும் இல்லையன்றே? நீயோ மலங்களால் பற்றப் படாதவன். உயிரின் உணர்வு பக்குவப்பட்டு இருவினையொப்பும் மல பரிபாகமும் எய்துவதே பக்குவம் என்ருல் நீ இணையற்றவன் என்று கூறுதல் எவ்வாறு பொருந்தும்? மலங்களை நானே நீக்கிக் கொண்டாலும் அல்லது அவை தாமே என்னை விட்டு நீங்கிஞலும் தலைவஞகிய உன்னுடைய இடையீடு வேண்டாமன்றே?

மேலே கேட்கப்பட்ட கேள்விகளுக்குக் குறிப்பால் விடை உணர்த்துவதாக இதன் பின்னர் வருகின்ற இப்பாடலின் இறுதி அடிகள் நான்கும் அமைந்துள்ளன அவற்றுள் திருமுறைகளிலிருந்து இரண்டு திருப்பாடல்கள் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன. ஒன்று ''ஆட்டுவித்தால் ஆர் ஒருவர் ஆடா தாரே'' என்ற அப்பர் பெருமானின் திருத்தாண்டகம், மற்றொன்று ''ஆட்பாலவர்க்கு அருளும் வண்ணமும்', என்று தொடங்குகின்ற திருஞான சம்பந்தரின் திருப்பாசுரப் பாடல்.

ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடா தாரே?
அடங்குவித்தால் ஆரொருவர் அடங்கா தாரே?
ஓட்டுவித்தால் ஆரொருவர் ஓடா தாரே?
உருகுவித்தால் ஆரொருவர் உருகா தாரே?
பாட்டுவித்தால் ஆரொருவர் பாடா தாரே?
பணிவித்தால் ஆரொருவர் பணியா தாரே?
காட்டுவித்தால் ஆரொருவர் காணு தாரே?
காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக் காலே?

இந்தத் திருப்பாடல் எளிய சொற்களால் அமைந்து ஆழ்ந்த கருத்துக்களை விளக்குவதாய் உள்ளது. இறைவன் உயிர்களுக்குக் காட்டும் உபகாரம், காணும் உபகாரம் ஆகிய இரண்டும் புரிந்து வருகின்றான். இறைவன் காட்டி அருளுவதனாலேயே உயிர்கள் கண்டு வருகின்றன. இறைவன் ஆட்டுவித்தால் யாரே ஆயினும் ஆடுவர். அடங்குவித்தால் அடங்குவர். இவ்வாறு பாடலின் நான்காவது வரியின் முதற்பகுதி வரைக்கும் இறைவன் திருக்குறிப்பின்படியே உயிர்கள் செயற்படுகின்றன என்பதை அப்பர் பெருமான் அறிவுறுத்துகின்றார். நான்காவது வரியின் பிற்பகுதியில் எதிர்மறை முகத்தால் இறைவன் காட்டி அருளாதபோது காண்கின்ற ஆற்றல் யாருக்கு உண்டு என்ற கேள்வியை எழுப்பி யாருக்கும் இல்லை என்ற பொருளைப் பெற வைத்தார்.

இதன் மூலம் பொருள்களை உள்ளபடி அறிவதற்கு இறைவனின் திருவருட் துணை உயிர்களுக்கு இன்றியமையாதது. எனவே மலத்தால் மறைக்கப்பட்ட உயிர்களின் அறிவை, மலத்தை நீக்கி அவற்றுக்கு அறிவிப்பவன் சிவபெருமானே என்பதனை விளக்கியருளினார். எனவே மலம் தானாக நீங்காது என்பதும் உயிர்கள் மலத்தை நீக்கும் ஆற்றல் அற்றன என்பதும் அறிவுறுத்தப்பட்டன.

''ஆட்பாலவர்க்கு அருளும் வண்ணமும் ஆதி மாண்பும்
கேட்பான் புகில் அளவில்லை; கிளக்க வேண்டா;
கோட்பா லனவும் வினையும் குறுகாமை எந்தை
தாட்பால் வணங்கித் தலைநின்று இவை கேட்க தக்கார்''

மதுரையில் சமணர்களோடு வாதம் புரிந்து சைவசமயத்தை நிலை நிறுத்திய திருஞான சம்பந்தப் பெருமான், பாண்டிய மன்னன் கேட்டு உணருமாறு அருளிச் செய்த திருப்பாசுரத்தின் ஒரு திருப்பாடல் இது. சிவபெருமான் தனக்கு ஆட்பட்டவர்க்கு அருள் செய்யும் கருணையாளன். அவன் எவ்வாறு அருள் புரிகிறான் என்பதையும் எப்போது, எப்படி அருள் புரிகிறான் என்பதையும் அவனது அனாதி முறைமையான பழமையையும் பெருமையையும் கேட்கப் புகுந்தால் அதற்கு விடை எல்லையற்று நீளும். ஏனெனில் இவை யாவும் சொல்லுக்கும் மனதுக்கும் அடங்குவன அல்ல. எனவே அவற்றைச் சொல்லவும் கேட்கவும் முற்படுவது வறிதாய் முடியும் ஆதலால் உயிர்கள் துயரங்களை விட்டு நீங்கவும், வினைப் பயன்கள் உயிர்களைப் பற்றாதிருக்கவும் இறைவன் திருவடி மலர்களை வணங்கி அவனுக்கே ஆட்பட்டு நிற்பதன்றிச் செய்யத்தக்கது வேறு யாதும் இல்லை.

இறைவன் எங்கும் நிறைந்திருக்கிறான் என்பது உண்மையே. ஆயினும் அவன் எதிலும் தோய்வற்று நிற்கிறான். ஆதலினால் ஆணவ மலம் உயிர்களைப் பற்றும் போது அவன் உயிர்களை விட்டுவிலகி நிற்கிறான் என்பதில்லை. எல்லா உயிர்களுக்கும் அவ்வவற்றின் பக்குவம் அறிந்தே இறைவன் உணர்த்துகிறான் என்னும் போது பக்குவம் உயிர்களுக்கே உரியதாகிறது. எல்லோரிடத்திலும் இறைவனின் திருவருள் தோன்றாத் துணையாக விளங்கினும் உயிர்கள் தத்தம் அறிவுக்கேற்பவே அவனை உணரும் இயல்பினை உடையன. ஆதலால் உயிர்களுக்கு இறைவன் எப்போது எவ்வாறு அருள் பாலிப்பான் என்பதை அளவிட்டு உரைக்க முடியாது. எனவே இறைவன் திருவடியை அடைக்கலமாகப் பற்றுவதைத் தவிர உயிர்களுக்கு உய்வுபெறும் நெறி வேறு எதுவும் இல்லை. இவ்வாறு மேலே எழுப்பப்பட்ட வினாக்களுக்குக் குறிப்பாக விடைகள் உணர்த்தப்பட்டன.

**3 அறிவு அறியாமை இரண்டும் அடியேன்**
**செறிதலால் மெய்கண்ட தேவே! — அறிவோ**
**அறியேனோ யாது என்று கூறுகேன் ஆய்ந்து**
**குறிமாறு கொள்ளாமற் கூறு.**

மெய்கண்ட தேவப்பெருமானே நான் ஒரு நிலையிலே அறிந்தும், மற்றொரு நிலையிலே அறியாதும் இருக்கிறேன் என்பதை என்னால் அறிய முடிகிறது. ஆதலால் உயிராகிய நான் அறிவுடைப் பொருளா? அல்லது அறிவற்ற பொருளா? என்ற ஐயம் எனக்கு எழுகிறது. இந்த நிலையை ஆராய்ந்து எனக்கு மயக்கம் தீருமாறு என்னுடைய உண்மையான நிலையை எனக்கு உணர்த்தியருளுமாறு வேண்டுகின்றேன்.

இந்தப் பாடல் பசு இலக்கணம் பற்றி வினவுகிற பாடல். உயிரின் அறிவு சில நேரங்களில் விளங்கித் தோன்றுகிறது. பல நேரங்களில் பலவற்றைப் பற்றி அறிந்து கொள்ள இயலாமல் தட்டழிகிறது. ஊன்றிப் பார்த்தால் இந்த இரண்டு நிலைமைகளும் உயிரிடத்து உள்ளன என்பதை உணர முடியும், இரண்டில் எது உயிரின் உண்மையான பண்பு அறிவா? அறியாமையா? என்பது இங்கே எழுப்பப்படுகிற வினா?

உயிர் இறைவனைப் போல அறிவே வடிவானது அன்று. பாசத்தைப் போல முற்றிலும் அறிவற்றதும் அன்று. உயிர் உணர்த்த உணரும் சிற்றறிவுடையது. சார்ந்ததன் வண்ணமாம் தன்மை உடையது. அறிவுப் பொருளைச் சார்ந்து அறிவினால் அறிந்து அறிவின்கண் அழுந்தி அறிவுடைப் பொருளாய் விளங்கும் இயல்பு உயிருக்கு உண்டு. அவ்வாறே அறிவற்ற பொருள்களை, அறிவற்ற புலன்களின் வழியாக அறிந்து அறியாமையின்கண் அழுந்துவதும் உயிரின் இயல்பாகும். சிவஞானபோதத்தில் 'இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா' என ஆசிரியர் மெய்கண்ட தேவர் அறிவுறுத்துகிறார். இவ்வாறு சத்தின் இயல்பும் அசத்தின் இயல்பும் ஒருசேரப் பெற்றிருக்கும் உயிரை சதசத்து என்று வழங்குவர்.

4 கூறிய மூன்று மலத்தின் குணக்குறி
வேறு கிளக்கில் விகற்பம் கற்பம்
குரோதம் மோகம் கொலை அஞர் மதம் நகை
விராய் எண் குணனும் ஆணவம் என விளம்பினை
அஞ்ஞானம் பொய் அயர்வே மோகம் 5

பைசால சூனியம் மாச்சரியம் பயம்
ஆயஏழ் குணனும் மாயைக்கு அருளினை
இருத்தலும் கிடத்தலும் இருவினை இயற்றலும்
விடுத்தலும் பரநிந்தை மேவல் என்று எடுத்த
அறுவகைக் குணனும் கருமத்து அருளினை 10

ஆங்குஅவை தாமும் நீங்காது நின்று
தம்வழிச் செலுத்தித் தானே தானாய்
என்வழி என்பது ஒன்று இன்றும், மன்ன!
ஊரும் பேரும் உருவும் கொண்டு என்
ஊரும் பேரும் உருவும் கெடுத்த 15

பெண்ணை சூழ்ந்த வெண்ணெய் அம் பதியில்
சைவ சிகாமணி! மெய்யர் மெய்ய!
மும்மலம் சடம்என மொழிந்தனை அம்ம
மாறுகோள் கூறல் போலும் தேறும்
சடம் செயல் அதனைச் சார்ந்திடும் எனினே 20

**கடம்படம் அதனுள் கண்டிலம் விடப்படும்**
**ஊன்திரள் போன்றது ஆயில் தோன்றி**
**அணைந்து ஆங்கு அகறல் வேண்டும் குணங்களும்**
**பன்மை இன்று ஆகும் எம்மை வந்து அணையத்**
**தானே மாட்டாது யானே செய்கிலன் 25**

**நீயோ செய்யாய் நின்மலன் ஆயிட்டு**
**இயல்பு எனில் போகாது என்றும் மயல்கெடப்**
**பந்தம் வந்தவாறு இங்கு**
**அந்தம் ஆதி இல்லாய்! அருளே.**

சைவ சிகாமணியே, மெய்யர் மெய்யனே, தாங்கள் எனக்கு மும்மலங்களின் குணங்களையும் விளைவுகளையும் உணர்த்தி அருளினீர்கள். ஆணவ மலத்தின் காரியமாக விகற்பம் கற்பம் குரோதம் மோகம் கொலை அஞர் மதம் நகை ஆகிய எட்டும் உளவாகும் என்று கூறினீர். அவ்வாறே மாயையின் காரியங்கள் அஞ்ஞானம் பொய் அயர்வு மோகம் பைசா சூனியம் மாச்சரியம் பயம் என்ற ஏழு உள என்று அருளினீர்கள். கன்ம மலத்தைப் பற்றி விளக்கும் பொழுது அது இருத்தல் கிடத்தல் இருவினைகளையும் இயற்றல் பரநிந்தை விடுத்தல் மேவல் என்ற ஆறு விளைவுகளை உடையது என்றும் கூறினீர்கள் இம் மூன்று மலங்களும் என்னைவிட்டு நீங்காது நின்று என்னைத் தம் வழியிலே செலுத்தி அவையே நானும் வண்ணமும் என் வழி என்று ஒன்று இல்லாமல் போகுமாறும் செய்து என்னைத் துன்புறுத்தி வருகின்றன.

இவற்றிலிருந்து என்னைக் காத்தருளும் பொருட்டு ஊரும் பேரும் உருவமும் இல்லாத தாங்கள் பெண்ணை ஆறு சூழ்ந்த திருவெண்ணெய் நல்லூரில் மெய்கண்ட தேவர் என்னும் திருப்பெயர் தாங்கி ஞானாசிரியத் திருமேனி கொண்டு எழுந்தருளி எனது ஊரும் பேரும் உருவமும் என்னைவிட்டு நீங்கும்படி என்னை முத்தி நெறியில் செலுத்தி, என் பிறவியை வேரறுத்து என்னை ஆட்கொண்டு அருள் பாலிப்பதற்காக சைவத்தின் முடிமணியாகவும் மெய் உணர்வு கொண்டவர்களுக்கு எல்லாம் மெய்யனாகவும் விளங்குகின்ற பெருமானே!

மும்மலங்களும் சடம் என்று எனக்கு உணர்த்தி அருளினீர். அவ் வாறு உரைத்தது பொருத்தமற்ற கூற்றுப் போல எனக்குத் தோன்று கிறது. சடப் பொருளுக்குத் தனக்கென ஒரு செயலில்லையன்றோ? குடம் துணி போன்ற சடப் பொருள்கள் அறிவுடை ஒருவன் செயற்படுத்தின லன்றித் தாமே செயற்படுவதை யாரும் கண்டதில்லை. அவ்வாறு அன்று, நஞ்சு என்பது சடப்பொருளே ஆயினும் அறிவுடை ஒருவனால் உட்கொள் ளப்பட்டபோது அந்த நஞ்சு அவனை மயக்குவதனைக் கண்டதில்லையோ? அதுபோலவேதான் மலங்களும் அறிவுடைப் பொருளைச் சாரும்

பொழுது அதனை மயக்குகின்றது என்பீராயின், நஞ்சு மயக்குவது உண்மையே ஆயினும், உரிய பொழுது கழிந்தவுடன் நஞ்சின் வேகம் தணிந்து அதன் விளைவுகள் முற்றிலும் நீங்கிப் போவதைக் காண்கிறோம் அதுபோல மும்மலங்களும் காலப்போக்கில் தம் வலிமை கெட்டு நீங்க வேண்டும். அவ்வாறு நீங்குவதைக் காண்கிலம். அதனோடு அமையாது நஞ்சு உயிர்களைக் கொல்லுகின்ற ஒரு குணத்தையும் செயலையும் மட்டுமே கொண்டுள்ளது. ஆனால் மும்மலங்களும் பல்வேறு வகைப்பட்ட இயல்புகளைக் கொண்டுள்ளன. எனவே மும்மலங்களுக்கு விடத்தை உவமை கூறுவது பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை.

மும்மலங்களும் சடம் ஆயின் அவற்றுக்குச் செயலில்லை. எனவே அவை தாமே வந்து உயிர்களைச் சாரா. நானே விரும்பி மலத்தினைச் சென்று சேரமாட்டேன். நீர் அருள் வடிவு கொண்ட நின்மலன் ஆதலாலே மலங்களை என்னோடு சேர்த்திடமாட்டீர். மலங்கள் உயிர்க்கு இயல்பு என்றால் அவை உயிரை ஒரு போதும் விட்டு நீங்கமாட்டா. எனவே மலம் எனப்பட்ட பிணிப்பு எவ்வாறு வந்து உயிர்களைப் பற்றிக் கொண்டது என்பதை மயக்கம் தீர விளக்கியருள வேண்டுகிறேன்.

இந்தப் பாடல் பாசத்தின் இலக்கணம் பற்றி எழுகின்ற ஐயங்களைத் தீர்த்துக் கொள்ள வினாக்களை எழுப்புகிறது. முதலில் ஆணவ மலத்தின் காரியங்களாக எட்டினைக் குறிப்பிடுகின்றார். விகற்பம் என்பது மற்றப் பொருள்களிலிருந்து தன்னை வேறுபடுத்திக் கொண்டு தனக்கு ஒப்பார் யாருமில்லை என்று கருதும் இயல்பு. கற்பம் என்பது தன்னிடம் இல்லாத உயர்வுகளைத் தனக்கு உண்டு என்று கற்பனை செய்து கொள்ளல். குரோதம் என்பது பிறர் மீது சினம் கொள்ளுதல். மோகம் என்பது ஒரு பொருளின் மேல் எல்லையற்ற விருப்பம் காட்டுவது. கொலை பிற உயிர்களுக்கு ஊறு செய்வது. அனுர் என்பது சிறு துன்பம் நேரினும் அதுபற்றி எல்லையற்ற கவலைக்கு உள்ளாதல். மதம், மனம் மொழி மெய்களால் செருக்கித் திரிதல், நகை என்பது பிறரை எள்ளி இகழ்தல். இங்கு ஆசிரியரால் ஆணவ மலத்தின் காரியங்கள் என எட்டு வகை கூறப்பட்டன. மாதவச் சிவஞான முனிவர் சிவஞான மாபாடியத்தில் ஆணவ மலத்தின் காரியங்களை ஏழு வகைப்படுத்திக் கூறியருளினர்.

மாயையின் காரியங்களாக ஏழு குணங்கள் இதனை அடுத்துக் கூறப்பட்டுள்ளன. அவை முறையே அஞ்ஞானம் பொய் அயர்வு மோகம் பைசா சூனியம் மாச்சரியம் பயம் என்பன. அஞ்ஞானம் என்பது பொருள் அல்லவற்றைப் பொருள் என்று கொள்ளுதல் பொய் உண்மைக்கு மாறானவற்றைப் பேசுதல். அயர்வு அறிந்ததை மறந்தும் மயங்கியும் வருந்துதல். மோகம் எல்லையற்ற வேட்கையினால் துன்புறுதல். பைசா சூனியம் என்பது தனக்குள் எழுந்த தீய

வேட்கையை மற்றவர் அறியாமல் ஒளித்தல். மாச்சரியம் என்பது பிறரிடத்துப் பகைமை பாராட்டுதல். பயம் என்பது தம் உயிருக்கு ஊறு வரும் எனக் கருதி அச்சம் கொள்ளல்.

இதனை அடுத்துக் கன்ம மலத்தின் காரியங்களாக ஆறினைக் கூறு கிறார். அவை இருத்தல், கிடத்தல், இருவினை இயற்றல், விடுத்தல், பரநிந்தை, மேவல் என்பன. இருத்தல் என்பது ஓர் இடத்தைப் பற்றி இருத்தல், கிடத்தல் செயலற்று இருத்தல். இருவினை இயற்றல் என்பது தனது செயலினால் அறம் பாவம் ஆகியவற்றை ஈட்டுதல், விடுத்தல் என்பது பற்றியிருந்த ஒன்றினை விட்டு நீங்குதல். பரநிந்தை மற்றவரை இகழ்தல். மேவல் என்பது இழிந்தவற்றோடு பொருந்துதல்.

மும்மலங்களோடும் அவற்றின் விளைவுகளாக மேலே கூறப்பட்ட இருபத்தொரு வகையான காரியங்களோடும் பொருந்துவதனால் உயிர் தனக்கென ஒரு செயல் இன்றிப் பாசத்தினால் ஈர்க்கப்பட்டு, அவற்றின் வழியிலேயே குறிக்கோள் இன்றிச் செல்லுகிறது என்பதனை விரிவாகக் கூறினார்.

இதனை அடுத்த பகுதி ஞானாசிரியராகிய மெய்கண்ட தேவ நாயனாரைப் போற்றி விளிப்பதாக அமைந்துள்ளது. இறைவனே குருவடிவம் கொண்டு எழுந்தருளி வருகிறான். ஆதலால், ஊரும் பேரும் உருவமும் அற்ற சிவபெருமான், பெண்ணை ஆறு சூழ்ந்த திருவெண்ணெய் நல்லூரைத் தன் ஊராகக் கொண்டும் மெய்கண்ட தேவநாயனார் என்று திருப்பெயர் தாங்கியும் திருமேனி கொண்டும் சைவ நெறியின் முடிமணியாகவும் மெய்யர்களுக்கு மெய்யனாகவும் எழுந்தருளி, மீள மீளப் பிறப்புட்பட்டு ஊரும் பேரும் உருவும் கொள்ளுகின்ற என்னைப் பிறவா நெறிக்கண் செலுத்திய பெருமானே என்று ஞானாசிரியரின் பெருமையைப் போற்றி, ஆசிரியர் அவரிடம் விண்ணப்பித்துக்கொள்கிறார். அவ்விண்ணப்பம் வினாக்களாக வடிவம் கொள்ளுகிறது.

மும்மலங்களும் சடப்பொருள் என்று கூறினீர். அவ்வுரை மாறு கோள் உரை போலும் ஏனெனில் சடத்துக்குச் செயல் இல்லை. ஆயினும் மும்மலங்களும் என்னைத் தம்வழிச் செலுத்தி நடத்துதலால் அவற்றுக்குச் செயல் உள்ளது என்பது தெளிவாகிறது அன்றோ? அவ்வாறு அன்று. சடத்துக்குச் செயல் இல்லை. ஆனால் சடப்பொருள் உயிரைச் சாரும் பொழுது அது செயல்படும் என்று உரைப்பீராயின், குடமும் துணியும் இன்னும் இதுபோன்ற பிற பொருள்களும் உயிராகிய என்னைச் சாரும் பொழுது அவற்றுக்கு என்று ஒரு செயல் காணப்பட வில்லையே எவ்வாறு?

சடப்பொருள் தாமே செயல்பட மாட்டா. ஆயினும் உயிரோடு சேரும் பொழுது அவற்றால் விளைவுகள் உண்டாகின்றன. எடுத்துக்காட்டாக நஞ்சு ஒரு சடப்பொருள். ஒருவன் நஞ்சினை உண்டான் என்றால் அந்த நஞ்சு அவனுடைய ஊனில் கலந்து அவனுக்குக் கேடு செய்யும். அதுபோலவே மலங்களும் என்று கூறினால் அப்போதும் எனது ஐயம் தீர்ந்தபாடில்லை.

நஞ்சு ஒருவனது உடலில் சேர்ந்து கேடு செய்கிறது. அதன் பின்னர் உரிய காலம் கடந்த பிறகு நஞ்சின் தீமை குறைந்து ஆற்றல் அழிந்து தானாக விலகி விடுகிறது. ஆனால் மும்மலங்களும் ஆற்றல் அழிவதில்லை. தாமாக விலகுவதுமில்லை. அதுமட்டும் அல்லாமல் நஞ்சு உயிர்களைக் கொல்லுவதாகிய ஒரு செயலினையே உடையது. மலமோ மேலே கூறப்பட்டபடி, பல்வேறு வகைப்பட்ட ஆற்றல்களைக் கொண்டிருக்கின்றது, எனவே நஞ்சு போன்றது மலம் என்ற உவமை பொருத்தமற்றது என்பது புலனாகின்றது.

மேலும் மலம் என்பது சடம் ஆதலின் அது தானாக வந்து என்னைப் பற்ற இயலாது. மலத்தின் கொடுமையை நானாகத் தேடிக்கொள்ளமாட்டேன். பெருமானாகிய நீரோ மலங்களைக் கடந்து நிற்கும் நின்மலன். ஆதலால் நீர் அதனை என்னிடத்துச் சேர்த்திருக்கமாட்டீர். மலம் என்பது ஆன்மாவின் குணம் என்றால் ஒரு காலத்தும் மலம் என்னை விட்டுப் போகாது. ஏனெனில் பொருளின் குணம் அழியும்போது பொருளே அழிந்துபோகும். ஆதலால் மலம் என்பது உயிரின் இயல்பு அன்று; உயிரைப் பிணித்திருக்கும் குற்றம் என்பது தெளிவாகிறது. அந்தமும் ஆதியும் அற்ற பெருமானே, இந்தத் தளை என்னை எவ்வாறு பற்றிற்று என்று என்னுடைய மயக்கம் தீருமாறு அருளிச் செய்ய வேண்டும்.

இங்கே கேட்கப்படுகிற கேள்விகள்: மூன்று மலங்களும் சடம் எனக் கூறப்படுகின்றன. சடத்துக்கு ஒரு இயல்புதான் இருத்தல் கூடும் ஆணவ மலத்திற்கு எட்டு இய்ல்புகளும் மாயா மலத்திற்கு ஏழு இயல்புகளும், கன்ம மலத்திற்கு ஆறு இயல்புகளும் கூறப்படுகின்றனவே. அக்கூற்றுப் பொருந்துமா? சடப்பொருளுக்குத் தானாகச் செயல்படும் ஆற்றல் இல்லை. மும்மலங்களும் சடமாயின் அவற்றுக்குச் செயல் முதன்மை எவ்வாறு வந்தது? நஞ்சு போன்றது மலம் என்று சொன்னால் நஞ்சு காலப் போக்கில் தன் ஆற்றலை இழந்து போவது போல மலங்களும் தம் ஆற்றலை இழத்தல் வேண்டும் அல்லவா? அவ்வாறு நிகழாதது ஏன்? மலத்தை உயிருடன் சேர்த்தது யார்? மலம் தானாக வந்து உயிரைச் சார்ந்ததா? உயிர் மலத்தைப் போய்த் தானாகப் பற்றிக் கொண்டதா? அல்லது இறைவனாகிய நீர் மலத்தையும் ஆன்மாவையும் சேத்ர்து வைத்தீரா?

இந்தக் கேள்விகளுக்கான் விடை சிவஞான போதத்திலும் சிவஞான சித்தியாரிலும் காணக்கிடைக்கின்றன. மலம் என்பது உயிர்கள் என்று உள்ளனவோ அன்றே அவற்ருேடு சேர்ந்திருப்பது. எனவே மலம் வந்து உயிரைப் பற்றவில்லை உயிர் சென்று மலத்தைப் பற்றவில்லை. இறைவனும் இரண்டையும் சேர்த்து வைக்கவில்லை, ''நெல்லிற்கு உமியும் நிகழ் செம்பினில் களிம்பும் சொல்லில் புதிதன்று தொன்மையே'' என்பது சிவஞான போதத்தின் இரண்டாம் நூற்பாவில் இரண்டாம் அதிகரணத்தில் மூன்ருவது எடுத்துக் காட்டு வெண்பா, அவ்வாறே மலம் ஒன்றே எனினும் அதனுடைய ஆற்றல்கள் பல என்பது சிவஞான சித்தியாரின் ''ஒன்றதாய் அநேக சக்தி உடைய தாய் உடனுய் ஆதி அன்றதாய்'' என்ற திருப்பாடலில் விளக்கப்பட்டது. உயிர்கள் பல ஆதலின் அவற்றின் நிலை வேறுபாட்டிற்கு ஏற்ப மலத்தின் ஆற்றலும் வேறுபடும் என்பது குறிப்பாக உணர்த்தப்பட்டது.

**5 அருள் முன்பு நில்லாது அடியேற்குக் கண்ணின்று**
**இருள் கொண்டவாறு என் கொல் எந்தாய்! — மருள்கொண்ட**
**மாலையாய்! வெண்ணெய்வாழ் மன்னவா! என்னுடைய**
**மால்ஐயா மாற்ற மதி.**

எந்தையே, மருள் என்னும் குறிஞ்சி யாழின் திறமாகிய பண்ணினை இசைக்கும் வண்டுகள் மொய்க்கின்ற மாலையை அணிந் தவரே, திருவெண்ணெய்நல்லூரிலே வாழும் மன்னவரே, முற்கூறப் பட்ட மலங்கள் இருள் ஆதலால் அறிவே பிழம்பாக விளங்கும் உம்முடைய திருமுன்பு நிற்கமாட்டா. அடியேனுக்கு நீர் காட்டினு லன்றிக் காணுகின்ற இயல்பு இல்லை. அவ்வாறு இருக்க நான் எவ்வாறு மலமாகிய இருளினை அறிவேன். என்னுடைய மயக்கம் தீருமாறு அருள் கூர்ந்து உணர்த்தி அருள வேண்டுகிறேன்.

இங்கே கேட்கப்படும் கேள்வி: உயிர் ஆணவமாகிய இருள் மலத்தை எவ்வாறு அறிந்துகொள்ளும் என்பதாகும். அந்த வினவை எழுப்புவதற்கு முன் அதற்கு அடிப்படையாகச் சில கருத்துக்களை ஆசிரியர் எடுத்துரைக்கிருர். உயிர் அறிவுடைப் பொருளாயினும் அதற்குத் தானுக அறியும் அறிவில்லை. இறைவன் அறிவிக்கவே உயிர்கள் அறிகின்றன. இறைவனே அறிவுப் பிழம்பானவன். அவன் திருமுன்னிலையில் இருள்மலம் நில்லாது. உயிரோ கட்டு நிலையில் திருவருளை அறியாமல் உள்ளது. இந்தச் சூழ்நிலையில் எப்படிப் பார்த் தாலும் மலம் என்ற ஒன்று உளது என்று உயிரால் அறியப்பட இயலாததாய் உள்ளது. எனவே உயிர் எவ்வாறு இருள் மலத்தை அறிந்து கொள்ள இயலும்?

ஆணவ மலம் என்ற ஒன்று உள்ளது என்பது சைவ சித்தாந்தத்தின் சிறப்புக் கொள்கைகளில் ஒன்று. ஆணவ மல உண்மையை உயிரே உணர்ந்து கொள்ளும் என்பதற்கு இடமில்லை ஏனெனில் உயிரின் அறிவை முற்றிலும் மறைத்து உயிரை அறியாமையில் ஆழ்த்தி விடுகிறது ஆணவ மலம்.

இறைவன் தனது திருவருளால் ஆணவ மலத்தை, அதன் உண்மையை உயிருக்கு அறிவிப்பான் என்னில், ஆணவ மலத்தில் அழுந்திய உயிர்கள் திருவருளை அறிய இயலா. அத்துடன் நில்லாமல் திருவருளின் முன்னிலையில் ஆணவ மலம் ஒளியின் முன் இருள் போலத் தொலைந்து போகும்.

இதற்கு விடை : வீட்டு நிலை எய்திய உயிர் எல்லை இல்லாத பேரின்பத்தைத் திருவருளின் துணையால் நுகரும் பொழுது இதுவரை பெற்றிராத பேரின்பத்தை அனுபவித்து மகிழும். அப்போது கருதல் அளவையால் இப்பேரின்பத்தைத் தடை செய்து வந்தது ஆணவ மலம் என்பதை உயிர் உணரும் என்பதாகும்.

இந்த நூலுக்குக் காலத்தால் பிற்பட்ட சிவப்பிரகாசத்தில் (36) ஆசிரியர் உமாபதிசிவம் இவ்வினாவிற்கு விடையிறுப்பார் போல ''உன்னரிய திருவருளை ஒழிய மலம் உளது என்று, உணர்வு அரிதால் அதன் உண்மை தெரிவு அரிதாம் உனக்கே'' என்று அருளிச் செய்கிறார்.

இந்தப்பாடலில் மருள் என்பது குறிஞ்சி யாழ்த்திறத்தின் பண்ணினைக் குறித்து. முதலில் வருகிற மாலையா என்பது மாலையை அணிந்தவரே என்ற பொருள் தந்தது. இரண்டாவது வருகின்ற மாலையா என்பது மால் + ஐயா எனப் பிரிந்து 'ஐயா என் மயக்கத்தினை மாற்றியருளுக என்ற பொருள் தந்து நின்றது.

**6** மதி நுதல் பாகன் ஆகிக் கதிர
வெண்ணெய்த் தோன்றி நண்ணிஉள் புகுந்து என்
உளம்வெளி செய்து உன்அளவில் காட்சி
காட்டி என் காட்டினை எனினும் நாட்டி என்
உண்மையும் பெருமையும் நுவலில் அண்ணல் **5**
பாதாள சத்தி பரியந்தம் ஆக
ஓதி உணர்ந்த யானே ஏக
முழுதும் நின்றனனே, முதல்வ! முழுதும்
புலன் கடைப் பூழை நுழைந்தனன் கலங்கி
ஆங்கு ஐந்து அவத்தையும் அடைந்தனன் நீங்கிப் **10**
போக்கு வரவு புரிந்தனன் தூக்கி
எவ்விடத்து உண்மையும் இவ்விடத்து ஆதலும்

**செல்இடத்து எய்தலும் தெரித்த மூன்றினும்**
**ஒன்று என்க்கு அருளல் வேண்டும் என்றும்**
**இல்லது இலதாய் உள்ளது உளது எனும்** 15

**சொல்லே சொல்லாய்ச் சொல்லும் காலைச்**
**சிறுத்தலும் பெருத்தலும் இலவே நிறுத்தி**
**யானை எறும்பின் ஆனது போல் எனில்**
**ஞானம் அன்று அவைகாய வாழ்க்கை**
**மற்றவை அடைந்தன உளவெனின் அற்றன்று** 20

**விட்ட குறையின் அறிந்து தொன்று**
**தொட்டு வந்தன என வேண்டும் நட்ட**
**பெரியதில் பெருமையும் சிறியதில் சிறுமையும்**
**உரியது நினக்கே உண்மை, பெரியோய்!**
**எனக்கு இன்று ஆகும் என்றும்** 25

**மனக்குஇனி யாய்! இனி மற்றுஅது மொழியே**

பிறைத் திங்களைப் போன்ற நெற்றியை உடைய உமை அம்மையாரை ஒரு பாகத்தில் கொண்டவரே, எனக்கு உய்வினைத் தருவ தற்காகத் திருவெண்ணெய்நல்லூரில் அவதரித்து என் உள்ளத்திலே வந்து புகுந்து அறியாமையாகிய இருள் நிறைந்த என் உள்ளத்தில் சிவஞானமாகிய பேர்ஒளி நிறையுமாறு அருளியவரே. அளவுக்கு உட்படாத சிவபரம்பொருளின் ஒப்பற்ற இயல்பினை எனக்குக் காட்டி அருளி அதன்வழி உயிராகிய எனது இயல்பினையும் நான் உள்ளபடி உணர்ந்து கொள்வதற்கு எனக்குத் துணை செய்த பெருமானே, விண்ணப்பம்.

எனது நுண்மையையும் பெருமையையும் எடுத்துரைக்குமிடத்து, பாதாளம் தொடங்கி திருவருளின் எல்லைவரை நூல்களைக் கற்றறிந்த நான் எனது அறிவு சென்று அறிந்த இடங்களில் எல்லாம் முழுமையாக நிற்கின்றேன். ஆயினும் எவற்றையும் அறிகின்ற போது ஐம்பொறி களாகிய இழிவான துளைகளின் வழிச் சென்றே நுகர்கின்ற இழிதகைமை உடையேன். அதுமட்டும் அன்றி எல்லாவற்றையும், எப்போதும், ஒரு தன்மையாக அறிகின்ற அறிவு எனக்கு இல்லை. நனவு கனவு உறக்கம் பேர் உறக்கம் உயிர்ப்பு அடங்கல் என்னும் ஐவகைநிலைகட்கும் ஆட்பட்டு அறிவு கூடியும் குறைந்தும் வருகின்றேன். அல்லாமலும் இறப்புக்கும் பிறப்புக்கும் ஆட்படுகின்றேன். எனவே எங்கும் நிறைந் திருக்கும் நிலை ஒன்று; இப்போது இவ்வுடலோடு கூடி இவ் உலக வாழ்க்கையில் ஈடுபடுகிற நிலை மற்றொன்று; இதனை விட்டு நான் செய்த அறம் பாவங்களுக்கு ஏற்பத் துறக்க நிரயங்களிலே சென்று இன்பமும்

துன்பமும் துய்ப்பது வேறென்று. இந்த மூன்று வகை நிலைகளிலும் உயிருக்கு இயல்பான நிலை எது என்பதைக் கருணை கூர்ந்து அருளிச் செய்ய வேண்டும்.

இதில் மூன்று வகை கூறப்பட்டதே அவை யாவும் உயிருக்கு உரியது அன்றோ? அவற்றுள் ஒன்றனைத் தனித்துக் கூறுவானேன் என்று தாங்கள் சொல்வீர்கள் ஆனால் அப்போதும் எனக்குச் சில ஐயங்கள் எழு கின்றன. இல்லாத பொருள் என்றும் இல்லாததே. உள்ள பொருள் என்றும் உள்ளதே. இல்லாதது உள்ளது ஆகாது உள்ளது இல்லாதது ஆகாது என்பது சற்காரியவாதம். இதற்கேற்ப உயிர் ஒரு பொழுது சிறுத்தும் மற்றொரு பொழுது மிகவும் பெருத்தும் மாறி மாறி வரும் அளவுகளைக் கொண்டிருக்கும் என்ற கொள்கை பொருத்தமற்றது.

இன்னொரு வகையாக உயிர் உடலோடு கலந்தும் விரவியும் இருப் பதாகிய தன்மை மாறுபடுவதில்லை. யானையின் உடலில் உள்ள உயிர் அதன் அளவுக்கு நிறைந்து பெருத்தும், எறும்பின் உடலில் உள்ள உயிர் அதன் அளவே குறைந்து சிறுத்தும் நிற்கும் என்று கூறினால், அது உயிரின் ஞானத்தைக் குறிக்காமல் உடம்போடு கூடிய வாழ்க்கையைக் குறித்ததாகும்.

அப்படியில்லை, உயிர்களின் வினைக்கேற்ற உடலையே இறைவன் வழங்குகிறான் ஆதலால் அந்த உடலுக்கேற்ப உயிர் தனது அறிவோடு கூடத் தொழிற்பட்டு நிற்கும் என்று கூறினீராயின், முற்பிறவிகளில் இவ்வுயிர் எவ்வாறு பிறந்து வளர்ந்தது என்பதை அது அறிதல் வேண்டும். பெரியவற்றுள் எல்லாம் பெரிதாம் தன்மையும், சிறியவற்றுள் எல்லாம் நுட்பமாம் தன்மையும் உமக்கே உரியது அன்றி எனக்கு உரியது ஆகாது. எனவே என் மனத்துக்கினிய பெருமானே, இவற்றின் உண்மையை எல்லாம் எனக்குத் தெளிவாக மொழிந்தருள வேண்டும்.

உயிருக்கு உண்மையான நிலை எது என்பது இங்கே எழுப்பப் படுகிற கேள்வி. உடலோடு கூடி உயிர் வாழுகின்ற காலத்து அது வரை யறைக்குள் அகப்பட்டுக் கட்டுநிலையில் உழல்கிறது. அப்போது பொறி களின் துணையின்றி உயிரால் எதனையும் அறிய முடிவதில்லை. இந்நிலை யில் அது ஐந்து அவத்தைகளுக்கு உட்படுகிறது. இத்தகைய கட்டுக் களிலிருந்து இறைவன் திருவருளால் விடுதலை பெற்று என்றென்றும் திருவருளில் அழுந்துதலே உயிரின் உண்மையான நிலையாகும் என்பதே முதலில் எழுப்பப்பட்ட வினாவிற்கு விடையாகும்.

சார்ந்ததன் வண்ணமாகிய உயிர் தனக்கு வினைக்கீடாகக் கிடைத்த உடலுள் நிறைந்து அதன் அளவிற்கு ஏற்ற அறிவோடு தொழிற்படும். இக்கருத்து சிவஞான சித்தியாரில்,

"அசித்துஅரு வியாபகம் போல் வியாபகம் அருவம் இன்றாய்
வசித்திட வரும் வியாபி எனும் வழக்கு உடையன் ஆகி
நசித்திடா ஞானச்செய்தி அநாதியே மறைந்து நிற்கும்
பசுத்துவம் உடையன் ஆகிப் பசு என நிற்கும் ஆன்மா." (210)

என்று உரைக்கப்படுகிறது.

**7 மொழிந்த அவத்தை முதல்அடியேன் நின்றாங்கு
ஒழிந்தன நான்கும் உணர இழிந்து அறிந்து
ஏறிற்று இங்கு இல்லை எழில்வெண்ணெய் மெய்த்தேவே!
தேறிற்று என் கொண்டு தெரித்து.**

திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளியுள்ள மெய்கண்ட தேவனே, நனவு கனவு உறக்கம் பேருறக்கம் உயிர்ப்பு அடங்கல் என்ற ஐந்து நிலைகளில் உயிராகிய நான் பொருந்தியும் நீங்கியும் வருகின்றேன். இதனால் எனது அறிவு கூடியும் குறைந்தும் வருகின்றது. ஆயினும் நனவு நிலையில் என் அறிவு தொழிற்படுவதை என்னால் உணர முடிகின்றதே அன்றி மற்றைய நான்கு நிலைகளையும் நான் உணர்ந்து கொள்ள முடிவதில்லை. ஆதலின் நனவு தவிர நான்கு அவத்தைகள் உள்ளன என்பதையும் அவற்றில் கருவிகள் முறையே குறைந்து வருகின்றன என்பதையும் நான் எவ்வாறு அறிந்து கொள்வேன், அருள் கூர்த்து தெரிவிக்க வேண்டுகின்றேன்.

இங்கே கேட்கப்படுகிற ஒரே வினா உயிர்கள் ஐந்து அவத்தைப் படும் என்று அருள் நூல்கள் கூறுகின்றன. ஆயினும் நனவு நிலை தவிர மற்றைய நான்கு நிலைகளும் உள்ளன என்பதை நான் எவ்வாறு அறிவேன் என்பதாகும்.

நனவு நிலையில் அறிவுப் பொறிகள் ஐந்தும் செயற்பொறிகள் ஐந்தும் ஓசை முதலிய ஐந்தும் வாக்கு முதலிய ஐந்தும் பிராணவாயு முதலான காற்றுக்கள் பத்தும் அந்தக்கரணங்கள் நான்கும் புருடன் என்னும் தத்துவத்துடன் கூடி மொத்தம் முப்பத்து ஐந்து கருவிகள் தொழிற்படுகின்றன. இவை சாக்கிர நிலையில் தொழிற்படுகின்றன. கனவு நிலையில் இருபத்து ஐந்து கருவிகள், உறக்கத்தில் மூன்று கருவிகள், பேருறக்கத்தில் இரண்டு, உயிர்ப்பு அடங்கலில் ஒன்றும் தொழிற்படுவன என்று அருள் நூல்கள் கூறும்.

இவற்றை நனவில் அறிவதுபோல உயிரால் நேரடியாக அறிந்து கொள்ள முடியாது. கருதல் அளவை மூலமாகவே இவற்றை அறிய இயலும் என்பது இவ்வினாவிற்கு உரிய விடையாகும். கனவுநிலை நீங்கிய போது கனவு கண்டேன் என்ற உணர்வும், உறங்கி விழித்தபோது நன்றாக உறங்கினேன் என்ற உணர்வும் எழுவதைக் கொண்டு கனவு

உறக்கம் ஆகிய இரு நிலைகளை அறிதல் கூடும் மற்றைய இரண்டு நிலைகளான பேருறக்கம் உயிர்ப்பு அடங்கல் ஆகிய இரண்டும் அனுமானித்தே அறிந்து கொள்ளத் தக்கவை

8 தெரித்ததுஎன் கொண்டுஎனை உருத்திர பசுபதி!
செடிய னேனையும் அடிமை செய்யப்
படிவம் கொண்டு வடிவுகாட்டு இல்லாப்
பெண்ணை ஆளும் வெண்ணெய் மெய்ய!
அவத்தையில் தெரித்தனன் ஆயின் அவத்தை 5

தெரித்தாங்கு இருத்தலும் இலனே திருத்தும்
காலம் முதலிய கருவி ஆயின்
மாலும் பிரமனும் வந்து எனை அடையார்
ஓதும் காலை ஒன்றை ஒன்று உணரார்
சேதனம் அன்று அவை பேதைச் செயலும் இச் 10

சேதன ஆனால் செயல் கொள வேண்டும்
போதம் அவற்றைப் புணர்வதை அறியேன்
கருவித் திரளினும் காண்பதுஓர் ஒன்றாய்
ஒருவுதல் அறியேன் உணர்வுஇலன் ஆதலின்
நிற்கொடு கண்டனன் ஆயின் எற்குக் 15

கருவி ஆயினை பெருமையும் இலவே
யானே பிரமம் கோனே வேண்டா
இன்னும் கேண்மோ, மன்ன! நின்னின்
முன்னம் என்றன் உணர்வுஇலன் ஆதலின்
என்னைக் காண்பினும் காண்பல காணாது 20

உன்னைக் காண்பினும் காண்பல உன்னோடு
ஒருங்கு காண்பினும் காண்பல அரும்துணை
கண்டவாறு ஏது எனது கண்ணே!
அண்டவாண! அருட்பெரும் கடலே!



சங்கார காரணராக உள்ளவரே, பசுக்களாகிய உயிர்களுக்குத் தலைவனே, குற்றங்கள் நிறைந்த அடியேனை ஆண்டு கொண்டு அருளுவதற்காக ஞான ஆசிரியராய்த் திருமேனி தாங்கித் தங்களது உண்மை வடிவை மறைத்துக் கொண்டு பெண்ணை யாற்றங்கரையிலே விளங்குகின்ற திருவெண்ணெய் நல்லூரிலே எழுந்தருளியிருக்கும் மெய்கண்ட தேவரே, ஆன்மா என்ற பொருள் உள்ளது என்பதை நான் எவ்வாறு விளங்கிக் கொள்வேன்?

உயிர் ஐந்து அவத்தைப் பட்டு வருவதனுல் அவ்வாறு அவத்தை களுக்கு உட்படுவது உயிர் என்று அறியலாம் என்பீர்களாயின் நான் அவற்றை இன்னது என்று அறிந்து கொண்டதுமில்லை. அவற்றினின்று நீங்கிக் கொண்டதும் இல்லை.

ஐந்து அவத்தைகளை விட்டு உன்னுல் நீங்கிக்கொள்ள முடியும். அவ்வாறு உன்னை நீக்குவது காலம் நியதி முதலிய கருவிகள் தாம் என்று பதில் கூறுவீர்களாயின் என்னைப் படைத்தற்கு அயனும் காத்தலுக்குத் திருமாலும் என்ற தலைவர்கள் தங்கள் கட்டளைப்படி செயல்பட வேண்டாமன்றோ? காலம் முதலியன மட்டுமே போதுமன்றோ? அன்றியும் முற்கூறப்பட்ட காலம் முதலியன அறிவற்றவை ஆதலால் ஒன்றை ஒன்று அறியாது அன்றோ?

அவை அறிவுடைப் பொருள்கள் அல்ல. உயிராகிய அறிவுடைப் பொருளோடு அவை சேரும் போது அவற்றுக்குச் செயல் உண்டா கின்றன என்றுல் ஆன்ம அறிவின் துணை கொண்டு அக்கருவிகளுக்குத் தொழில் நிகழ்வதாகத் தெரியவில்லையே. இன்னும் கருவிகள் யாவும் கூடிய இடத்தில், நனவு நிலையிலும் ஓசை ஊறு உருவம் சுவை மணம், இவற்றை ஒன்றுென்றுக நுகர்வதன்றி ஒருங்கே உயிர் நுகர்வதில்லையே. அவற்றிலிருந்து நீங்கும் போதும் அதை நான் அறிகின்றேன் இல்லையே.

இந்த வினுக்களுக்கு, உயிர் தனித்து இருக்கும் நிலையில் எதனையும் அறியாது. பதிப் பொருளாகிய நாம் அறிவித்தாலே உயிர்கள் அறிய வல்லன என்று தாங்கள் விடையிறுத்தால் பதிப்பொருள் உயிருக்கு அறி விக்கின்ற கருவியாய் முடியும். அந்தக் கருவியைக் கொண்டு பயன் பெறுகின்ற முதன்மை உயிருக்கு உண்டாகும். அதனுல் தங்களுக்குப் பெருமையும் இல்லையாகும். நானே பிரமப் பொருளாயின் எனக்கு ஒரு தலைவன் வேண்டாமன்றோ?

இன்னமும் வினுவுவது உடையேன் மன்னனே, இறைவன் அறி விக்க ஆன்மா அறியும் என்றது பதிப் பொருளை நேருக்கு நேர் கண்டு இதுவே எனக்கு அறிவிக்கின்ற இறைவன் என்று அறிகின்ற ஆற்றல் ஆன்மாவுக்கு இல்லை. இறைவனின் முன்னுல் ஆன்மாவின் அறிவு விளங்கித் தோன்றுவதில்லை. இவற்றிலிருந்து ஆன்மா தன்னையும் அறிய வல்லது அன்று. தலைவனையும் அறியவல்லது அன்று. தலைவனேடு சென்று கூடியும் அறியவல்லது அன்று என்பது புலனுகின்றது. என் கண் போன்றவனே, எனக்கு அரிய துணையானவனே, உலகங்களுக்கு எல்லாம் தலைவனே, அருட்கடலே, நான் என்னை எவ்வாறு கண்டேன் என்பதை எனக்கு அருள் கூர்ந்து தெரிவிக்க வேண்டும்.

ஆன்மா தன்னை எவ்வாறு அறிந்துகொள்ளும் என்பது இங்கு எழுப்பப்படும் வினு. அதனைத் தொடர்ந்து துணை வினுக்களாகச் சில

தொடுக்கப்படுகின்றன. ஐந்து அவத்தைப்படுவதால் ஆன்மா என்ற ஒரு பொருள் உண்டு என்று அறியலாம் என்ற விடைக்கு அவத்தைப்படு வதையும் உயிர் அறிந்து கொள்ள இயலவில்லையே. பின் எவ்வாறு அறியும் என்று வினவப்படுகிறது.

காலம் நியதி முதலியன அவத்தையினுல் ஏற்படும் மறைப்பை நீக்கும் என்ற விடையில் நிறைவு பெருது, மேலும் சில விஞக்கள் எழுப்பப்படுகின்றன. கருவிகள் அறிவற்றனவாய் இருக்க அவை எவ்வாறு அறியாமையை நீக்குதல் கூடும். மேலும் அக்கருவிகளே ஒன்றை ஒன்று அறியாதே! கருவிகளோடு கூடி நின்கின்ற நனவு நிலையிலும் உயிர் புலன்களை ஒன்ருென்ருக அறியுமே அன்றி ஒருங்கே அறிவதில்லையே என்று மேலும் கேள்விகள் எழுப்பப்படுகின்றன.

உயிர்களுக்கு அறிவிப்பவன் இறைவனே. அவை தாமாக அறிய மாட்டா என்று விடை தரப்படுகிறது. இப்போதும் சில ஐயங்கள் கேட்கப்படுகின்றன. உயிர்களுக்கு அறிவிப்பவன் இறைவன் என்ருல் இறைவன் கருவியாகவும் உயிர் அக்கருவியால் பயன் பெறும் முதன்மைப் பொருளாகவும் ஆகாதோ? உயிருக்கு முதன்மை வந்தால் அதுவே பிரமப்பொருள் அதற்கு ஒரு தலைவன் இல்லை என்ருகாதோ என்று விஞக்கள் எழுகின்றன. அதனேடு கூடவே, உயிர்கள் இறைவனை அறிவதில்லை. உயிரின் அறிவு இறைவனின் முன் முனைத்துத் தோன்றுவ தில்லை; இறைவனும் உயிரும் கூடிப் பொருள்களை அறிவதும் இல்லை. இவ்வாறு இருப்ப ஆன்மா தன்னை எவ்வாறு அறியும் என்று விஞக்கள் தொடுக்கப்பட்டன.

இவ்விஞக்களுக்கு விடைகள் முறையே பின்வருமாறு அமையும். உடலோடு கூடி வாழ்கிற உயிர் ஐந்து அவத்தைகட்கு உட்படுவதனுல் நனவு நிலையில் மற்றைய நான்கு நிலைகளையும் கருதல் அளவையின் மூலம் அறிந்து கொள்ள இயலும். சுத்த தத்துவங்கள் செலுத்துவதனுல் காலம் நியதி முதலிய கருவிகள் செயல்பட்டு உயிருக்குப் பக்குவம் விளை கின்றது. உயிர்களுக்கு எப்பொருளையும் தானுக அறியும் அறிவில்லை. ஆதலாலே இறைவன் அறிவிக்கவே அறியும். அவ்வாறு அறிவிக்கும் காலத்து இறைவனுக்கு முதன்மை உண்டே தவிர உயிர்களுக்கு முதன்மை இல்லை, பதிப்பொருளாகிய இறைவன் தனது எல்லையற்ற திருவருள் காரணமாக ஞானசிரியத் திருமேனி கொண்டு பக்குவ மடைந்த உயிர்களுக்கு அறிவிப்பான். அப்போது உயிர் இறைவனின் தலைமையையும் தான் அவனது அடிமை என்பதையும் உணர்ந்து தன் முனைப்புக் கெட்டுத் திருவருளில் அடங்கும் போது தன்னையே தான் உணரும் இயல்பினைப் பெறுகிறது. இறைவன் அறிவித்தாலன்றி உயிர் எதனையும் அறியமாட்டாது.

**9 கடல் அமுதே! வெண்ணெய்க் கரும்பே! என் கண்ணே!
உடலகத்து மூலத்து ஒடுங்கச் சடலக்
கருவியாது ஆங்குஉணர்த்தக் காண்பதுதான் என்னை
மருவியாது என்று உரைக்க மன்.**

கடலில் விளைந்த அமுதம் போன்றவரே, திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளி அடியவர்களுக்கு அருள்பாலிக்கும் கரும்பினும் இனியவரே, அடியேனுக்குக் கண் போன்றவரே, ஆன்மா உடலில் மூலாதாரத்தில் ஒடுங்கிக் கிடக்கும் போது அதற்குத் துணையாய் நிற்கும் கருவிகள் யாவை? அந்நிலையில் ஆன்மா எதனை அறிகின்றது என்பதை எனக்கு அறிவித்து அருள வேண்டும்.

மூலாதாரத்தில் உயிர் புருடன் என்னும் பெயர் கொண்டு தனித்து நிற்கும். அப்போது அதற்கு அறிவும் செயலும் உளவாகா. இறைவன் திருவருளால் உயிரைக் கருவிகளோடு சேர்க்கும் காலத்து உயிருக்குப் படிப்படியே அறிவும் தொழிலும் நிகழ்கின்றன என்பது இவ் வினாவிற்குரிய விடையாகும். மூலாதாரத்தில் பிரகிருதி தத்துவம் என்ற ஒன்றே உண்டு. இதுபற்றிப் போற்றிப் பஃறொடையில்,

''மூல அரும் கட்டில் உயிர் மூடமாய் உள்கிடப்பக்
காலம் நியதி அது காட்டி — மேலோங்கும்
முந்திவியன் கட்டில் உயிர் சேர்த்துக் கலைவித்தை
அந்த அராகம் அவை முன்பு — தந்த
தொழில் அறிவு இச்சை துணையாக மானின்
எழில்உடைய முக்குணமும் எய்தி — மருளோடு
மன்னும் இதயத்தில் சித்தத்தால் கண்ட பொருள்
இன்னபொருள் என்று இயம்ப ஒண்ணு — அந்நிலைபோய்க்
கண்டவியன் கட்டில் கருவிகள் ஈரைந்து ஒழியக்
கொண்டு நியமித்து அற்றை நாள் கொடுப்பப் — பண்டை
இருவினையால் முன்புள்ள இன்பத்துன் பங்கள்
மருவும் வகை அங்கே மருவி — உருவுடன் நின்று
ஓங்கு நுதலாய ஓலக்க மண்டபத்தில்
போம் கருவி எல்லாம் புகுந்து ஈண்டி''

என்று விளக்கப்பட்டுள்ளமை காணலாம்.

**10 மன்னிய கன்மச் சமத்திடை மலங்களை
அன்னியம் ஆக்கி அருள்வழி அதனால்
என்னுள் புகுந்தனை எனினே முன்னைத்
திரிமலம் தீர்த்த தேசிக! நின்னோடு
ஒருவுதல் இன்றி உடந்தையே ஆகும்**

பெருநிலை ஆகல் வேண்டும் மருவிடும்
மும்மலம் அதனால் எம்முள் நின்றிலை எனில்
அம்மலத்திரிவும் செம்மலர்த் தாள்நிழல்
சேர்தலும் இலவாய்ச் சார்பவை பற்றிப்
பெயர்வுஇலன் ஆகும், பெரும! தீர்வு இன்று 10

அமைந்த கருமத்து இயைந்ததை அல்லது
சமைந்தன இலஎனச் சாற்றில் அமைந்த
மாயேயம் கன்மம் மாமலம் மூன்றும்
மாயாது ஆகவே ஆர்ச்சன மாயையின்
உற்பவம் தீராது ஒழுகும் ஒன்று ஒன்று 15

நிற்சமம் ஆயின் அல்லது நிற்பெறல்
இல்என மொழிந்த தொல் அறம் தனக்கும்
ஏயாது ஆகும் நாயேன் உளத்து
நின்றனை என்பனோ நின்றிலை என்பனோ
பொன்றிய பொன்றிற்றில மலம் என்பனோ 20

ஒன்றினை உரைத்து அருள் மன்ற குன்றாப்
பெண்ணைப் புனல் வயல் வெண்ணெய்க்கு அதிபதி!
கைகண் தலையாய் கால்செவி மூக்குஉயர்
மெய்கொண்டு என்வினை வேர் அறப் பறித்த
மெய்கண்ட தேவ! வினையிலி! 25
மைகொண்ட கண்ட! வழுவில் என் மதியே!

*பெண்ணையாற்றின் நீர்பாய்ந்து வளம் மிகுந்திருக்கும் வயல்களை உடைய திருவெண்ணெய் நல்லூருக்குத் தலைவரே, கையும் கண்ணும் பிற உறுப்புக்களும் கொண்ட திருமேனி கொண்டு என் வினையினை வேரறப் பறித்த மெய்கண்ட தேவரே, வினையால் பற்றப்படாதவரே, திருக்கழுத்தில் மை போன்று விளங்கும் கறையினை உடையவரே, இரு வினைகளும் தமக்குள் ஒத்து இருவினை ஒப்பு எய்திய நிலையில் தாங்கள் எனது மலங்களைப் போக்கி உமது திருவருளால் எனது உள்ளத்தின் உள்ளே புகுந்தீர் என்பதானால் தாங்கள் என்னோடு ஒன்றுபட்டுக் கலந்து நிற்கும் பேரின்பப் பெருநிலை எனக்கு வாய்த்திருக்க வேண்டும். அப்படியெனின், தங்கள் அருளுக்கு இலக்காவதற்கு முன் என்னிடத்து ஒற்றித்து நில்லாது தாங்கள் விலகி இருந்தீர்கள் என்று பொருளாகும். மும்மலங்களும் என்னோடு சேர்ந்து இருந்ததால் நீர் என்னுள் நின்றிலீர் எனின் அம்மலங்களிலிருந்து நீங்கவும் உம்முடைய செந்தாமரை மலர் போலும் திருவடிகளில் சேர்தலும் இல்லாமல் நான் மலத்தைச் சார்ந்தே இருத்தல் வேண்டும். அதனால் பிறப்பு இறப்புக்களில் பட்டு உழல்வதிலிருந்து விடுதலை பெற முடியாது துயருறுவேன்.*

பெருமானே, பிறந்த பிறப்பில் புசிப்பதற்கு என்று எடுத்துக் கொண்ட பிராரத்தவினையே அனுபவித்துக் கழிக்கப்படுமேயன்றி, ஏறுவினையாகிய ஆகாமிய கன்மம் வளராது என்று தாங்கள் விடையருளிச் செய்தால் அப்போதும் என்னுடைய ஐயத்திற்குத் தீர்வு இல்லை. ஏனெனில் நுகர்வினைக்கு ஏற்ற உடல் உள்ளளவும் உடலுக்குக் காரணமாகிய மாயை என்னை விட்டு நீங்காது. மாயை நீங்காத வரையிலும் வினையும் நீங்காது. மாயையும் வினையும் உள்ளளவும் ஆணவ மலமும் உளதாகும்.

இவ்வாறு மும்மலங்களும் என்னைவிட்டு நீங்காதிருப்ப ஏறு வினையும் அதனோடு கூடிய மாயையின் விளைவாக உள்ள உடலும், அதனால் புறப் பொருள்களின் மேல் பற்றும் ஒன்று ஒன்றைத் தொடர்ந்து மேன்மேலும் வளரும். தவிரவும் இருவினை ஒப்பு ஏற்பட்டாலன்றி உம்மை அடைதல் இயலாது என்று மொழிந்த தொன்மையான் அறமும் பொருந்தாது ஆகும். ஆதலால் எனது உள்ளத்துத் தாங்கள் கூடி நிற்கின்றீர் என்பேனோ அல்லது கூடி நின்றிலீர் என்பேனோ? என்னுடைய மலங்கள் அழிந்தன என்பேனோ அல்லது அழியவில்லை என்பேனோ? இவற்றை ஐயம் எழாதவண்ணம் தெளிவுபடுத்தி உரைத்தருள வேண்டுகிறேன்.

இப்பாடலில் எழுப்பப்படுகின்ற வினா, உயிர்களின் வினை இறைவனால் நீக்கப்படுகின்றது என்பது பற்றியதாகும். கன்ம சமம் என்னும் இருவினையொப்பு ஆன்மாவுக்கு ஏற்படுகின்ற பொழுது இறைவன் குருவடிவாக வந்து உயிரின் மலங்களைப் போக்கி திருவருளையே வழியாகக் கொண்டு உயிர்களுள் கோயில் கொண்டிருப்பான் என்றால், அதற்கு முன் இறைவன் உயிர்களை விட்டு நீங்கி இருந்தான் என்றாக வேண்டும் அல்லவா? மும்மலங்கள் உயிரைப் பற்றி இருப்பதால் இறைவன் உயிரை விட்டு நீங்கி இருந்தான் எனில் உயிரின் மும்மலங்கள் எவ்வாறு நீங்கும்? உயிர்கள் இறைவன் திருவடி நிழலைச் சேருவதுதான் எப்போது? இறைவனைச் சேராத உயிர் மும்மலங்களையும் விட்டு ஒருபோதும் விடுபடுவது இயலாதல்லவா? இறைவனின் திருவருள் நோக்கம் பெற்ற பிறகு பிராரத்தவினை மட்டிலுமே உயிர்களால் நுகர்ந்து கழிக்கப்படும். ஆகாமிய வினை ஏறாது என்று கூறின், உயிர் உலகத்தில் வாழும் காலத்து உடலைப் பற்றிக் கொண்டு நிற்றலால் மாயையின் தொடர்பு அறுவதில்லை. மாயைத் தொடர்பு அறாததனால் வினைத்தொடர்பும் அறாது. மாயையும் வினையும் நீங்காத போது ஆணவமும் நீங்காது. எனவே மும்மலத் தொடக்கினால் பிறப்பும் இறப்பும் தொடர்ந்தே வரும். ஆதலால் இறைவன் உயிருட்

புகுந்து நின்றனன் என்பது பொருந்துமா? நின்றிலன் என்பது பொருந்துமா? மலங்கள் அழிந்தன என்பது பொருந்துமா? அல்லது அழிந்தில என்பது பொருந்துமா?

இவ்வினுக்களுக்கு விடையாக உய்த்துணர வைக்கப் பட்ட கருத்துக்கள் பின்வருவன. இறைவன் உயிர்க்கு உயிராக என்றென்றும் அதனுடனேயே நிற்கின்றான். ஆயினும் ஆணவமலப் பிணிப்பில் அழுந்திக் கிடக்கின்ற உயிர் அவனை அறிவதில்லை. உயிர்கள் பக்குவ நிலை எய்தி இருவினையொப்பும் மலபரிபாகமும் சத்திநிபாதமும் நிகழும் போது, இறைவன் குருவடிவாக உயிர்களுக்குத் திருவருள் பாலிக்கிறான். அப்பொழுது தீக்கையினால் சஞ்சிதம் என்னும் பழவினை முற்றிலும் அழிக்கப்படுகிறது. திருவருள் வயப்பட்டு நிற்கும் உயிருக்குத் துன்பத்தில் வெறுப்பும் இன்பத்தில் விருப்பும் இல்லையாதலால் ஏறும் வினை எனப்படும் ஆகாமியம் பொருந்துவதில்லை. அவ்வாறே நுகர்வினை என்னும் பிராரத்தவினையும் உயிரை வருத்துதல் இல்லை. அது உடல் உவழாய்க் கழியும்.

இறைவன் உயிரை விட்டு ஒருபோதும் நீங்குவதில்லை. ஆயினும் கட்டுநிலையில் உயிர் இறைவனை அறிவதில்லை. உயிர் மலங்களை விட்டு நீங்குவதற்கும், வினைத்தொடக்கை அறுப்பதற்கும் இறைவனே துணையாகின்றான். ஆதலால் இறைவன் உயிரோடு கூடியே நிற்கின்றான் என்பது மேலே எழுப்பப்பட்ட வினுக்களுக்கு விடையாயிற்று.

**11. மதிஙின்பால் இந்த மலத்தின் பால்நிற்க**
**விதிஎன்கொல் வெண்ணெய் வாழ்மெய்ய!-பதிஙின்பால்**
**வந்தால் இதில் வரத்தில் வந்து இரண்டும் பற்றுகிலேன்**
**எந்தாய் இரண்டும்ஆம் ஆறுஎன்.**

திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளிய மெய்கண்டதேவரே உயிருக்கு அறிவினை வழங்கி அருளியவர் தாங்கள். அப்படி இருந்தும் தீங்கு விளைவிக்கும் கொடியதாகிய மலத்தோடு கூடி நிற்கும் இழிந்த நிலைமை எனக்கு ஏன் வந்தது? அறிவுப் பிழம்பாகிய தங்களுடன் கூடிய பொழுது மலங்கள் என்னைப் பற்றாது ஒழியவேண்டும். அன்றி மலத்தோடு தொடர்பு கொண்ட நான் முழுமுதல்வனாகிய தங்களைக் கூடுவதற்கான தகுதியை இழந்தவன் ஆகின்றேன். ஆனால் நானோ மலச் சேர்க்கையினால் அறியாமையில் மூழ்கியும், தங்கள் திருவடியைப் பற்றி அதனால் அறியும் தன்மை விளங்கப் பெற்றும் இரண்டு வகையாக மாறி மாறி உழல்கின்றேன். இந்த இரண்டுமற்ற நிலைமை எனக்கு எவ்வாறு வந்தது? விளக்கியருளவேண்டும்.

உயிர் மலங்களோடு சேர்ந்து அறியாமையில் மூழ்கியும் இறைவனோடு சேர்ந்து அறிவு பெற்றும் இருவேறு வகைப்பட்டு விளங்குவதேன் என்பது வினா. உயிர் சார்ந்ததன் வண்ணமாம் தன்மைஉடையது. அதனால் அது சதசத்து என்ற பெயரால் குறிக்கப்படுகிறது. சத்தினைச் சார்ந்து சத்தாகவும் அசத்தினைச் சார்ந்து அசத்தாகவும் நிற்கும் இயல்பு உயிருக்கு உண்டு. இது சிவஞான சித்தியாரில்,

> ''பாசி படுகுட்டத்தில் கல்லினை விட்டு எறியப்
> படும்பொழுது நீங்கி அது விடும் பொழுதில் பரக்கும்
> ஆசுபடு மலம்மாயை அரும் கன்மம் அனைத்தும்
> அரன்அடியை உணரும்போது அகலும் பின் நணுகும்'' (291)

எனவும்

> ''சத்துஅசத்து அறிவது ஆன்மாத் தான் சத்தும் அசத்தும் அன்று
> நித்தனும் சத்த் த்ரகி நின்றிடும் இரண்டன் பாலும்'' (250)

எனவும் விளக்கப்பட்டுள்ளமை அறியலாம். சிவஞான போதத்தில் இக் கருத்து, ''இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா'' என்று உணர்த்தப்பட்டுள்ளது.

**12.** **எண் திசை விளங்க இருட்படாம் போக்கி**
**முண்டகம் மலர்த்தி மூதறிவு அருளும்**
**மேதினி உதய மெய்கண்ட தேவ!**
**கோதுஇல் அமுத! குணப் பெருங்குன்ற!**
**என்னின் ஆர்தலும் அகறலும் என்னை கொல்** 5
**உன்னில் துன்னி உனுவிடில் பெயர்குவம்**
**என்னும் அதுவே நின் இயல்பு எனினே**
**வியங்கோள் ஆளனும் ஆகி இயங்கலும்**
**உண்டு எனப் படுவை எண்தோள் முக்கண்**
**யாங்கணும் பிரியாது ஓங்குநின் நிலையின்** 10
**யான்வந்து அணைந்து மீள்குவன் ஆயின்**
**ஆற்றுத்துயர் உற்றோர் அணிநிழல் நசைஇ**
**வீற்றுவீற்று இழிதர வேண்டலும் வெறுத்தலும்**
**இன்றிச் சாயைக்கு நின்று மன் இயல்பே**
**அனைய ஆகுவ நினைவு அரும் காலை** 15
**இந்நிலை அதனில் ஏழையேற்கு இரங்கி**
**நின்னை வெளிப்படுத்து ஒளிப்ப நீயேல்**
**அருள்மாறு ஆகும், பெரும! அஃது அன்றியும்**
**நிற்பெற்ற அவர்க்கும் உற்பவம் உண்டு எனும்**
**சொற்பெறும் அஃதுஇத் தொல் உலகு இல்லை** 20

அவ்வவை அமைவும் சோர்வும் மயர்வு அறச்
சொல்லில் சொல்லெதிர் சொல்லாச்
சொல்லே சொல்லுக் சொல் இறந் தோயே!

உலகின் எட்டுத் திசைகளும் விளங்குமாறு இருட் போர்வையினை அகற்றித் தாமரை மலர்களை மலரச் செய்து உலகத்தை விளக்கமுறும்படி கதிர்களைப் பரப்பும் உதய ஞாயிற்றை ஒத்த மெய்கண்டதேவரே, உயிர்களுக்கெல்லாம் இருளாகிய மலத்தை நீக்கிச் சிவஞானம் என்னும் ஒப்பற்ற அறிவினை வழங்குபவரே, கோதற்ற அமுதமும் குணப்பெரும் குன்றும் ஆகத்திகழ்பவரே, எங்கெங்கும் நிறைந்திருக்கிற தாங்கள் ஒரு பொழுது என்னோடு கூடியும் மற்றொருபொழுது என்னை விட்டு அகன்றும் நிற்பது எதற்காக? உயிராகிய நீ என்னை நினைக்கும்போது உன்னோடு பொருந்தியும் எம்மை நினையாதபோது உன்னைவிட்டுப் பெயர்த்தும் நிற்பது எமது இயல்பு என்று நீர் உரைத்து அருளுவீர் ஆயின், நீர் எனதுஏவலுக்கு உட்பட்டு என்னோடு சேர்ந்தும் என்னை விட்டுப் பிரிந்தும் நிற்பீர் என்றாகும். அதுவுமன்றி எங்கும் நிறைந்தவர் என்ற உமது தன்மைக்கு மாறாக ஏகதேசப் பொருளாகிப் போக்கும் வரவும் உடையவர் ஆவீர்.

அப்படியன்று எண்தோளும் முக்கண்ணும் உடைய நாம் எங்கணும் பிரியாது. யாவற்றுள்ளும் நிறைந்து அசைவற்று நிற்க, உயிராகிய நீதான் எம்மை வந்து கூடியும் எம்மைவிட்டுப் பிரிந்தும் அசைவுற்று நிற்பாய் என்று கூறுவீராயின், அப்போதும் நீர் எங்கும் நிறைந்தவர் ஆகையினாலே நான் தங்களுடன் கூடியும் பிரிந்தும் நிற்க இயலாது.

வெப்பம் மிக்க கடும் பகலிலே வழிநடந்து களைப்புற்றவர்கள் வெயிலின் கொடுமைக்கு ஆற்றாமல் சாலை ஓரத்தில் உள்ள மரத்தின் நிழலில் சென்று தங்கி இளைப்பாறுவர். அதன் பின்னர் அதனைவிட்டு நீங்கித் தம் வழிநடையை மேற்கொண்ட போது அம்மரம் அவர்கள் வந்து தங்கியதற்காக மகிழ்வதுமில்லை. அவர்கள் எழுந்து சென்றதற்காக வெறுப்பதுமில்லை. அந்த மரத்தின் நிலையே தங்களுக்கும் ஆகும். மேலும் மரத்தின் நிழல் போலத் தாங்கள் நிற்பீராயின் நிழலில் வந்து தங்கி எழுந்து செல்லும் வழிப்போக்கனே முதன்மை உடையவனுதல் போலத் தங்களுக்கு முதன்மையின்றி, உயிரே முதன்மை உடைத்து என்றது ஆகும்.

அதுவன்று, எங்கும் நிறைந்திருக்கும் நாம் உயிராகிய நீ எம்மை அன்போடு நினைக்கும் போது வெளிப்பட்டும் நினையாத பொழுது மறைந்தும் நிற்கிறோம் என்பீராயின், ஏன்றனக்கு இரங்கி வெளிப்பட்ட நீர் மீண்டும் ஒளிப்பீராயின் அது உம்முடைய அருளுக்கு மாறு

பாடாகும். அதுவுமன்றி உம்மை அடையப் பெற்றவர்களுக்கும் மீளவும் பிறப்பு உண்டு என்ற சொல்லுக்கு இடம் கொடுக்கும். உமக்கு இழுக்கும் ஆகும். உம்மை அடைந்தவர்கள் மீளப் பிறப்பது இந்தத் தொன்மையான உலகில் இல்லவே இல்லை என்பதே மெய் ஆகும். எனவே இங்கே எழுப்பப்பட்ட ஐயங்களுக்கு என் மயக்கம் தீரும் வண்ணம். உன் சொல்லுக்கு எதிர்ச்சொல் இல்லையாம் வண்ணம், சொற்களைக் கடந்து நிற்கும் பெருமானே, எனக்குச் சொல்லி அருள வேண்டும்.

இந்தப்பகுதியில் இறைவன் உயிர்களோடு கலந்து நிற்கும் இயல்பைப் பற்றி வினுக்கள் எழுப்பப்பட்டுள்ளன உயிர்களோடு இறைவன் ஒவ்வொரு நேரம் கலந்தும். ஔவொரு நேரம் பிரிந்தும் இருப்பது ஏன்? என்பது முதல் வினு. இறைவன் உயிரோடு கூடியும் பிரிந்தும் வருவான் என்பது பொருந்தாது. அவன் எக்காலத்தும் உயிரோடு கலந்தே நிற்கிருன். உயிர்தான் தனது மலப்பிணிப்பினுல் உலகப் பொருள்களில் தோய்ந்து இறைவனை மறந்தும் ஓரொருகால் அவனை நினைந்து அவனேடு கூடியும் மாறிமாறிப் பயின்றுவரும் என்பது இதற்கு உரிய விடையாகும். இவ்விடத்தில் திருநாவுக்கரசர் அருளிய ''பன்னில் ஊறும் பழத்தினில் இன்சுவை'' என்று தொடங்கும் தேவாரப் பாடல் வரிகள் எடுத்தாளப்பட்டுள்ளன.

இரண்டாவது வினு முதல் வினுவை அடியொற்றி எழுவதாகும். உயிர் பாசத்தைச் சார்ந்தபோது இறைவன் வெளிப்படாமல் நிற்பான். தன்னைச் சார்ந்தபோது வெளிப்பட்டு அருளுவான் என்று கூறினுல் உயிர்களுக்கு முதன்மை வருகிறதேயன்றி இறைவனுக்கு முதன்மை இல்லையே? என்ற கேள்வி எழுப்பப்படுகிறது. இதற்கு உவமையாகச் சாலை ஓரத்தில் நிற்கும் மரம் எடுத்துக்காட்டப்படுகிறது. வெப்பத்தால் வருந்தி வரும் வழிப்போக்கன் மரநிழலை அடைந்து இளைப்பாறுகிருன். தன் களைப்பு நீங்கியபொழுது நிழலைவிட்டு நீங்கி வழிநடையைத் தொடர்கிருன். நிழல் மரம் அவன் வந்ததற்காக மகிழ்வதில்லை. அவன் நீங்கியதற்காக வெறுப்பதுமில்லை. இந்த உவமையின்படி இறைவன் உயிர்களிடத்துப் பெருங்கருணை உடையவன் என்பது இழுக்குப்படுமே? என்பது அடுத்த வினு. இந்த வினுவிற்கு உரிய விடை: சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடன் ஆதலினுல் அவன் தன்னடைந்தார்க்கு இன்பங்கள் தருவான் என்பதில் அவனுக்கு இழுக்கு நேராது என்பதாகும். திருநாவுக்கரசு நாயனுர் தேவாரத்தில், ''சலமிலன் சங்கரன் சார்ந்தவர்க்கு அல்லால், நலமிலன் நாள்தோறும் நல்குவான் நலன், குலம் இலர் ஆகிலும் குலத்துக்கு ஏற்பதோர், நலமிகக்

கொடுப்பது நமச்சிவாயவே'' எனவும் உமாபதி சிவாச்சாரியார் அருளிய திருவருட்பயனில், ''நலமிலன் நண்ணார்க்கு நண்ணினர்க்கு நல்லன், சலமிலன் பேர்சங்கரன்'' எனவும் கூறப்பட்டிருத்தல் காண்க.

என்னிடத்து இரங்கித் தங்களை வெளிப்படுத்தி அருளுகின்ற தாங்களே பிறிதொரு சூழலில் என்னிடத்தில் இருந்து ஒளித்துக் கொள்வீர் என்று கூறினாலும் அதுவும் தங்கள் பெரும் கருணைக்கு இழுக்காகும். தங்களுடைய அருளுக்கு இலக்கானவர்கள் மீண்டும் பிறப்பதில்லை என்ற பழமையான வழக்குக்கு மாறுபாடும் ஆகும் என்பது மூன்றாவது வினா.

இந்த வினாக்களுக்கு எல்லாம் விடையாக: இறைவன் உயிர்களோடு ஒன்றாகவும், உடனாகவும் வேறாகவும் நிற்கிறான். ஆதலால் உயிர்கள் சென்று இறைவனோடு கூடுவது என்பதற்கோ அல்லது இறைவன் வந்து உயிர்களுடன் கூடுவன் என்பதற்கோ இடமில்லை. மலப்பிணிப்புற்ற உயிர்கள் இறைவன் தமக்கு நீங்காத் துணையாக இருக்கிறான் என்பதனை உணரவில்லை. பிணிப்பிலிருந்து விடுபட்ட உயிர்களுக்கு வெளிப்பட்டுத் தோன்றுகிற சிவபெருமான் விடுபடாத உயிர்களுக்குத் தோன்றாத் துணையாக விளங்குகிறான். அவன் பெரும் கருணையாளன் என்பதில் ஐயமில்லை.

இந்தப்பாடலில் ஆறாவது வரியில் 'உன்னில் உன்னி' என்று தொடங்கும் திருநாவுக்கரசரின் தேவாரம் ஒன்று மேற்கோளாக ஆசிரியரால் எடுத்தாளப்பட்டிருக்கிறது. அந்தப் பாடல் வருமாறு,

''பன்னில் ஊறும் பழத்தினுள் இன்சுவை
என்னில் ஊறி எனக்கே களிதரும்
உன்னில் உன்னும் உணவிடில் விட்டிடும்
என்னுள் ஈசன் இருந்த இயற்கையே''

இத்திருப்பாடல் இதுவரை வெளிவந்துள்ள தேவாரப் பதிப்புக்களில் இடம் பெறாது போயிற்று. ஆயினும் தாயுமான சுவாமிகள் தமது எந்நாட் கண்ணியில்,

''உன்னில் உன்னும் என்ற உறுமொழியால் என் இதயம்
தன்னிலுன்னி நன்னெறியைச்சாரும் நாள் எந்நாளோ?

என்று இப்பாடலை எடுத்தாண்டிருக்கிறார். அதுபோலவே திருவாவடுதுறை ஆதீனத்து நமச்சிவாயத் தம்பிரான் அவர்கள் தாம் இருபா இருபஃது நூலுக்கு வரைந்த உரையில் இப்பாடல் முழுவதையும் எடுத்துக்காட்டி அதனைத் தேவாரம் என்றும் குறிப்பிட்டுள்ளார். பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் தாம் எழுதிய சைவ சமய சரபம் என்னும் நூலில் இத்தேவாரப் பாட்டை எடுத்தாண்டுள்ளார்.

யாழ்ப்பாணம் சுவாமிநாத பண்டிதர் அவர்கள் வெளியிட்ட அடங்கன் முறைப் பதிப்பில் இப்பாடல் பிற்சேர்க்கையில் தரப்பட்டுள்ளது. ஓர் அரிய தேவாரப்பாடலை ஆசிரியர் அருள் நந்தி சிவம் தமது நூலில் மேற்கோளாகக் காட்டியதன் வாயிலாக நமக்கு அத்தேவாரப் பாடலைப் பாதுகாத்து வழங்கியுள்ளார்.

இத் திருவாசிரியத்தின் இறுதிவரிகள் திருக்குறளில் ''சொல்லுக சொல்லைப் பிறிதோர் சொல் அச்சொல்லை, வெல்லும் சொல் இன்மை தெரிந்து'' என்ற பாடலை நினைவூட்டுவன ஆகும்.

**13. இறந்தோய் கரணங்கள் எல்லாம் எனக்குச்**
**சிறந்தோய் எனினும் மெய்த்தேவே! பிறந்து உடனும்**
**காயம் கொளவும் கொளாமலும் கண்டதுநீ**
**ஆயன்கொல் பாதவத்து அற்று**

கருவி கரணங்களைக் கொண்டு அறிகின்ற உயிரின் அறிவுக்கு எட்டாமல் நிற்கின்ற மெய்கண்ட-தேவரே, தாங்கள் அடியேனுக்குக் கருவி கரணங்களை உதவி அருளினீர். அதனால் உலகில் பிறப்பெடுத்தது முதல் நான் என் உடலும் எனது கருவி கரணங்களுமே மெய்யெனக் கொண்டு வாழ்ந்து வந்தேன். பின்னர் அருள் நூல்களாலும் ஆசிரியரின் உபதேச மொழிகளாலும் கருவி கரணங்கள் பொய் என உணர்ந்த போதும் அவற்றைவிட்டு நீங்குவதற்கு ஆற்றல் இல்லாமல் ஆயன் வெட்டிய மரம் போல ஒருபகுதி ஒட்டியும் ஒருபகுதி விலகியும் அலமந்தேன். இதற்கு என்ன காரணம் என்று அருளிச்செய்தல் வேண்டும்.

ஆணவ மலத்தில் அழுந்திக் கிடந்த உயிருக்கு இறைவன் உடல், கருவி உலகு நுகர்ச்சிப்பொருள் ஆகியவற்றை அளித்தருளுகிறான். அவ்வாறு அளித்தருளுவது உயிரின் அறிவு படிப்படியாக விளக்கமுறுவதற்காகவே. இந்நான்கும் மாயையாகிய ஒண்தலையின் காரியங்கள். இக்கருத்து ''மாயை கொடு மலம் ஒழிப்பன் முன்னோன்'' என்று சிவஞானசித்தியார் (142) சுபக்கத்தில் விளக்கப்பட்டுள்ளது. ஆயினும் உயிர், தன் சிற்றறிவினால் கருவி கரணங்களே தான் என மயங்கி உணர்கிறது. ஆசிரியர் அருள் மொழியினாலும் பிறவாற்றாலும் தத்துவங்கள் வேறு தான் வேறு என்று உணர்ந்தாலும் உயிர் அவற்றை விட்டு முற்றிலும் நீங்க முடியாமல் ஒட்டியும் பிரிந்தும் தத்தளிக்கிறது. இந்த நிலையை விளக்குவதற்கு ''ஆயன் கொல் பாதவத்து அற்று என்ற உவமையை ஆசிரியர் பயன்படுத்துகிறார்.

இந்தவினாவுக்குவிடை: உயிரின் முன்னேற்றம் கருதியே இறைவன் உயிருக்குக் கருவி கரணங்களை வழங்கி அருளினான். அவற்றோடு

பொருந்தியும் நீங்கியும் ஐந்து அவத்தைப்பட்டு உயிர்கள் விளைநீக்கம் பெறுவதற்காகவே இறைவன் இவ்வாறு செய்தருளினன் என்பதாகும்.

காடுகளில் ஆடுகளை மேய்க்கும் ஆயர்கள் வளர்ந்தோங்கிய மரங்களின் கிளைகளைப் பாதி வெட்டி முழுவதும் துண்டித்து விழாமல் முறிந்து தொங்குமாறு சாய்ப்பார்கள். இவ்வாறு வெட்டப்பட்ட கிளைகள் மரத்தோடு ஒட்டிக்கொண்டிருப்பதால் மறுபடியும் தழைக்கும் இவ்வாறு இல்லாமல் முழுவதும் துண்டிக்கப்பட்ட கிளை பயனற்றுப் போய்விடும். இதனால் ''இடையன் வெட்டு அரு வெட்டு'' என்ற பழமொழியே எழுந்தது. தமிழ் இலக்கியங்களில் பழமொழி நானூறு. சீவகசிந்தாமணி, கலித்தொகை பெரியமொழி போன்றவற்றில் இவ்உவமை பயன்படுத்தப்பட்டுள்ளது நினையத்தக்கது.

**14.** அற்றது என் பாசம் உற்றது உன் கழலே
அருள்துறை உறையும் பொருள் சுவை நாத!
வேறுஎன்று இருந்த என்னை யான் பெற
வேறுஇன்மை கண்ட மெய்கண்ட தேவ!
இருவினை என்பது என்னைகொல் அருளிய 5

மனமே காயம் வாக்கு எனும் மூன்றின்
இதமே அகிதம் எனும் இவை ஆயில்
கணத்திடை அழியும் தினைத்துணை ஆகா
காரணம் சடம் அதன் காரியம் அஃதால்
ஆர் அணங்கு ஆம்வழி அடியேற்கு என்னைகொல் 10

செயல் எனது ஆயினும் செயலே வாராது
இயமன்செய்தி இதற்கு எனில் அமைவும்
பின்னைஇன்று ஆகும் அன்னதும் இங்குச்
செய்திக்கு உள்ளசெயல் அவை அருத்தின்
மையல்தீர் இயமற்கு வழக்கு இல்லை, மன்ன! 15

ஒருவரே அமையும் ஒருவா ஒருவற்கு
இருவரும் வேண்டா இறைவனும் நின்றனை
நின்னது கருணைசொல் அளவு இன்றே
அமைத்தது துய்ப்பின் எமக்கு அணைவு இன்றும்
உள்ளது போகாது இல்லது வராது 20

உள்ளதே உள்ளது எனும் உரை அதனுல்
கொள்ளும் வகையில் கொளுத்திடும் ஆயின்
வள்ளன்மை எலாம் உள்ளிட அமையும்
ஈயவேண்டும் எனும்விதி இன்றும்
ஆயினும் என்னை அரும்துயர்ப் படுத்தல் 25

**நாயி னேற்கு நன்றுமன் மாயக்**
**கருமமும் கரும பந்தமும்**
**தெருள அருளும் சிவபெரு மானே!**

திருஅருட்டுறைத் திருக்கோவிலிலே எழுந்தருளி இருக்கும் எங்கள் தலைவரே, பாசப்பிணிப்பினால் தங்களை அணுக இயலாதிருந்த என்னைத் தங்கள் திருவருட் பெருக்கால் வேறு ஆகாதபடி ஆண்டு கொண்ட மெய் கண்டதேவரே, தங்கள் திருவருளால் என் பாசங்கள் அற்றன. நான் தங்கள் திருவடிகளைச் சார்ந்து உய்ந்தேன்.

இருவினை என்று சொல்லப்படுவது யாது? மனம் உடம்பு சொல் ஆகியவற்றால் பிற உயிர்களுக்கு இழைக்கப்படும் நன்மை தீமைகளால் புண்ணிய பாவங்களாகிய இருவினைகளும் தோன்றுகின்றன என்பீராயின், நினைவும் சொல்லும் செயலும் ஆகிய இவை தோன்றிய நொடியிலேயே அழிந்து போகும் இயல்பு உடையன. அவை தினையளவு நேரமேனும் நிலைப்பனவல்ல.

மேலும் மனம் மொழி மெய்கள் சடப்பொருள்கள். ஆதலால் அவற்றின் காரியங்களாகிய இருவினைகளும் சடப்பொருள்களே ஆகும். அவ்வாறு இருக்க இந்தச் சடப்பொருள்கள் உயிர்கள் எடுக்கின்ற மேலைப் பிறப்புகளிலும் சென்று பற்றும் என்பது எவ்வாறு?

மனம் வாக்கு காயங்களும், அவற்றின் செயலால் விளைவதாகிய இருவினைகளும் சடமே. ஆயினும் உயிர்களுக்கு அறிவு உண்டு ஆதலால் உயிர்களோடு அவை சேரும் காலத்து அவை செயற்படுகின்றன என்று கூறினால், உயிர்கள் தமக்கென ஒருசெயலும் அற்றன என்ற கருத்தின்படி உயிர்களுக்கே செயல் இல்லாதபோது உயிர்களைச் சார்ந்த சடப்பொருள் களுக்குச் செயல்படும் தன்மை எவ்வாறு வந்தது?

உயிர்களுக்குச் செயல்படுகின்ற ஆற்றல் உண்டு என்று சொன்னால் உயிர்களின் கருத்துப்படி எல்லாச் செயல்களும் நிகழ்வதில்லையே. மேலும் உயிர்களின் கருத்துப்படியே அவற்றால் செயலாற்ற முடியுமாயின் அவை தமக்கு எமதண்டனை கிடைக்கும் வண்ணம் செயலாற்ற மாட்டா. அதுவுமல்லாமல் உயிர் தாமே செயற்படுமாயின் உயிர்களுக்கு முதன்மை ஏற்பட்டுத் தாங்கள் உயிர்களுக்கு உதவுவது என்பது இல்லையாய் முடியும்

உயிர்கள் செய்த நன்மை தீமைகளுக்கு ஏற்ற பயனை அவற்றுக்குத் தாங்களே ஊட்டுவீர்கள் எனின் உயிர்களைத் தண்டித்தற்கு இயமன் என்ற ஒருவன் வேண்டுவதில்லை. இயமனும் தண்டிப்பான், நாமும் வினைப்பயனை ஊட்டுவோம் எனில், உயிர்களை ஒறுப்பதற்கு ஒருவரே போதும். இருவர் வேண்டியதில்லை. இயமனும் வேண்டுமென்றால் உம்முடைய வரம்பில் ஆற்றலுக்கு இழுக்கு நேரிடும்.

அருள் பாலிப்பதற்கு நானும், ஒறுத்தலுக்கு இயமனும் என்று தாங்கள் விடையிறுத்தால், தங்கள் பெருங்கருணைத் திறத்திற்கு அது இழுக்காக அமையும்.

உயிர் தான் செய்த வினைக்கேற்ப அதன்பயனை அனுபவித்தே ஆக வேண்டும் என்றால், அதன் மூலம் உயிர்களுக்குப் புதிய வினைகள் தோன்றும் என்பதும் பொருந்துவது அன்றாம். சற்காரிய வாதத்தின்படி உள்ளது போகாது; இல்லாதது வாராது; உள்ளதே உள்ளது. என்பனவே நிலையான உண்மைகள். இதன்படி உள்ளதாகிய பிராரத்தவினையை அனுபவிக்கும் காலத்து இல்லாததாகிய ஆகாமியவினை புதிதாகத் தோன்றும் என்பது பொருத்தமற்றது ஆகும் பிராரத்தவினையை நுகரும் போது ஆகாமிய வினையும் தோன்றத்தான் செய்யும் எனில் அறநூல்களில் விதிக்கப்பட்ட அறச்செயல்களைச் செய்து அவற்றின் மூலம் புண்ணியம் தேடிக்கொள்ளுதல் வேண்டும் என்ற நியமம் நூல்களால் வலியுறுத்தப்பட வேண்டியதில்லை. வினையும், வினையால் விளையும் கட்டுக்களுமாக எம்மைத் துயரத்தில் ஆழ்த்தும் இவற்றின் தன்மைகளை நான் தெளிவாக அறியுமாறு பெருமானே தாங்களே விளக்கி அருளுதல் வேண்டும்.

இப்பாடலில் எழுப்பப்படுகின்ற முதலாவது வினா: இருவினை என்பது யாது? அதற்கு விடை மனம் மொழி மெய்களால் செய்யப் படும் செயல்களே வினை எனப்பட்டன. வினைகள் எல்லாம் செய்யப்பட்ட உடனேயே மறைந்து போகின்றன அல்லவா? மேலும் வினைக்குக் கரணமும் அவற்றின் காரியமாகிய வினைகளும் சடப்பொருள்கள். ஆதலால் அவற்றுக்குச் செயல் இல்லை அல்லவா? என்பன அடுத்துத் தொடுக்கப்படும் துணை வினாக்கள், இவற்றுக்கு விடை: வினை என்பது நினைவு சொல் செயல் என்ற மூன்றினாலும் உயிரால் இயற்றப்படுவது. உயிர் விருப்பு வெறுப்புக்களாலே இயற்றுகின்ற இந்த வினைகள் அதனதனுக்கேற்ற பயனைத் தந்தே தீரும். வினை செய்யப்பட்ட உடனே அழிந்து போகிறது எனத் தோன்றினாலும், அச்செயலின் பதிவு மனத்தைப் பற்றிக் கொண்டு கிடத்தலால் உரிய காலம் வரும் போது அவ்வினையின் பயன் இறைவனால் உயிர்களுக்கு ஊட்டப்படுகிறது.

வினையின் பயன்களுக்கு ஏற்ப இயமன் உயிர்களை ஒறுக்கின்றனன் என்பது ஏன்? இறைவன் ஒருவன் உள்ள போது இயமனுக்கு ஒறுத்தல் தொழில் கூறுவானேன்? ஒரே செயலுக்கு இருவர் தேவை இல்லையே? என்பன அடுத்து எழுப்பப்படும் வினாக்களாகும். போற்றிப் பஃறொடையில் "வெற்றிக் கடும் தூதர் வேகத்துடன் வந்து" என்பது தொடங்கி "வல்ல கருணை மறம் போற்றி" என்பது வரையில் கூறப்

பட்ட செய்திகள் இயமனின் ஒறுத்தல் தொழிலும் இறைவனின் ஆணைப் படியே நிகழ்கிறது என்று விளக்கும் பகுதி. அது இந்த வினுக்களுக்கு விடையாகும்.

உள்ளது போகாது; இல்லது வாராது; உள்ளதே உள்ளது எனப் படும் சற்காரிய வாதத்தின்படி பண்டைவினைப் பயனை நுகருங்கால் இதற்கு முன் இல்லாததாகிய புதிய வினைகள் தோன்றும் என்பது பொருந்துமா? என்பது அடுத்த வினு. வினையின் பயன்களை அனுபவிக்கும் பொழுது உயிர்கள் விருப்பு வெறுப்போடு செயல் படுவதால் புதிய வினைகள் தோன்றுகின்றன. இதுவே ஆகாமியம் எனப்பெயர் பெறுவது. இதனைப் 'பிற்செயுறாது அனுபவிப்பது இன்று' என்று சிவஞான சித்தியார் (101) அறிவுறுத்துகிறது. வினையும் வினையினுல் வரும் கட்டும் இவ்வாறே தொடரும் என்பது அருள் நூல்களால் எடுத்துரைக்கப்பட்டது.

**15. மான் அமரும் செங்கை மதில்வெண்ணெய் வாழ்மன்ன!**
**போன்வினை தானே பொருந்துமோ — யான் அதனில்**
**ஆவனே ஆக்காய் அமலனும் நின் அருள்தான்**
**தேவனே! யாதுக்கோ தேர்.**

சிவந்த திருக்கரத்தில் மானை ஏந்திய பெருமானே, மதில் சூழ்ந்த திருவெண்ணெய் நல்லூரில் வாழ்கின்ற மன்னனே, முந்திய பிறவிகளில் நான் செய்த வினைகள் தாமே வந்து என்னைக் கூடுமோ? அல்லது அவற்றை நானே சென்று கூடுவேனே? அல்லது தாங்கள் தாம் என்னையும் வினையையும் கூட்டுவீர்களோ? தாங்கள் நின்மலன் ஆகையினுலே வினை யையும் என்னையும் கூட்டமாட்டீர். அப்படி இருந்தும் வினை என்னேடு கூடுமானுல் உமது அருளால் பயன் உள்ளதோ?

இப்பாடலில் முன்னைப் பிறப்பில் செய்த வினைகள் உயிரை எவ்வாறு வந்து பற்றுகின்றன என்பது பற்றிய வினுக்கள் எழுப்பப் படுகின்றன. வினையே சென்று செய்தவனைப் பற்றும் என்பது சமணர்களின் கொள்கை. வினை அறிவற்றது ஆதலால் அது தானுகச் செய்தவனைச் சென்று பற்றுது என்பது சைவ சித்தாந்தம் கூறும் கொள்கை. வினையை உயிர் சென்று பற்றுமா எனில் உயிருக்கும் அந்த ஆற்றல் இல்லை. இறைவனே வினையின் பயனை வினை செய்தவர்களுக்குத் தப்பாமல் கூட்டுவான். 'அவ்வினையை பேராமல் ஊட்டும் பிரானின் நுகராரேல் யார் தான் அறிந்து அணைப்பார் ஆங்கு' என்பது சிவஞான போதத்தின் எடுத்துக்காட்டு வெண்பா (11). இவ்வாறு கூட்டினுலும் இறைவன் வினைகளில் தோய்வுற்றே நிற்பான் ஆதலால் அவன் அமலன் என்பதற்கு இழுக்கில்லை. அதுபோலவே வினையின் பயனை உயிர்களுக்கு ஊட்டுவதனுல் இறைவன் அருளுக்கும் இழுக்கில்லை. சிவஞான சித்தியாரில் ''எக்கிரமத்தினுலும் இறை செயல் அருளே என்றும்'' (105) என்று இறைவனின் திருவருள் உயர்வு அறிவுறுத்தப்படுகிறது.

16. தேராது உரைப்பன் தெருமரல் உளத்தொடு
பேராது அருளுதல் பெரியோர் கடனே
நின்னைக் கலப்பது என் உண்மை எனில்
நின்னது நேர்மை சொல்மனத்து இன்றே
எழுவகைத் தாதுவின் ஏழ்துளை இரண்டும் 5

பெருமுழைக் குரம்பையில் பெய்து அக்து அடக்கி
நீக்கி என்றனைப் போக்கு அறநிறுத்தி
இச்சை முதலிய எழுப்பி நடத்திடும்
விச்சை சாலவும் வியப்பு அது நிற்க
வாக்கும் மனமும் போக்கு உளதனுவும் 10

சொல்லும் நினைவும் செய்யும் செயலும்
நல்லவும் தீயவும் எல்லாம் அறிந்து
முறைபிற ழாமல் குறைவு நிறைவு இன்றாய்க்
காலமும் தேசமும் மால் அற வகுத்து
நடுவுநின்று அருத்தலின் நடுவன் ஆகுதியே 15

சான்றோர் செய்தி மான்று இருப்பு இன்றே
சாலார் செயலே மால் ஆகுவதே
அத்துவா மெத்தி அடங்கா வினைகளும்
சுத்திசெய் தனையே ஒத்தகன் மத்திடை
நீங்கின என்னை ஊங்கு ஊழ் வினைகளும் 20

ஆங்குஅவை அருத்துவது ஆனர்கொல் அதனால்
கருமம் அருத்தும் கடன் அது அன்றும்
தருமம் புரத்தல் பெருமையது அன்றே
கண்ணினுள் மணியே! கருத்தினுள் கருத்த!
வெண்ணெய் வேந்த! மெய்கண்ட தேவ! 25

இடர்ப்படு குரம்பையுள் இருத்தித்
துடைப்பது இல்லா அருள் தோன்றிடச் சொல்லே.

*என் கண்மணி போன்றவரே, என் கருத்தினுள் கருத்தாக விளங்குபவரே, திருவெண்ணெய்நல்லூரின் வேந்தரே, மெய்கண்ட தேவரே, என் மயக்கத்தின் விளைவாகக் கலங்கிய உள்ளத்தோடும் தங்கள் முன் விண்ணப்பம் செய்கின்றேன். சிறியோர்கள் மயக்கத்தினால் கேட்கின்ற ஐயங்களையும் நீக்கியருளுதல் பெரியோர்கள் கடன். ஆகையினால் எனக்கு விளக்கமளித்து அருளுவீராக.*

*தங்களைக் கூடி அதனால் விளைகின்ற பேரின்பத்தினை நுகர்வது எனது சிற்றறிவு எனின், தங்களது பெருமை என் சொல்லுக்கும் மனத்துக்கும் எட்டாதது அன்றோ?*

நரம்பு எலும்பு மூளை தசை தோல் குருதி விந்து ஆகிய தாதுக்கள் ஏழும் இரண்டு கண்கள், வாய், இரண்டு நாசிகள், இரண்டு காதுகள், கருவாய், எருவாய் என்னும் ஒன்பது துளைகளும் கூடிய இந்த உடம்பாகிய குரம்பையிலே உயிராகிய என்னை விட்டு வைத்தும், என் வினைக்கு ஏற்ப உரிய காலம் வரை அதனைக் காத்தும், கால எல்லையில் உயிரை அவ்வுடம்பாகிய சிறையிலிருந்து விடுவித்தும் இச்சை செயல் அறிவு ஆகியவற்றை என்னிடத்திலே தோன்றச் செய்து என்னையும் இயக்கி நிற்கின்ற தங்களுடைய பேராற்றல் மிகவும் வியக்கத்தக்கது.

என் மனம் மொழி மெய்களால் நான் நினைப்பதும் சொல்லுவதும் செய்வதும் ஆகிய நல்லனவும் தீயனவும் ஆகிய எல்லாவற்றையும் தங்கள் பேராற்றலால் அறிந்து அவ்வினைப் பயன்களைப் முறை பிறழாமலும் குறைவும் கூடுதலும் இல்லாமலும் எனக்கு ஊட்டி வருகின்றீர். வினைப் பயன்களை நான் நுகர்வதற்குரிய காலம், இடம் முதலிய சூழ்நிலைகளையும் நடுவு நிலை பிறழாமல் தாங்களே வருத்துத் தருகிறீர்கள். எனவே நடுநிலையாளராகவும் விளங்குகின்றீர்.

சான்றோர்கள் செய்யும் செயல்கள் யாவும் மயக்கத்துக்கு இடம் தருவனவாக இருக்க மாட்டா. சான்றாண்மை அற்றவர்கள் செயலே காரண காரியம் இன்றியும் முறை மாறுபட்டும் காணப்படும்.

சான்றோர் ஆகிய நீர் எனக்கு ஞான ஆசிரியராக எழுந்தருளித் தீக்கை அளித்தருளிய போது, மந்திரம் சொல் எழுத்து உலகு தத்துவம் கலை என்று கூறப்படும் வாயில்கள் ஆறினும் நிரம்பித் ததும்பிய வினைகளைத் தூய்மை செய்து போக்கியருளினீர். அந்தச் சூழ்நிலையில் எனக்கு இருவினை ஒப்பும் வாய்க்கப் பெற்றது எனின் தங்களால் ஒழிக்கப்பட்ட வினையாது? தாங்கள் தீக்கை அளித்த போது வினைகள் எல்லாம் என்னை விட்டு அகன்றன அவற்றின் பயன்கள் என்னவாகும்? மேலும் அவற்றின் பயனை யார் நுகர்வார்? அவ்வினைகளைச் செய்தவன் நானே ஆதலால் அவற்றின் பயனை நானே நுகர்தல் வேண்டும் எனின் தங்கள் பேரருளால் தூய்மை பெற்ற நான் மீளவும் வினைப் பயனை நுகர்வது என்பது தங்கள் பெருமைக்கு இழுக்காகும். அதுவுமன்றி அறத்தைக் காக்கின்ற தங்களுக்கு அது தகுதி யன்றாம். வினை ஒழிந்த பின்னும் துன்பம் தருகின்ற இவ் உடலாகிய கூட்டில் இருத்தி அதன் வினையை நீக்குவதற்கு என்ன காரணம் என்பதையும் அடியேனுக்கு உரைத்தருளுவீராக.

ஒப்பற்றவனாகிய இறைவன் சொல்லுக்கும் மனத்துக்கும் எட்டாதவன் ஆதலால் சிற்றறிவுடைய உயிர் அவனைக் கலந்து அவனது எல்லையில்லாப் பேரின்பத்தை எவ்வாறு அனுபவிக்க முடியும்? என்பது முதல் வினா. உடலோடு கூடி இருக்கும் உயிர் பாசப் பிணிப்புக்களால்

கட்டுண்டு இருப்பது ஆதலால் தன்னோடு எக்காலத்தும் பொருந்தி இருக்கிற இறைவனை அதனால் உணர முடியவில்லை என்பது உண்மையே. ஆயினும் பாசப் பிணிப்புக்கள் நீங்கிய நிலையில் உயிர் இறைவனை உணர்ந்து இன்புறும் என்பது இவ்வினாவிற்கு உரிய விடை.

இரண்டாவது வினா : இறைவன் உயிரை ஏழுவகைத் தாதுக்களும் ஒன்பது வாயில்களும் உடைய துயரத்திற்கு நிலைக்களமான உடலில் புகச் செய்து, உயிரினுடைய அறிவு விழைவு ஆற்றல்களைத் தூண்டி மனம் மொழி மெய்களான மூன்றினாலும் நல்லனவும் தீயனவும் ஆன வினைகளைச் செய்விப்பது ஏன்? என்பதாகும். இதற்குரிய விடை: ஆணவ மலத்தால் முற்றிலும் மறைக்கப்பட்டு அறிவும் செயலு மற்று இருட்டறையில் கிடக்கும் பிறவிக் குருடனைப்போல இருந்த உயிரைப் படிமுறையிலே முன்னேற்றுவதற்காகத் தத்துவக் கூட்டங்களை உயிரோடு இறைவன் பொருத்துகிறான். இது குருடனுக்கு ஊன்று கோல் கொடுத்து உதவுவது போன்றது. இந்த நிலையில் உயிர் தத்துவக் கூட்டங்களே தான் என மயங்கி அதனால் இருவினைகளையும் ஈட்டு கின்றது அதன் பயனையும் நுகர்கின்றது என்பது இவ்வினாவிற்குரிய விடையாகும்.

நடுவு நிலைமையும் சான்றாண்மையும் உடைய இறைவன் உயிரின் பக்குவ நிலையை அறிந்து ஞான ஆசிரியனாக எழுந்தருளி வந்து அத்துவாக்களைத் தூய்மை செய்து வினைகளைப் போக்கியருளுவான் என்று கூறப்படுகின்றது. அப்போது போக்கப்படுகிற வினைகள் யாவை? என்பது அடுத்த வினா. வினைகள் சஞ்சிதம் பிராரத்தம் ஆகாமியம் என்று முத்திறப்படும் இவற்றுள் சஞ்சிதம் என்பது பலபிறவிகளில் ஈட்டப் பட்டு நுகர்வதற்காக எஞ்சிய பழ வினை. பிராரத்தம் என்பது இப் பிறவியில் நுகர்வதற்காக இறைவனால் கூட்டப்பெற்ற நுகர்வினை. ஆகாமியம் என்பது இந்தப் பிறவியில் வினைகளின் பயன்களை உயிர்கள் நுகரும் போது விருப்பு வெறுப்புக்களால் ஈட்டிக்கொள்ளும் ஏறுவினை. ஞான ஆசிரியன் தீக்கை செய்யும் காலத்துப் பண்டு செய்த பழ வினையைத் தன் அருளால் துடைத்து எறிவான். ஏறுவினை வளராத வண்ணம் தடுத்து அருள்வான். பிராரத்த வினையாகிய ஏன்றவினை மட்டிலும் உயிர்களால் நுகர்ந்து கழிக்கப்படும் எனவே இறைவனது அருளுக்கு இழுக்கில்லை என்பது இவ்வினாவிற்குரிய விடையாகும்.

தீக்கை செய்யும் காலத்து வினைகளை நீக்கிய பின்னும் அத்தகைய உயிர்களை மேலும் உலகத்தில் வாழச் செய்வதும் வினைகளை நுகரச் செய்வதும் எதற்காக? என்பது அடுத்து எழுப்பப்படும் வினா. பிராரத்த வினையை நுகர்ந்து கழிக்கவே அவ்வுயிர்களை உலகில் வாழுமாறு இறைவன் பணிக்கிறான். அத்தகைய ஞானிகளை இன்பத்துன்பங்கள் பற்றமாட்டா. பிராரத்தவினை உடலூழாய்க் கழியும் என்பர்.

அத்தகைய ஞானிகளின் செயல்கள் எல்லாம் இறைவன் செயலே. அவர்களுக்குச் செய்தது எதுவும் சிவபெருமானுக்கே செய்தது ஆகும். இவ்வாறு சிவபெருமானே அவர்களோடு இயைந்து நின்று ஏன்று கொள்வதால் அந்த ஞானியருக்கு நாம் செய்யும் பூசனையும் வணக்கமும் இறைவனுக்கே உரியனவாகும் என்பது விடையாகும்.

17. சொல் தொழும்பு கொள்ள நீ சூழ்ந்ததுவும் நின்செயல்கள்
மற்றவர்கள் நின் நோக்கில் மாய்ந்த உயிர்க் குற்றம்
ஒளித்தி யாங்கு, ஐய! உயர் வெண்ணெய் நல்லூர்க்
குளித்தமதுக் கொன்றை ஏம்கோ!

உயர்வு மிக்க திருவெண்ணெய் நல்லூரில் தேன் பிலிற்றும் கொன்றை மாலையை அணிந்து எழுந்தருளியுள்ள மெய்கண்ட தேவரே எல்லா உயிர்களும் தங்களுக்கு அடிமையாக விளங்குவனவே. ஆயினும் தாங்கள் தங்கள் திருவடியை தங்களுக்கே உவந்து அடிமை செய்யும் சிலருக்கே வழங்குகின்றீர். அவ்வாறு தங்கள் திருவருள் பெற்ற உயிர்கள் தம்முனைப்புக் கெட்டுத் தமக்கென ஒரு செயலின்றி ஒழுகுவதையும் காண்கிறோம். மற்றவர்களுக்கோ தாங்கள் அகப்படாது ஒளித்துக் கொள்ளுகிறீர். இவ்வாறு சிலருக்கு மறைந்து நின்றும் சிலருக்கு வெளிப்பட்டு அருள் செய்தும் வருவதற்கான தகைமையை எனக்கு உணர்த்தியருள்வீராக.

உலகத்துப் பொருள்கள் யாவும் சிவபெருமானுக்கு உடைமை. உலகத்தின் உயிர்கள் யாவும் சிவபெருமானுக்கே அடிமைகள். ஆயினும் சிவபெருமானை வழிபட்டு அன்பின் முதிர்ச்சியினாலே, சிவன் செயலன்றி வேறு செயல் இல்லை என உணர்தல் அரிதே. தன் முனைப்பை இழந்தவர் களுக்குத் தயிரின் நெய் போல எளிதில் வெளிப்பட்டுத் தோன்றுவான். அவ்வாறு எல்லாம் அறத் தன்னை இழக்காத ஆன்மாக்கள் கட்டு நிலையிலேயே இருப்பன. ஆதலால் அவர்களுக்குப் பாலில் கலந்த நெய் போல வெளிப்படாமல் நின்று அவர்களைச் செயல் படுத்துவான்.

முதல் வகையினருக்குத் தயிரின் நெய் போல இறைவன் விளங்குவான் என்பதைச் சிவஞான போதம் பன்னிரண்டாம் சூத்திரத்தில் எடுத்துக்காட்டுச் செய்யுளில்,

"நேசத்தர் தம்பால் நிகழும் ததி நெய் போல்
பாசத்தார்க்கு இன்றாம்பதி" [77]

என்று கூறப்படுவதிலிருந்து அறியலாம். இரண்டாம் வகையினர்க்குப் பாலில் நெய் போல் இறைவன் மறைந்திருப்பான் என்பதைத் திருநாவுக்கரசர் தேவாரத்தில் "விறகில் தீயினன் பாலில் படுநெய் போல் மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்" என்று அருளிச் செய்த திருவாக்கால் அறியலாம்.

18\. கோலம் கொண்ட ஆறு உணராதே
ஞாலம் காவலன் யான்எனக் கொளீஇப்
பொய்யை மெய்யெனப் புகன்று வையத்து
ஓடாப் பூட்கை நாடி நாடா
என்னுள் கரந்து என் பின்வந்து அருளி 5

என்னையும் தன்னையும் அறிவின்று இயற்றி
என்னது யான்எனும் அகந்தையும் கண்டு
யாவயின் யாவையும் யாங்கணும் சென்று
புக்குழிப் புக்குப் பெயர்த்துழிப் பெயர்ந்து
மிக்க போகம் விதியால் விளைத்திட்டு 10

என்பணி ஆளாய் எனைப்பிரி யாதே
ஓடி மீள்குன ஆடல் பார்த்திட்டு
என்வழி நின்றனன் எந்தை அன்றே
அருள் மிக உடைமையில் அருள்துறை வந்து
பொருள்மிக அருள்தலும் பொய்ப்பகை ஆதலும் 15

கை கண்டு கொள்ளெனக் கடல்உலகு அறிய
மெய்கண்ட தேவன் எனப்பெயர் விரீஇத்
தன்னுள் கரந்து தான்முன் ஆகித்
தன்னதும் தானுமாய் என்னை இன்றுக்கித்
தன்னையும் என்னையும் தந்து தனது 20

செய்யாமையும் என்செயல் இன்மையும்
எம்மான் காட்டி எய்தல்
அம்மா எனக்கே அதிசயம் தருமே.

பெருமானே, நான் எடுத்துள்ள இந்தப் பிறவி துன்பத்திற்கே குடியிருப்பாக அமைந்த உடலோடும் கூடியது. ஆயினும் இதனை உள்ளவாறு உணராத நான் இந்த உலகத்துக்கே தலைவன் என்று எண்ணித் தருக்கித் திரிகிறேன். பொய்யான உடலையும் உலகத்துப் பொருள்களையும் மெய் என்று நினைந்து உலக இன்பத்தில் உழல் கின்றேன். என்னை இயக்கும் தலைவன் ஒருவன் உளன் என்று உணராது அலைகின்றேன்.

இவ்இயல்பு உள்ள எனக்குள்ளே தாங்கள் புகுந்து மறைந்து நிற்கின்றீர். என் செயல்களுக்கு எல்லாம் துணை நின்று என்னை விட்டுப் பிரியாமல் உடனாக நிற்கின்றீர். என்னையும் உணராமல் எனக்கு ஒப்பற்ற தலைவனாகிய தங்களையும் உணராமல் யான் என்னும் அகப்பற்றும் என்னுடையது என்னும் புறப்பற்றும் கொண்டு நான் செருக்கித் திரிகின்றேன் இதனால் எனக்கு உயர் திணை, அஃறிணை முதலிய பல்வேறு பிறவிகளும் பல்வேறு உலகங்களிலே எல்லையற்று வாய்க்கின்றன.

இவ்வாறு நான் புகுகின்ற இடத்து என்னுடன் புகுந்தும் பெயர்கின்ற இடத்து என்னுடன் பெயர்ந்தும் என் வினைக்கேற்ற நுகர்ச்சிகளை உரிய முறையில் எனக்கு ஊட்டி வருகிறீர். இதனைக் காணும் போது தங்கள் முதன்மையை விட்டுக் கொடுத்து என் பணியாளனைப் போல் என்னைப் பிரியாதிருந்தும், 'விரும்பிய வழியெல்லாம் ஓடித் திரும்புக' என்று என்னுடைய ஆடலுக்கெல்லாம் ஒத்து இருந்து என் வழியிலேயே நின்ற தலைவராகத் தாங்கள் திகழ்கின்றீர்.

என்பால் கொண்ட பேரன்பினால் திருவெண்ணெய் நல்லூர் அருட்டுறையுள் திருமேனி கொண்டு மெய்கண்ட தேவன் என்னும் திருப் பெயர் தாங்கி, உண்மைப் பொருளாகிய சிவானந்தப் பெரும் பொருளை எனக்கு வழங்கி அருளினீர். அதன் பயனாக நான் பற்றிக்கிடந்த உலகியல் பொருள்கள் யாவும் பொய் எனக்காட்டி அவை எனக்குப் பகையாகுமாறும் எனக்கு உணர்த்தி அவற்றை நானே கண்டு விடப் பிடிக்குமாறு உணர்த்தியருளினீர்.

தங்களது பேரறிவினுள்ளே என்னுடைய சிற்றறிவினை அடக்கிக் கொண்டு, தங்கள் செயலே மேலிடும் வண்ணம் என்னை ஆட்கொண்டு அருளினீர். தங்களுடைய அருளும் தாங்களுமாய் என்னுடைய தற் போதத்தை இல்லாததாக்கித் தங்களது தனித் தன்மையும் கெடாமல் நான் என ஒரு பொருள் உண்டு என்னும் நிலைமையும் கெடாமல் எனக்கு அறிவுறுத்தி அருளினீர். அவ்வாறே தாங்கள் எதனையும் சுட்டியறியாமல் எல்லாவற்றையும் இயக்கி நின்று, அதனால் விகாரப்படாது விளங்குகின்ற முறைமையினையும், எனக்கென்று ஒரு செயல் இன்மை யினையும் நான் உணருமாறு செய்தருளினீர். கட்டு நிலையில் ஒளித்து நின்றும், வீட்டு நிலையில் வெளிப்பட்டுத் தோன்றியும் தாங்கள் செய் கின்ற உதவிகளை உணரும் போது எனக்கு எல்லையற்ற வியப்புத் தோன்றுகிறது.

இதுவரை வினாக்கள் எழுப்பி, விடைகளை உய்த்து உணர வைத்துத் தம் நூலை அமைத்துக் கொண்ட ஆசிரியர் அருள் நந்தி சிவம், இந்தப் பாடலிலும் இதன் பின் வரும் பாடலிலும் சிவபெருமான் தனது பெருங்கருணையினால் உயிருக்குச் செய்துவரும் உதவிகளை விதந்து பாராட்டுகிறார்.

**19.** **தருமா தருமத் தலைநின்று ஆழ்வேனைக்**
**கருமா கடல் விடம் உண் கண்டப் பெருமான்**
**திருவெண்ணெய் நல்லூர்ச் சுவேத வனத்தான்**
**உரு என்ன வந்து எடுத்தான் உற்று.**

பெருங்கடலிலே தோன்றிய கரிய நிறம் கொண்ட நஞ்சினைத் தன்னுடைய கழுத்திலே நிறுத்திக் கொண்ட சிவபெருமான் திருவெண்ணெய் நல்லூரிலே தோன்றியருளிச் சுவேதவனப் பெருமான் என்னும் பிள்ளைத் திருநாமம் தாங்கி என்னைப் போன்ற உருவத்தைக் கைக்கொண்டு, அறம் மறம் என்னும் இரு வினைகளையும் செய்து பிறவிக் கடலிலே விழுந்து அழுந்துகின்ற என்னைத் தனது பேரருளால் எடுத்து ஆட்கொண்டு அருளினன்.

தீவினையைப் போலவே நல்வினையும் பிறப்புட்படுவத்துவதால் 'தரும அதருமத் தலை நின்று ஆழ்வேன்' என்று இரு வினைகளையும் ஒருங்கு கூறினர். எடுத்து என்பதன் மூலமாகப் பிறவிக் கடலில் இருந்து மீட்டுத் தூக்கி முத்திக் கரை சேர்த்ததை ஒரே சொல்லால் உணர்த்தினர். சிவஞான சித்தியாரில் பரபக்கத்துள் இவ் ஆசிரியர் 'என்னை இப்பவத்தில் சேரா வகை எடுத்து, என் சித்தத்தே, தன்னை வைத்து அருளினலே தாளிணை தலைமேல் சூட்டும் மின்னமர் பொழில் சூழ் வெண்ணை மேவி வாழ் மெய் கண்டான்' என்று அருளியதும் இக் கருத்தே பற்றி என்க.

**20.** உற்றவர் பெற்றவர் அற்றவர் முற்றும்
அற்றவர்க்கு அற்றவன் அல்லவர்க்கு அல்லவன்
அந்தம் ஆதி இல்லவன் வத்து
குரக்கு மனத்துக் கொடியேன் பரக்கும்
பரப்பைக் குவித்து நிறுத்திப் பிடித்திட்டு 5

இருள் வெளி ஆகும் மருளினை அறுத்து
வந்து புகுதலும் சென்று நீங்கலும்
இன்றி ஒன்றாய் நின்ற அந் நிலையில்
ஒன்று ஆகாமல் இரண்டா காமல்
ஒன்றும் இரண்டும் இன்றா காமல் 10

தன்னது பெருமை தாக்கான் ஆயினும்
என்னது பெருமை எல்லாம் எய்தித்
தன்னை எனக்குத் தருவதை அன்றியும்
என்னையும் எனக்கே தந்து தன்னது
பேர் ஆனந்தப் பெரும் கடல் அதனுள் 15

ஆரா இன்பம் அளித்துத் தீரா
உள்ளும் புறம்பும் ஒழிவுஇன்றி நின்ற
வள்ளன்மை காட்டி மலர் அடி அருளிய
மன்னன் எங்கோன் வார்புனல் பெண்ணை
வெண்ணெய் காவலன் மெய் கண்ட தேவன் 20

**அண்ணல் அருள் ஆலயத்தன் நண்ணிய**
**மலம்முத லாயின மாய்க்கும்**
**உலக உயிர்க்கு எல்லாம் ஒரு கண்ணே.**

*உற்ருர், பெற்றவர், உறவினர் போன்ற தொடர்புகள் யாவற்றை யும் விட்டு நீங்கியவர்க்கு அவர்களோடு வேற்றுமை இன்றிக் கலந்து நிற்பவன். அவ்வாறு நீங்காதவர்களுக்கு எட்டாதவனுய்த் தனித்து நிற்பவன். தனக்கு ஈறும் தோற்றமும் இல்லாதவன். இத்தகைய தன்மை களை உடைய இறைவன் குரு வடிவம் தாங்கி எழுந்தருளி, ஒன்றைவிட்டு ஒன்று பற்றும் குரங்கினைப் போல அலைகின்ற மனத்தை உடைய என்னைப் பரபரத்துத் திரிய விடாமல் ஒரு முகமாக்கித் தனது திருவடியில் திளைக்குமாறு அருளினுன். உலகியற் பொருள்களில் என் மனம் ஈடு படாமல், இருள் நிலையையும் மருள் நிலையையும் அறுத்துத் தீர்த்தான்.*

*தோற்றமில் காலம் தொட்டே அவன் என்னேடு உடனுக நிற் கிருன் ஆதலால் அவன் வந்து என் உள்ளத்தில் புகவும் இல்லை. நான் சென்று அவனிடத்தில் கலத்தலும் இல்லை. இந்த நிலையில் அவன் என் னேடு கலந்து நிற்பதனுல் என்னுடன் அவன் ஒன்ருகி விடவும் இல்லை. அல்லது என்னை விட்டுப் பிரிந்து இரண்டாகி விடவும் இல்லை. ஒன்றும் இரண்டும் இல்லாத நிலையும் எய்தி விடவில்லை. தங்களுக்கு உண்டான முற்றுணர்வும் ஐந்தொழிலும் எனக்கு இல்லையேனும். எனது அறிவு விழைவு செயல்களைத் தம் திருவருள் வெளிக்குள் அடக்கித் தமது பேரின் பப் பெரு வாழ்வை எனக்கு வழங்கி அதனுல் எழுகின்ற உவட்டாத இன் பத்தை எனக்குத் தந்து ஒரு காலத்திலும் என்னை விட்டு நீங்காத அகமும் புறமும் நிறைந்த அறிவைத் தமது வள்ளன்மையால் வழங்கினுர்.*

*வெள்ளம் பெருகும் பெண்ணை யாற்றங் கரையில் உள்ள திரு வெண்ணெய் நல்லூரில் எழுந்தருளி இருந்து மெய்கண்ட தேவன் என்ற திருப்பெயர் தாங்கி எங்கள் அரசனுகவும் தலைவனுகவும் அருட்டுறையிலே வீற்றிருந்து உயிரின் பாசப் பிணிப்பை மாய்க்கும் கண் போன்றவரே உம்மைப் போற்றுகிறேன்.*

*இந்தப் பாடலில் அத்துவிதத்தைப் பற்றிய சைவ சித்தாந்தத்தின் கொள்கை இரண்டு வரிகளில் நூற்பா வடிவில் தரப்பட்டுள்ளது. 'ஒன்ரு காமல் இரண்டாகாமல் ஒன்றும் இரண்டும் இன்று ஆகாமல்' என்பன அந்த வரிகள். இறை உயிர் தளை என்ற முப்பொருள்களும் என்றென்றும் உள்ள பொருள்களே. ஆயினும் தளைகள் இறைவனை அறியும் அறிவற்றவை. இறைவனுக்கு உலகியல் பொருள்களால் ஆவது ஒன்று மில்லை. இயல்பாகவே பாசங்களில் நீங்கிய இறைவனைத் தளைகள் பற்றமாட்டா. உயிர்களே அன்னியம் இன்மையின் அரன் கழல் சென்று*

அடையும் தகுதி உடையன. வீட்டு நிலையில் இறைவனும் உயிர்களும் கொண்டிருக்கும் தொடர்பு அத்துவிதம் என்ற சொல்லால் குறிக்கப் படும். அத்துவித நிலையைச் சைவ சித்தாந்த நோக்கில் எடுத்துரைப்பன இவ் இரண்டு வரிகள்.

முத்தி நிலையில் உயிர் தன் தனித் தன்மையை இழந்து இறைவனோடு கலந்து விடும் என்பது அபேத வாதம் எனப்படும் ஒன்றாகாமல் என்ற சொற்கள் அபேதக் கொள்கையை மறுப்பன. வீட்டு நிலையிலும் உயிர்கள் தனித்தே நிற்கும் இறைவனும் தனித்தே நிற்பான். ஏனெனில் இறைவனும் உயிர்களும் முறையே ஒளியும் இருளும் போல என்பது பேத வாதம் என்ற கொள்கை. இந்தக் கொள்கையை மறுப்பது இரண்டாகாமல் என்ற சொற்கள்.

ஒன்றும் இரண்டும் இன்றாகாமல் என்ற சொற்கள் சைவ சித்தாந்தத்திற்கு மாறுபட்டு மற்றைச் சமயத்தவர் கூறும் பல்வேறு பட்ட கொள்கைகளையும் மறுக்கின்ற பகுதியாகும். இக்கொள்கைகளின் படி இறைவனும் உயிரும் ஆகிய இரண்டில் ஒன்றோ அல்லது இரண்டுமோ இல்லாமல் போகும் என்பதை மறுத்து ஒன்றும் இன்றாகாமல், இரண்டும் இன்றாகாமல் என்று பொருள் கொள்ளுமாறு ஆசிரியர் அருள் நந்தி சிவம் மிகச் சுருக்கமாக விளங்க வைத்தார். இதனால் உயிரும் இறைவனும் முத்திநிலையில் தனித்த பொருள்களாகவே இருப்பினும் வேறுபட்டு நில்லாமல் ஒன்றாகவே நிற்கும் என்பதனை வலியுறுத்தினார். உயிர் இறைவன் திருவடிக் கீழ் அடங்கிச் சிவானந்த ஞான வடிவாகி என்றும் மாறாத பேரின்பத்தை நுகர்ந்து கொண்டிருக்கும் என்பது சைவ சித்தாந்தம் எடுத்துரைக்கும் முத்தி நிலையாகும்.

உ

சிவமயம்

# வினா வெண்பா

## தோற்றுவாய்

சைவ சந்தான குரவர்களுள் நான்காமவராகிய உமாபதி சிவம் அருளிச் செய்த நூல்களுள் ஒன்று வினா வெண்பா என்னும் இந்த நூல். 'உந்தி களிறு உயர்போதம்' என்று தொடங்கும் வெண்பா பதினான்கு மெய்கண்ட சாத்திரங்களையும் குறிப்பிடுகிறது. ஆசிரியர் உமாபதி சிவத்தின் சிவப்பிரகாசம், திருவருட்பயன் ஆகிய நூல்களின் பெயர்களை அடுத்து வினா வெண்பா அதனுள் குறிப்பிடப்படுகிறது. எனவே மெய்கண்ட நூல்களுள் இந்நூல் ஒன்பதாவது இடத்தைப் பெறுகிறது எனலாம்.

இந்நூல் மொத்தம் பதின்மூன்று வெண்பாக்களால் அமைந்துள்ளது. இவற்றுள் முதல் பன்னிரண்டு வெண்பாக்களும் உமாபதி சிவனார் தமது ஆசிரியராகிய மறைஞான சம்பந்தரிடம் கேட்கும் வினாக்களாக அமைந்துள்ளன. பதின்மூன்றாவது வெண்பா நூற்பயனைக் கூறுவதாக அமைந்துள்ளது.

இந்நூலில் கேட்கப்படும் வினாக்கள் யாவும் சைவ சித்தாந்த மெய்ப்பொருள் இயலில் எழுகின்ற நுட்பமான ஐயங்களைத் தெரிவிப்பதாக உள்ளன. எழுப்பப்பட்ட வினாக்களுக்கு விடைகள் தரப்படவில்லை. சைவ சித்தாந்தப் பயிற்சி உடையோர் இவ்வினாக்களுக்கு விடைகளை நுணுகி ஆராய்ந்து அறிந்து கொள்ள இயலும். அவ்வாறு அறிவார்க்குச் சித்தாந்த சாத்திரங்களில் தெளிவு உண்டாகும் எனக் கருதி, ஆசிரியர் வினாக்களைத் தொடுப்பதோடு அமைந்தார் எனக் கொள்ளலாம்.

மறைஞானசம்பந்தர் ஒன்பது பாடல்களில் மருதூரோடு தொடர்புபடுத்தியும் மூன்று பாடல்களில் கடந்தையோடு தொடர்பு படுத்தியும் கூறப்படுகிறார். கடந்தை என்பது திருப்பெண்ணாகடம். மறைஞான சம்பந்தர், திருப்பெண்ணாகடத்தில் தோன்றி மருதூரில் சில காலம் வாழ்ந்து அதன் பின்னர்த் தில்லையை அடுத்த திருக்களாஞ்சேரி என்னுமிடத்தில் வாழ்ந்திருந்தார் என்பது அவருடைய வரலாற்றால் தெரியவருகின்றது. மறைஞான சம்பந்தர் திருக்களாஞ்சேரியில் வாழ்ந்த காலத்தில் ஆசிரியர் உமாபதி சிவம் அவருக்கு மாணவராயினார் என்பர்.

1 நீடும் ஒளியும் நிறைஇருளும் ஓர் இடத்துக்
கூடல் அரிது கொடுவினையேன் — பாடு இதன்முன்
ஒன்றவார் சோலை உயர் மருதச் சம்பந்தா!
நின்றவாறு எவ்வாறு நீ.

*பரந்த பேரொளியும், நிறைந்த இருளும் ஒரே இடத்தில் கூட இயலாது. கொடுவினையேன் உன்னை அறிந்து கொள்வதற்கு முன்பு, சோலைகள் சூழ்ந்த மருத நகர் வாழ் சம்பந்த மாமுனிவனே தாங்கள் அடியேனிடத்துப் பொருந்த நின்றீர் என்பது எவ்வாறு?*

*இருள் உள்ள இடத்திலே ஒளி இருக்காது. ஒளி உள்ள இடத்திலே இருள் இருக்காது. கொடிய வினைகளைச் செய்து அதன் பயனாகப் பிறப்பு இறப்புக்களில் பட்டு உழலும் என்னிடத்தில் இருள் மலமாகிய ஆணவ மலம் சகசமாய்த் தோற்றமில் காலம் தொட்டு, என் அறிவினை மறைத்து நிற்கிறது என்பது உண்மையானால் நீயும் உயிருக்கு உயிராக என்னோடு ஒரு பொழுதும் நீங்காது பொருந்தியிருக்கிறாய் என்று கூறுவது எப்படி உண்மையாய் இருக்க முடியும். இது எவ்வாறு பொருந்தும் என்பது வினா.*

*புரை விழுந்து ஒளி மழுங்கிய கண்ணும், அது இன்றி ஒளி விளங்கிய கண்ணும் கதிரவன் ஒளியிலே இருக்கும் போது ஒருபடித்தாய்க் காணும் ஆற்றல் பெறுவதில்லை. படலத்தால் மறைக்கப்பட்ட கண் காணும் ஆற்றல் அற்றது. ஒளி விளங்கும் கண்ணே காணும் ஆற்றல் உடையது. அவ்வாறே இறைவன் கட்டு நிலையிலும் வீட்டு நிலையிலும் உள்ளவரிடத்து அத்துவிதமாய்க் கலந்து ஒரு தன்மையனாய் நிற்பினும் கட்டு நிலையில் உள்ளார்க்குப் பாசஞானம் ஆகியும் வீட்டு நிலையில் உள்ளவர்க்குத் திருவருளாகவும் தோன்றுவன்.*

*சிவதருமோத்தரத்துள், மற்றொரு உவமையின் மூலம் இந்த வினாவிற்கு விடை கூறப்படுகிறது பசிய மரத்தில் நீர்ப்பசை உள்ளது எனவே தட்பமும் உள்ளது. பசு மரம் காய்ந்து நீர்ப்பசை அற்றுப் போன போதோ அல்லது காடே பற்றி எரியும் போது பசு மரத்திலும் தீப்பற்றிக் கொண்டாலோ அதே மரத்தில் இருந்து வெப்பமும் புறப்படுவதைக் காண்கிறோம். பசுமரமாக இருக்கும் போதே வெப்பமும் அதனிடத்து முன்பே இருந்தது என்பது புலப்படுகிறது எனவே உயிர் ஆணவ மலத்தோடு பொருந்தியிருக்கும் போதே பரம்பொருளும் அதனோடு ஒன்றியிருக்கத் தடையில்லை.*

2 இருளில் ஒளி புரையும் எய்தும் கலாதி
மருளின் நிலை அருளும் மானும் — கருவி இவை
நீங்கில் இருளாம் நிறைமருதச் சம்பந்தா!
ஈங்கு உன் அருளால் என்பெற.

என்னிடத்தில் ஆணவம் மேலிட்டு நிற்கும் போது ஞான ஒளி எனக்குக் கிட்டுவதில்லை. ஆன்மாவாகிய நான் கலை முதலியவற்றைப் பொருந்துகிற காலத்து. என் அறிவு உலகியல் பொருளின் மீதே படிந்து மயங்குகிறது. இந்த மயக்கத்தைத் தவிர்ப்பதற்குக் கருவி கரணங்களை விட்டு நீங்கலாம் என்றால் மீண்டும் நான் இருள் நிறைந்த கேவல நிலையைச் சென்றடைவேன். இப்படிப்பட்ட நிலையில். வளம் நிறைந்த மருதூரில் வாழ்கின்ற சம்பந்த மாமுனிவரே உமது திருவருளால் நான் பெறத்தக்கது யாது?

உயிர் கேவலம் சகலம் சுத்தம் என்று மூன்று நிலைகளில் விளங்கும். கேவல நிலை என்பது தோற்றமில் காலம் தொட்டு ஆணவ மலத்தோடும் தொடர்புற்று இருந்தமையால் உயிர் அறியாமையாகவே நிற்கின்ற நிலை. இதிலிருந்து உயிரை உய்விப்பதற்காகவும் அதன் அறிவை விளக்குவதற்காகவும் இறைவன் உயிருடன் கருவி கரணங்களைக் கூட்டுகிறான். அப்போது உயிரின் அறிவு சிறிதே விளக்கம் பெறுகின்றது. இந்த நிலை சகல நிலை எனப்படும். இதிலும் கூட உயிர் உலகியல் வயப்பட்டு மயங்குகிறதே தவிரச் சிவஞானத்தைப் பெறுவதில்லை. கருவிகள்தாமே மயக்கத்தைத் தருகின்றன என்று கருதிக் கருவிகளை விட்டு நீங்க முயன்றாலோ மீண்டும் கேவல நிலையே வந்து சேரும். பின் எப்படித்தான் உன் திருவருளை நான் பெறுவது? இது வினா.

இதற்கான விடை இறைவன் திருவருள் கேவல நிலையிலும் உயிர்க்குப் பயன்படுவதில்லை சகல நிலையிலும் உயிருக்குப் பயன் தருவதில்லை முன்னைப் பிறவிகளிலே உயிர் ஈட்டிய தவத்தினாலே, இறைவன் குரு வடிவாக எழுந்தருளி வந்து தன் திருவடியை உயிர்க்கு வழங்கும் போது இறைவனின் திருவருளால் உயிர் பயன் பெறும் என்பதாகும் இக்கருத்து சிவப்பிரகாசத்தில் கீழ்க்காணும் பாடலில் விளக்கப் பட்டுள்ளது.

> ''காட்டிடும் கரணம் ஒன்றும் இல்லையேல் காண் ஒணாதாம்
> நாட்டிய இவற்றால் ஞானம் நணுகவும் ஒண்ணா முன்னம்
> ஈட்டிய தவத்தினாலே இறை அருள் உருவாய் வந்து
> கூட்டிடும் இவற்றை நீக்கிக்குரை கழல் குறுகும் ஆறே''. (68)

கேவல நிலையிலும், சகல நிலையிலும் உயிருக்குப் புலப்படாமல் மறைந்து நின்று அருளுகின்ற சிவபெருமான் சுத்த நிலையில் உயிருக்கு வெளிப்பட்டு நின்று அருள் பாலிப்பான்.

**3 புல்அறிவு நல்உணர்வது ஆகா பொதுஞானம்**
**அல்லது இலது உள்ளது எனில் அன்னியமாம் – தொல்லை இருள்**
**ஊனம் மலையாவாறு உயர்மருதச் சம்பந்தா!**
**ஞானமலை ஆவாய்! நவில்.**

ஒப்பற்ற மருத நகர்ச் சம்பந்தரே, ஞான மலையாய் விளங்கு பவரே, என்னைத் தொன்மையான ஆணவ மலம் துன்புறுத்தாத வண்ணம் எனக்கு உணர்த்துவீராக. ஆன்மாவாகிய என்னிடத்திலே உள்ள அறிவு சிற்றறிவு அது பேரறிவு ஆகாது. நான் கருவிகளின் வழியாகப் பெறுகின்ற அறிவும் வரையறைக்கு உட்பட்ட ஏகதேச அறிவு என்றே கூறப்படும். எனவே அதுவும் இறைவன் அருட் கொடையாக வழங்குகின்ற பேரறிவு ஆக இயலாது. எனின் கட்டு நிலையிலிருந்த நான் விடுபட்டு வீட்டு நிலையில் திருவருளின் பேரறிவைப் பெறுவேன் என்பது எங்ஙனம்? உள்ளதே தோன்றும் இல்லது வாராது எனக் கூறும் சற்காரிய வாதத்துக்கு, என்னிடத்தில் முன்பில்லாத பேரறிவு வந்து தோன்றும் எனக் கூறுவது முரண்பட்ட கருத்தன்றோ?

சற்காரிய வாதம் சைவசித்தாந்தத்திற்கு ஆணிவேர் போன்ற கொள்கையாகும். சுருக்கமாகக் கூறுவதானால் உள்ள பொருளிலிருந்தே உள்பொருள் தோன்றும். இல்பொருளிலிருந்து உள்பொருள் தோன்றாது என்பதே சற்காரியவாதம்.

சிற்றறிவிலிருந்து சிற்றறிவு தோன்றலாமே தவிரப் பேரறிவு எவ்வாறு தோன்றும் என்பது வினா.

ஞானத்தை மூவகைப்படுத்திப் பசுஞானம், பாசஞானம் பதி ஞானம் என்று வழங்குவர். பசு பாசஞானங்களிலிருந்து பதிஞானம் ஆகிய சிவஞானம் எவ்வாறு தோன்றும்? அப்படித் தோன்றுமானால் அது சற்காரிய வாதத்திற்கு இழுக்கன்றோ என்பதற்கு விடை: பதி ஞானம் ஆன்மாவினிடத்து முன்பே இருந்தது எனினும் ஆன்மா தனது அறியாமையால் அதனை அறிய இயலவில்லை. ''ஆசான் வந்து அருளால் தோன்ற அடி ஞானம் ஆன்மாவில் தோன்றும்'' என்பது சிவஞான சித்தியார் (280). சிவப்பிரகாசத்தில்,

> ''தத்துவம் ஆனவற்றின் தன்மைகள் உணரும் காலை
> உய்த்து உணர்ந்திட உதிப்பது ஒளிவளர் ஞானம் ஆகும்
> அத்தன்மை அறியும் ஆறும் அகன்றிட அதுவாய் ஆன்மா
> சுத்தமாம் சுத்தஞானத்து ஒருமுதல் தோன்றும் அன்றே''

என்று இக்கருத்து எடுத்து விளக்கப்பட்டமை காண்க.

> **4 கனவு கனவு என்று காண்பு அரிதாம் காணில்**
> **நனவில் அவை சிறிதும் நண்ணா — முனைவன் அருள்**
> **தான் அவற்றில் ஒன்று, தடமருதச் சம்பந்தா!**
> **யான் அவத்தை காணுமாறு என்.**

கனவு காணும் போது நாம் கனவு காண்கிறோம் என்று உணர்வ தில்லை. கனவிலிருந்து விழித்த பிறகு கனவில் கண்டதை நனவில் உணரலாம் என்றால் காணும் கருவிகள் கனவில் வேறு. நனவில் உணரும்

கருவிகள் வேறு. ஆகையால் கனவில் கண்டதை நனவில் அப்படியே அறிய இயலாது. கனவையும் நனவையும் இறைவன் திருவருளால் அறியக் கூடுமெனின் இரண்டு நிலைகளிலும் திருவருள் பொருந்துவ தில்லை. அப்படியாயின் அவத்தை வேறுபாடுகளை நான் அறிவது எவ்வாறு? சம்பந்த மாமுனியே அருள்வாயாக.

இவ்வுலகில் வாழும் உயிர்கள் ஐந்து அவத்தைகளை உறுகின்றன. அவை முறையே நனவு கனவு உறக்கம் பேருறக்கம் உயிர்ப்பு அடங்கல் என்பன. இவை காரிய அவத்தைகள் எனப்படும். இந்த நிலைகளில் முறையே முப்பத்து ஐந்து கருவிகளும் இருபத்து ஐந்து கருவிகளும் மூன்று கருவிகளும் இரண்டு கருவிகளும் ஐந்தாம் நிலையில் தனித்தும் உயிர் நிற்கும். இவ்அவத்தைகளை இறைவன் உயிர்களின் மல நீக்கத்திற் காகவே கூட்டிப் பிரிக்கிறான். ஒவ்வொரு நிலையிலிருந்து நீங்கிய பிறகே உயிர் அதனை அறிய முடிகிறது. இவ்வாறு இருக்கும் போது அவற்றை நான் எவ்வாறு தெளிவுற அறிந்து கொள்ள முடியும் என்பது கேள்வி.

சுத்த தத்துவங்கள் ஐந்தினாலும் உயிர்களுக்கு ஞானம் உண்டாகும். சிவ சத்திகள் சுத்த தத்துவங்களைக் காரியப்படுத்த அவை தூவாமாயை எனப்படும் அசுத்த மாயையில் கலை முதலியவற்றைத் தொழிற்படுத்தும். அவைகளாலே ஆன்மாக்களுக்கு அறிவு உண்டாகும். அதன் மூலமே உயிர்கள் அவத்தை வேறுபாடுகளை அறிந்து கொள்ள முடியும் என்பது அதற்குரிய விடை.

சிவப்பிரகாசத்தில் ' இத்தகைய இறை அருளால் உயிர் அறியும்'' (38) என்று தொடங்கும் செய்யுளில் உயிரின் அறிவு தொழிற்படுவதற்கு இறைவனின் அருள் இன்றியமையாது வேண்டப்படும் என்பது தெளிவுறுத்தப்பட்டது.

**5 அறிவு அறிந்தது எல்லாம் அசத்து ஆகும் ஆயின்**
**குறி இறந்த நின் உணர்வில் கூடா — பொறிபுலன்கள்**
**தாமாய்அறியா, தடமருதச் சம்பந்தா!**
**யாம் ஆர்அறிவார் இனி.**

குளங்கள் நிறைந்த மருத நகரில் வாழும் சம்பந்த மாமுனிவரே உயிரின் அறிவினால் அறியப்பட்டனவெல்லாம் அசத்தாகும் எனவே அழிந்து போகும் என்பர். சொல்லுக்கும் மனத்திற்கும் எட்டாமல் அவற்றைக் கடந்து நிற்கிற உனது தன்மையினை வரையறைக்கு உட்பட்ட உயிரின் அறிவு அறிந்து கொள்ளப் போவதில்லை. பொறி புலன்கள் எனப்படும் தத்துவங்களும் சடங்கள் ஆகையால் அவையும் தாமாக அறிய மாட்டா. இவ்வாறு ஆயின் உயிர்களாகிய நாங்கள் எதனால் எதனை அறிய முடியும்?

''அறிவினால் அறிந்த யாவும் அசத்தாதல் அறிதி'' என்பது சிவப்பிரகாசம் (55). உயிரின் வரையறைக்கு உட்பட்ட சிற்றறிவு. எனவே சுட்டியறியப்படுவனவாகிய பொருள்களையே அதனால் அறிய முடியும். சுட்டியறியப்படுவன எல்லாம் தோற்றம் இருப்பு ஒடுக்கம் என்ற மூன்றுக்கும் உட்படுவன. எனவே அவ்வாறு அறியப்பட்ட பொருள்கள் எல்லாம் நிலையற்ற பொருள்களே.

இறைவன் சொல்லுக்கும் மனதுக்கும் எட்டாத வரம்பற்ற பரம் பொருள். அப்பரம்பொருளைச் சுட்டறிவு பொருந்தி அறியாது. பொறி புலன்களாகிய தத்துவங்களும் தமக்கென அறிவில்லாதன. எனவே அவையும் இறைவனை அறியமாட்டா. அப்படியாயின் இறைவனை அறிவது தான் எவ்வாறு என்பது வினா.

இதற்கு விடை : பாசங்களோடு கூடிப் பாசமாய் நின்று அதனால் கட்டுப்பட்டு நிற்கும் உயிர் திருவருளோடு கூடிக் கட்டினைத் தகர்த்து இறை அருளாலே இறைவனை அறியும் அறிவினைப் பெறும்.

''இரு திறன் அறிவுளது இரண்டலா ஆன்மா'' என்ற சிவஞான போத ஏழாம் நூற்பாப் பகுதி இங்கே நினையத் தக்கது. உயிர் என்பது இருளோடு சேர்ந்து இருளாகவும் ஒளியோடு சேர்ந்து ஒளியாகவும் நிற்கும் கண்ணைப் போன்று, அசத்தைச் சார்ந்து அசத்தாகவும் சத்தைச் சார்ந்து சத்தாகவும் விளங்கும் இயல்புடையது. இத்தன்மை சிவப் பிரகாசத்தில்,

> ''சத்துஇது என்று அசத்துத் தான் அறியாது அசத்தைச்
> சத்து அறிந்து அகல வேண்டா அசத்து இது சத்துஇது என்றுஓர்
> சத்து இருள் ஒளி அலாக் கண் தன்மையை நாம் அசத்தைச்
> சத்துடன் நின்று நீக்கும் தன்மையால் சதசத்து ஆமே'' (57)

எனக் கூறப்பட்டது.

**6 சிற்றறிவு முன்கெடுதயில் சேர்வார்இன்றும் சிறிது**
**மற்று அதனில் நிற்கில் அருள் மன்னுவாம் – துற்றமுகில்**
**மின்கொண்ட சோலை வியன்மருதச் சம்பந்தா!**
**என்கொண்டு காண்பேன் யான்.**

மேகங்கள் தங்கும் விண்ணளாவிய சோலைகள் பொருந்திய மருத நகர்ச் சம்பந்தப் பெருமானே, உயிரின் சிற்றறிவு கெட்ட பின்பே இறைவனின் அருளால் பேரறிவாகிய மெய்ஞ்ஞானம் அதற்கு விளங்கும் எனின் உள்ள சிற்றறிவும் கெட்ட பின்பு பேரறிவைப் பெறுவதற்கு அங்கு யாரும் இலர். அவ்வாறன்று உயிரின் சிற்றறிவு சிறிதே நிற்ப சிறிது கெடும் என்றால் உள்ள அறிவின் ஒரு பகுதியில் பேரறிவு பொருந்துவதற்கு வழியேயில்லை. பின் எதனைக் கொண்டு நான் மெய்யைக் காண்பேன்?

உயிரின் சிற்றறிவு முற்றிலும் அழிந்தால் இறைவனது பேரறிவு உயிரில் பதியுமா? அல்லது உயிரின் சிற்றறிவின் ஒரு பகுதி கெட்டு ஒரு பகுதி நிற்கும் போது இறைவனின் பேரறிவு வந்து பொருந்துமா? என்பன இங்கே எழுகின்ற வினாக்கள்.

உயிர் கருவி கரணங்களின் துணைக் கொண்டு உலகியல் பொருள்களை அறிகிறது. கருவி கரணங்கள் யாவும் வரையறைக்குட் பட்டவை. எனவே அவை வாயிலாக உயிர் பெறுகின்ற அறிவும் ஏகதேச அறிவு எனப்படும் வரையறைக்குட்பட்ட அறிவுதான். அதுமட்டிலு மல்லாமல் மலத்தின் பிடிப்பால் உயிரின் அறிவு சிற்றறிவு எனப்படும். திருவருள் துணைக் கொண்டு தன் முனைப்பற்று உயிர் அறிகின்ற போது உயிர் வியாபக அறிவு எனப்படும் பேரறிவைப் பெறுகின்ற தகுதியை அடைகின்றது. இதனால் சிற்றறிவு கெடும் என்பதற்கோ அல்லது முன் போலவே இருக்கும் என்பதற்கோ இடமில்லை. பாசத்தின் கட்டுகளை அறுத்து இறைவன் திருவடி ஞானத்திலே உயிர் தோய்ந்து இன்புறும் என்பது இதற்கான விடை.

இந்த விடை ஓர் உவமையின் மூலம் சிவஞான சித்தியாரில் விளக்கப்படுகிறது. இரச குளிகையினால் செம்பு பொன்னாகும். அப்போது செம்பின் களங்கம் ரசகுளிகையினால் அறவே ஒழிக்கப்படும். அக்குளிகையே பொன்னாவதில்லை. என்பது தெளிவு. சிவஞான சித்தியாரின் பாடல் பின்வருமாறு:—

"செம்பு இரத குளிகையினால் களிம்பு அற்றுப் பொன்னாய்ச்
செம்பொன் உடன்சேரும் மலம் சிதைந்தால் சீவன்
நம்பன்உடன் கூடும் எனில் பொன்போல் அல்லன்
நற்குளிகை போல அரன் நணுகும்மலம் போக்கி
அம்பொன் அடிக் கீழ்வைப்பன் அரும்களங்கம் அறுக்கும்
அக்குளிகை தானும் பொன்ஆகாது ஆகும்
உம்பர் பிரான் உற்பத்தி ஆதிகளுக்கு உரியன்
உயிர்தானும் சிவானுபவம் ஒன்றினுக்கும் உரித்தே" —(319)

**7 உன்னரிய நின்உணர்வு அது ஓங்கியக் கால் ஒண் கருவி
தன்அளவும் நண்ணரிது தான்ஆகும் என்அறிவு
தான்அறிய வாரா தடமருதச் சம்பந்தா!
யான்அறிவது எவ்வாறு இனி.**

நீர்வளமிக்க மருதநகரில் வாழும் சம்பந்தப் பெருமானே, நினைத்தற்கரிய உம்முடைய பெருமை பொருந்திய திருவருள் மிகவும் மேம்பட்டது. ஆகையினாலே ஒள்ளிய கருவி கரணங்கள் முப்பத்தாறு தத்துவங்களையும் பொருந்தி உமது பெருமையை அறிவது என்பது

இயலாது தத்துவங்கள் சடம் ஆகையினாலே அவற்றால் அறிய முடியாது. ஆயினும் என்னுடைய சிற்றறிவினாலே உமது பெருமையை அறியலாகுமோ எனின் அந்தச் சிற்றறிவுக்கும் அறியும் வல்லமை இல்லை. அப்படியாயின் எவ்வாறு தான் உம்மை அறிவது என்பது கேள்வி.

உயிரின் அறிவாலும் கருவி கரணங்களின் துணைக் கொண்டும் இறைவனை அறிதல் கூடாது எனின், உணரப்பட முடியாத ஒரு பொருள் இல்பொருளாகவே முடியும். எவ்வாறு தான் உன்னை அறிவது என்ற வினா இங்கே எழுப்பப்படுகிறது.

சிவஞான போதத்தில், ''உணருரு அசத்தெனின் உணராதின் மையின்'' என்று ஆசிரியர் மெய்கண்டார் கூறி அருளியதை இங்கு நினைவுகூர்தல் தகும். உயிரின் சிற்றறிவும் அதனுடைய கருவி கரணங் களும் திருவருளிலே தோய்ந்து அதன் வயமாய் நின்றால் அப்பொழுதே மெய்ப்பொருளை அறியும் வல்லமையை உயிர் பெறுகிறது என்பது இதற் கான விடை. இருளோடு சார்ந்து இருளாய் நிற்கும் ஆன்மா அருளோடு சார்ந்து ஒளியாய் நிற்கும். இது சிவப்பிரகாசத்தில்,

''மாயைமா மாயை மாயா வரும்இரு வினையின் வாய்மை
ஆய ஆர் உயிரில் மேவும் மருள் எனில் இருளாய் நிற்கும்
மாயைமா மாயை மாயா வரும்இரு வினையின் வாய்மை
ஆய ஆர் உயிரில் மேவும் அருளஎனில் ஒளியாய் நிற்கும்''

என்ற பாடலில் ஆசிரியர் உமாபதி சிவத்தால் விளக்கப்பட்டது.

உயிரின் அறிவைக் கைவிளக்குப் போல சற்றே விளக்கும் மாயை யைத் திருஞானசம்பந்தப் பெருமான் ஒண்தலை என்று குறித்தது போல, இப்பாடலில் உயிருக்கு ஓரளவு அறிவு விளக்கம் தருவதற்கு உதவுகின்ற கருவிகளை ஆசிரியர் ஒண் கருவி என்று கூறுகிறார்.

**8 அருவேல் உரு அன்று உருவேல் அருஅன்று**
**இருவேறும் ஒன்றிற்கு இசையா — உருஓரில்**
**காணில் உயர்கடந்தைச் சம்பந்தா! கண்டஉடல்**
**பூணும் இறைக்குஎன்னும் புகல்.**

உயர் கடந்தைச் சம்பந்த மாமுனிவரே, இறைவனின் திருமேனி அருவம் எனின் உருவம் ஆகாது. அவ்வாறு இல்லை உருவந்தான் என்றால் அருவமாக மாட்டாது. அருவும் உருவும் எனக் கொள்ள வேண்டும் என்றால் ஒரு பொருளுக்கு இரண்டு தன்மைகள் கூறுதல் பொருந்தாது. இறைவன் விரும்பும் திருமேனியைக் கொண்டு அடியார் களுக்கு அருள் பாலிப்பான் எனப்படுதலின் அவனது திருமேனி எதனால் ஆகியது என்பதை எனக்கு விளக்கியருள வேண்டும்.

இறைவன் திருமேனி உருவமா, அருவமா, அரு உருவமா? உரு வமானுல் அருவம் ஆவதில்லை அருவம் ஆனுல் உருவமாவதில்லை. அருவும் ஆகும் உருவும் ஆகும் என்றுல் ஒரு பொருளுக்கு இரு தன்மை கூறுவதாய் இழுக்காகும். எனவே அவன் திருமேனி கொள்ளும் முறை தான் எவ்வாறு என்பது வினு

இறைவனுக்கு அவனது திருவருளே திருமேனியாகும். அவனது திருவருள் அவனது சத்தி என்று சொல்லப்படும் ''அருளது சத்தியாகும் அரன்தனக்கு'' என்பதும் ''சத்தி தன் வடிவேதென்னில் தடையிலா ஞானமாகும்'' என்பதும் சிவஞான சித்தியாரில் அருள்நந்தி சிவாச்சாரியார் மொழிகின்ற உண்மை. அனைத்தையும் கடந்த அருளாக நிற்கும் இறைவன் உயிர்களுக்கு அருள் பாலிக்கும் பொருட்டுத் திருமேனி கொள்ளுகிருன். சிவலிங்க வடிவம் எனப்படும் அருஉருவத் திருமேனியாக அவன் காட்சி தருவது உயிர்கள் வழிபட்டு உய்வதற்காகவே.

சிவஞான சித்தியாரில் இதுபற்றி விரிவாகச் சொல்லப் பட்டுள்ளது. எனினும் கீழே குறிக்கப்பட்டுள்ள பாடல் நினைவில் கொள்ளத் தக்கது ஆகும்.

> ''குறித்தது ஒன்று ஆக மாட்டாக் குறைவிலன் ஆதலானும்
> நெறிப்பட நிறைந்த ஞானத் தொழிலுடை நிலைமை யானும்
> வெறுப்பொடு விருப்புத் தன்பால் மேவுதல் இலாமை யானும்
> நிறுத்திடும் நினைந்த மேனி நின்மலன் அருளினுலே.'' (65)

சிவஞான மாபாடியம் இரண்டாம் நூற்பாவில் இரண்டாம் அதிகரணத்தில் மாதவச் சிவஞான முனிவர், ''அருவுமும் உருவுமும் தம்முள் மாறுகோள் அன்மையால்,'' என்று அருவும் என்ற சொல்லுக்கு விளக்கம் அளித்தது இங்கே நினைவு கூரத் தக்கது.

**9 இரு மலத்தார்க்கு இல்லை உடல்வினை என்செய்யும்**
**ஒருமலத்தார்க்கு ஆராய் உரைப்பேன் - திரிமலத்தார்**
**ஒன்ருக உள்ளார், உயர்மருதச் சம்பந்தா!**
**அன்ருகில் ஆமாறு அருள்.**

உயர்மருத நகரில் வாழும் சம்பந்தப் பெருமானே, இருமல முடையார் ஆகிய பிரளயாகலருக்கு மாயை இல்லை எனவே உடம்பும் இல்லை. அவர்கள் வினையின் பயன்களை எவ்வாறு நுகர்வார்கள்? ஒரு மலமுடைய விஞ்ஞான கலர் கன்ம மலமும் மாயா மலமும் நீங்கப்பெற்ற வர்கள். எனவே அவர்கள் எத்தன்மையர்கள் என்று எவ்வாறு கூறு வேன்? மூன்று மலங்களுமுடைய சகலர் அம்மலங்களோடும் கூடி வேற்றுமையின்றி நிற்பதால் அவர்களுக்குத் திருவருள் எவ்வாறு கூடும்? விடையருளுவாயாக.

உயிர்களைச் சகலர் பிரளயாகலர் விஞ்ஞானகலர் என்று மூன்று வகையாகப் பிரிப்பர். சகலர் ஆணவம் கன்மம் மாயை என்ற மூன்று மலங்களும் உடையவர்கள். பிரளயாகலர் ஆணவம் கன்மம் என்ற இரு மலமுடையவர்கள். விஞ்ஞானகலர் ஆணவமலம் ஒன்றே உடையவர்கள். இம்மூவகை உயிர்களுக்கும் இறைவன் எவ்வாறு அருள் பாலிப்பான் என்பது இங்கே எழுப்பப்படுகின்ற கேள்வி.

உயிர்கள் இவ்வாறு பகுக்கப்படும் என்பதனைத் ''திரிமலத்தார் ஒன்று அதனிற் சென்றோர்கள் அன்றி, ஒரு மலத்தாராயும் உளர்'' (12) என்ற திருவருட்பயன் தெரிவிக்கிறது.

இறைவன் இவர்களுக்குத் தன்மை, முன்னிலை படர்க்கை என்ற மூவிடங்களிலே நின்று அருள் பாலிப்பான் என்பர் பெரியோர். விஞ்ஞானகலர்க்கு உள்நின்று உணர்த்தியும், பிரளயாகலருக்கு நான்கு தோள்களும் முக்கண்ணும் மானும் மழுவும் ஏந்திய திருக்கரங்களும் கொண்டவனாய்த் தோன்றி முன்னிலையில் நின்றும் அருள் புரிவான். சகலர்க்குக் குருவடிவாகத் தோன்றி அருள் பாலிப்பான்.

பிரளயாகலருக்கும் விஞ்ஞானகலருக்கும் நம் போன்று அசுத்த மாயை எனப்படும் தூவா மாயையிலிருந்து காரியப்பட்டுத் தோன்றிய உடம்புகள் இல்லை. அவர்களுடைய உடல்கள் சுத்தமாயையிலிருந்து அதாவது தூய மாயையிலிருந்து இறைவனால் தோற்றுவிக்கப்பட்டன என்பர் பெரியோர். இக்கருத்துச் சிவஞான சித்தியாரில்,

''வித்தைகள் வித்தை ஈசர் சதாசிவர் என்று இவர்க்கு
வைத்துறும் பதங்கள் வன்னம் புவனங்கள் மந்திரங்கள்
தத்துவம் சரீரம் போகம் கரணங்கள் தாம் எலாமும்
உய்த்திடும் வைந்தவம் தான் உபாதானம் ஆகி நின்றே'' (45)

என்று கூறப்பட்டதைத் இங்கு நினைவு கூர்க.

சிவஞான மாபாடியத்தில் மாதவச் சிவஞான முனிவர் இரண்டாம் நூற்பாவில் இரண்டாம் அதிகரணத்தில் சுத்த மாயை பற்றிப் பேருரை கூறுமிடத்து, ''இன்னும் அனந்த தேவர் சீகண்ட ருத்திரர் முதலியோர் விஞ்ஞானகலர் பிரளயாகலரில் பக்குவமுடைய வராய்ச் சகச மலத்தின் நீங்கி முதல்வன் அருளான் முழுதுணர்ந்து படைப்பு முதலியவற்றைக் காரியப்படுத்துவோராகலின், அவர்க்குத் தநுகரணாதியுண்மையின் அவற்றிற்குக் காரணமாதல் பற்றியுஞ் சுத்த மாயை யுண்மை துணியப்படும். அனந்த தேவர் முதலியோர் தநுகரணாதிக்கும் அசுத்த மாயையே காரணமெனக் கோடுமெனின், — அசுத்த மாயை மயக்குவதாகலின், அவர்க்கும் மயக்கமுண்டாதல் வேண்டும்; அஃதின்மையானும், அசுத்தத்திற் சுத்தந் தோன்றாமை

யானும், அசுத்த மாயை கன்மமார்ந்த அணுக்களுக்கே ஆவாரகமாகலின் விஞ்ஞானகலர்க்குக் கன்மமின்மையானும், விஞ்ஞானகலருண்மைக்குப் பிரமாணம் முன்னர்க் காட்டுதுமாகலானும் அவர் ததுகரணுதிக்கு அசுத்த மாயை காரணமாகாதென்று ஒழிக'' என்றுர்.

இதனுள் முன்னர்க் காட்டுதும் என்று முனிவர் கூறியது எட்டாம் நூற்பா அதிகரணம் இரண்டிற்கு வகுத்த பேருரைப் பகுதியைக் குறித்து நின்றது.

**10 ஒன்று இரண்டாய் நின்று ஒன்றில் ஓர்மையதாம் ஒன்றுக**
**நின்று இரண்டாம் என்னில் உயிர் நேராகும் — துன்று இருந்தார்**
**தாங்கியவாழ் தண்கடந்தைச் சம்பந்தா! யானுகி**
**ஓங்கியவாறு எவ்வாறு உரை.**

நெருக்கமாகக் கட்டப் பெற்ற பெரிய மாலையைத் திருத்தோள் களிலே தாங்கித் தண் கடந்தை நகரில் எழுந்தருளியுள்ள சம்பந்தப் பெருமானே, ஒரு பொருளாய் இருந்த பரம்பொருளே உலகியல் தோற்றத்தில் இரண்டாக நின்று அதன் பின்னர் வீட்டு நிலையில் ஒன்றுகச் சேரும் என்றுல் ஒன்று மற்றென்றோடு சேர்ந்தது என்று கூறுவதற்கு இடமில்லை. உள்ள பொருள் ஒன்றேதான் என்று ஆகும். அவ்வாறு அன்று உள் பொருள் இரண்டு என்று கொண்டால், பரமான்மா ஆகிய சிவ பரம்பொருளும் சீவான்மா எனப்படும் உயிரும் தம்முள் ஒத்தன எனக் கருதப் பெற்று இழுக்காகும். உயிராகிய யான் எவ்வாறு சிவமாய் விளங்கும் தன்மையைப் பெறுவேன். விடை கூறியருள வேண்டும்.

உள்ளது ஒரு பொருளே, அதுவே பரம்பொருள். அப்பொருள் உலகியல் நிலையில் இரண்டாகத் தோன்றிப் பின்னர் ஒன்றுகும் என்பர் சிலர். இவர்கள் ஏகான்மவாதிகள் எனப்படுவர். இவர்கள் கருத்துப்படி ஒன்று ஒன்றோடு கூடுமென்பது பொருந்தாது. பொருள் ஒன்றே என்பது தான் பொருந்தும். மற்றொரு சாரார் உள்ள பொருள்கள் இரண்டு. அவையே முத்தி நிலையில் ஒன்றுகும் எனக் கூறுவர். இவ்வாறு கூறும் போது சிற்றறிவுடைய உயிரும் பேரறிவே வடிவான சிவமும் தம்முள் ஒத்தன என்று கொள்ளப்பட்டு இழுக்குடைய கருத்து ஆகும் இவ்விரு நிலைமையும் அற்று உயிராகிய நான் முத்தி நிலையில் எவ்வாறு சிவமாம் தன்மை பெறுவேன் என்பது இங்கே எழுப்பப்படும் கேள்வி.

அத்துவிதம் என்னும் சொல்லுக்குப் பொருள் காண முயன்றவர்கள் தமக்கு ஏற்றவாறே கொண்டு மாறுபட உரைத்தனர். அவர்களுள் பொருள் ஒன்றே என்று கொண்டவர்கள் ஏகான்மவாதியர்.

பொருள்கள் இரண்டு என்று கொண்டவர்கள் துவிதவாதிகள் அல்லது பேதவாதிகள் எனப்படுவர். சொல்லும் பொருளும் போல இறைவனும் உயிரும் என்று கொண்டவர்கள் விசிட்டாத்துவிதிகள்.

சைவசித்தாந்தம் கூறுவது சுத்தாத்துவிதம் எனப்படும். ஒன்ருய் வேருய் உடனுய் நிற்கும் நிலை. இச்சிறப்பை உணர்ந்தே தாயுமான அடிகள் ''பொய்கண்டார் காணுப் புனிதம்எனும் அத்துவித மெய்கண்ட நாதன்'' என்று போற்றினுர்.

உயிர் எனும் தனிப் பொருள், கேவல நிலையில் ஆணவத்தோடு அத்துவிதமாய் நின்ற முறையில் சுத்த நிலையில் சிவபரம் பொருளோடு அத்துவிதமாய் நிற்கும் என்பது இங்கே எழுப்பப்பட்ட வினுவிற்கு விடை. இது சிவப்பிரகாசத்தில்,

> ''ஒன்று இரண்டு ஆகி ஒன்றின் ஒருமையாம் இருமை ஆகி
> ஒன்றில் ஒன்று அழியும் ஒன்ருது என்னில் ஒன்று ஆகா தீயில்
> ஒன்றுஇரும்பு உறழின் அன்ரும் உயிரின் ஐந்தொழிலும் வேண்டும்
> ஒன்றிநின்று உணரும் உண்மைக்கு உவமை ஆணவத்தோடு
> ஒன்றே'' (87)

என எடுத்துரைத்து விளக்கப்பட்டது. ஓர்மையதாம் — ஒரு தன்மைய தாம்.

**11 காண்பானும் காட்டுவதும் காண்பதுவும் நீத்து உண்மை**
**காண்பார்கள் நன்முத்தி காணுர்கள் காண்பானும்**
**காட்டுவதும் காண்பதுவும் தண்கடந்தைச் சம்பந்தன்**
**வாட்டும் நெறிவாராத வர்.**

காண்பான், காட்சி, காணப்படும் பொருள் என மூன்று பொருள்கள் கொள்ளப்படும். முத்தி நிலையில் இந்த மூன்றும் இல்லை என்று கொள்பவர்களும் மெய்யான முத்தி இயல்பை உணராதவர்களே, முத்தியில் அவை மூன்றும் உள்ளனவே என்று கொள்பவர்களும் முத்தி நிலையை உணராதவர்கள் ஆவர். இவ் இருவரும் தண் கடந்தை நகர்ச் சம்பந்தனது திருவருளால் மலத்தை வாட்டிப் பேரின்ப நெறியில் செலுத்துவதைத் தலைப்படாதவரே ஆவார்.

முதல் இரண்டு வரிகளில் ஏகான்ம வாதிகளின் கொள்கை மறுக்கப்பட்டது. பின் இரண்டு அடிகளில் அகச் சமயத்தார் கொள்கை மறுக்கப்பட்டது.

ஞாதிரு (அறிபவன்), ஞானம் (அறிவு), ஞேயம் (அறியப்படும் பொருள்) என்னும் இம் மூன்றினுள் ஞேயம் ஒன்றே மெய். ஏனைய இரண்டும் பொய்த் தோற்றமே என்பது ஏகான்மவாதிகளின் கொள்கை.

ஆதலால் முத்தி நிலையில் பொருள்கள் மூன்றாகிய நிலை இல்லை என்றும், மெய்ப்பொருள் ஒன்றே உள்ளது என்றும் அந்த மெய்ப்பொருளும் மற்றொன்றினால் அறியப்படும் பொருளாய் இல்லாமையால் அதனை ஞேயம் என்று சொல்லுவது பொருந்தாது என்பதும் ஏகான்மவாதிகளின் கொள்கை.

காண்பவனாகிய ஆன்மாவும் காட்சியாகிய அறிவும் முத்திநிலையில் இல்லாது ஒழியும் என்று கொண்டால் முத்தி என்பதே பயனற்றது ஆகிவிடும். எனவே ஏகான்மவாதிகளின் கொள்கை பொருந்தாது.

அகச்சமயவாதிகள் முத்திநிலையில் அம்மூன்றும் உள்ளன என்றும் ஆன்மா அவற்றை அறியும் என்றும் கூறுவர். இவ்வாறு கொண்டால் ஆன்மா தன்னையும் தனது அறிவையும் அறியும் பொழுது சிவபரம் பொருளை அறியாது மறக்கும் என்று ஆகிவிடும். அதனால் சிவத்தில் அழுந்தும் நிலை இன்றிப் பேரின்பம் விளைவதும் இல்லாமல் போகும். ஆதலால் முத்தியில் மூன்று பொருள்களும் தனித்தனியே உள்ளன என்பதும் பொருந்தாது.

சைவ சித்தாந்தத்தில் முத்தி நிலை பற்றிய கொள்கையில் மூன்று பொருள்களும் உள்ளனவாயினும் ஆன்மா சிவம் ஒன்றையே அறிந்து நிற்கும். ஏனைய இரண்டையும் அறியாது என்றே கொள்ளப்படும். இதனையே வலியுறுத்தி இப்பாடலில் ஆசிரியர் கூறினார்.

**12 ஒன்றி நுகர்வது இவன் ஊணும் உறுதொழிலும்**
**என்றும் இடையில் இடம் இல்லை ஒன்றித்**
**தெரியா அருள் மருதச் சம்பந்தா! சேர்ந்து**
**பிரியாவாறு எவ்வாறு பேசு.**

என்னோடு ஒன்றி நின்றும் என்னால் தெரிய இயலாத் திருவருளுடைய மருதநகர்ச் சம்பந்த முனிவரே, வினையின் பயனை நுகரும் போதும் வினைகளை ஈட்டும் போதும் என்னோடு இறைவன் திருவருள் ஒன்றியே நிற்கிறது. ஆயினும் அதனை நான் அறிவதில்லை. வினைகளை ஈட்டுவதும் அவற்றின் பயனை நுகர்வதுமாக இடையீடின்றித் துயரில் உழல்கிறேன். அவற்றிலிருந்து விடுபட்டு உன் திருவடியைச் சேர்ந்து பேரின்பத்திலிருந்து பிரியாதிருப்பது எவ்வாறு? உரைத்தருள்வாயாக.

பாடலில் வினா வெளிப்படையாகவே கேட்கப்படுகிறது. வினைகளுக்கேற்ற பயன்களை உயிர்களுக்குக் கொடுப்பதன் மூலம் இறைவன் உயிர்களைப் படிப்படியே வினையிலிருந்து விடுவிக்கிறான். அவ்வாறு முற்றிலும் விடுவித்த பிறகு, அவன் அருளாலே உயிர் சிவானந்தப் பெருவாழ்வைப் பெறும் என்பது வினாவிற்குரிய விடையாகும்.

திருவருட்பயனில், ''அவனை அகன்று எங்கு இன்றாம் ஆங்கு அவனும் எங்கும், இவனை ஒழிந்து உண்டாதல் இல்'' (95) என்று இதற்கான விடை எடுத்துரைக்கப்படுகிறது.

உண்மை நெறி விளக்கத்தில் இக்கருத்து,

''பாதகங்கள் செய்திடினும் கொலை களவு கள்ளுப்
பயின்றிடினும் நெறியல்லா நெறி பயிற்றி வரினும்
சாதிநெறி தப்பிடினும் தவறுகள் வந்திடினும்
தனக்கு என ஓர்செயல் அற்றுத் தான்அதுவாய் நிற்கில்
நாதன்அவன் உடல்உயிராய் உண்டுஉறங்கி நடந்து
நானு போகங்களையும் தான்ஆகச் செய்து
பேதம்அற நின்று இவனைத் தானுக்கி விடுவன்
பெருகுசிவ போகம்எனப் பேசுநெறி இதுவே''

என்று எடுத்துரைக்கப்படுகிறது.

**13** **அருளால் உணர்வார்க்கு அகலாத செம்மைப்**
**பொருளாகி நிற்கும் பொருந்தித் தெருளா**
**வினாவெண்பா உண்மை வினாவாரேல் ஊமன்**
**கனாவின்பால் எய்துவிக்கும் காண்.**

இப்பாடல் நூற்பயன் கூறுகிறது. ஆசிரியரின் திருவருளால் உணர்வார்க்கு இவ் வினா வெண்பாவாகிய நூல் செம்மைப் பொருளாக மலைவின்றிப் பொருந்தி நிற்கும். இதன் உண்மையைத் தேடி அறியாதவர்க்கு ஊமை கண்ட கனாப் போல இதன் பயனாகிய செம்பொருள் கைகூடாது

அறிதல் என்பது புறப்பொருள் பற்றியும். உணர்தல் என்பது அகப்பொருள் பற்றியும் ஆளப்படும் சொற்களாகும். இங்கு உணர்வார் என்றது உள்ளத்தின் உள்ளே பொருந்தி உணர்வதைக் குறித்தது.

உ
சிவமயம்

# போற்றிப் பஃறொடை

ஆசிரியர் உமாபதி சிவம் அருளிய சித்தாந்த நூல்கள் எட்டு என்பர். அவை சித்தாந்த அட்டகம் எனப்படும். அவற்றுள் ஒன்று போற்றிப் பஃறொடை என்னும் இந்நூல். வெண்பா யாப்பில் பல அடிகளால் எழுதப்படும் நூல் பஃறொடை வெண்பா என்று பெயர் பெறும். ஆசிரியர் தமது குருவாக விளங்கிய மறைஞான சம்பந்தரைச் சிவபரம் பொருளாகவே எண்ணிப் பாராட்டிப் போற்றுவதனுல் இந்த நூல், போற்றிப் பஃறொடை என்னும் பெயர் பெற்றது.

இந்த நூலுள் சிவபெருமானின் பெருங்கருணை, பதினன்கு முறை போற்றி வணங்கப்படுகிறது. ஆராத நன்றி உணர்வினுல் நூலின் இறுதி வரியில் 'என்கொண்டு போற்றி செய்கேன் யான்' என்று கூறி நூலை நிறைவு செய்கிருர் ஆசிரியர்.

**பூமன்னும் நான்முகத்தோன் புத்தேளிர் ஆங்கவர்கோன்**
**மாமன்னு சோதி மணிமார்பன் — நாமன்னும்**
**வேதம்வே தாந்தம் விளக்கம்செய் விந்துவுடன்**
**நாதம்நா தாந்தம் நடுவேதம் போதத்தால்**
**ஆம்அளவும் தேட அளவிறந்த அப்பாலைச்**
**சேமஒளி எவருந் தேறும்வகை — மாமணிசூழ்**
**மன்றுள் நிறைந்து பிறவி வழக்கறுக்க**
**நின்ற நிருத்த நிலை போற்றி**

தாமரை மலரிலே நான்கு முகங்களுடன் அமர்ந்திருக்கின்ற பிரமனும், தேவர்களும், தேவர்களின் தலைவனை இந்திரனும், திருமகள் இடம் பெற்ற மார்பில் ஒளி மிக்க கௌத்துவ மணியை அணிந்துள்ள திருமாலும், நாவினுல் ஓதப்படுகின்ற வேதங்களும், வேதங்களின் முடிவாகிய உபநிடதங்களும், அறிவுக்கு விளக்கத்தைத் தரும் விந்துவும், அதற்கு ஆதாரமாய் விளங்கும் நாதமும், அதன் முடிவாகத் திகழும் சிவ தத்துவமும், தம் அறிவால் இயன்ற மட்டும் தேட அவற்றிற் கெல்லாம் அப்பாற்பட்டதாய், உயிர்களுக்குப் பாதுகாப்பாக விளங்கும் சிவபரம் பொருள் உயிர்களை உய்விக்க வேண்டும் என்ற கருணையினுல், தன்னை வணங்குபவர் யாவருக்கும் பேரின்பத்தை வழங்குவதற்காக, மணிகளால் இழைக்கப்பெற்ற திருச்சிற்றம்பலத்துள் நின்று உயிர்களின பிறவிப் பிணி அறுமாறு எல்லையற்ற திருக்கூத்து இயற்றும் நிலையை வணங்குகிறேன்.

வேதம் எழுதப்படாமல் நாவால் உரைக்கப்பட்டே பயின்று வருவதால் 'நாமன்னு வேதம்' என்றார். வேதாந்தம் ஏகான்மவாத நூலைக் குறிக்காமல் மறை முடிபாகிய உபநிடதங்களைக் குறித்தது. விந்து, தூமாயை, செயலாற்றலை எழுப்புவது. நாதம் அறிவாற்றலைத் தூண்டும் பேரறிவு. நாதாந்தம்-சிவ தத்துவம். இவை யாவும் இறைவனின் கூறுகளாதலின் அவனை முழுவதும் அறிய இயலாவாயின.

சிவபெருமானின் திருக்கூத்து அவன் இயற்றும் ஐந்தொழிலையும் குறித்தது. உயிர்களின் பொருட்டே இறைவன் ஐந்தொழில் செய்கிறான். ஆதலால் அவை ஐந்தும் உயிர்களின் பிறவிப் பிணிக்கு மருந்தாகின்றன.

**— குன்றாத**
**பல்லுயிர் வெவ்வேறு படைத்தும் அவைகாத்தும்**
**எல்லை இளைப்பொழிய விட்டுவைத்தும் — தொல்லையுறும்**
**அந்தம் அடிநடுஎன்று எண்ண அளவிறந்து**
**வந்த பெரியவழி போற்றி.**

எண்ணற்ற உயிர்களை அவற்றின் வினைக்கு ஏற்ப வெவ்வேறு வகையான பிறவிகளாகப் படைத்தும், அவற்றைக் காத்தும் பிறவியுட்பட்டு இளைத்துப் போன உயிர்களை ஒரு கால எல்லையில் இளைப்பாறுமாறு ஒடுக்கியும் தான் மட்டும் கால எல்லைக்கு அப்பாற்பட்டு நிற்பதனால் முதல் நடு இறுதி என்று காண்பதற்கு அரியதாய் அவற்றின் அளவைக் கடந்து நிற்கும் பரம்பொருளின் பெருமைக்குரிய ஆற்றலை வணங்குகிறேன்.

உயிர்கள் எண்ணிறந்தன. எனவே பல உயிர்கள் பிறந்தும் இறந்தும் முத்தி பெற்றும் அதன் பிறகும் எண்ணற்ற உயிர்கள் உள்ளன. ஆதலால் குன்றாத பல்லுயிர் என்றார். திருவருட்பயனில், "பிறந்த நாள் மேலும் பிறக்கும் நாள் போலும், துறந்தோர் துறப்போர் தொகை" என்று கூறியதும் இதனை விளக்கும் நால்வகைத் தோற்றத்து எழுவகைப் பிறப்புக்கள் எண்பத்து நான்கு நூறாயிரம் பிறவி வகைகள் என்பதனைக் குறிக்க வெவ்வேறு படைத்தும் என்றார். இங்கு உயிர்களைப் படைத்தல் என்பது அவற்றுக்கு உடல் கருவி உலகு நுகர்ச்சிப் பொருள் ஆகியவற்றைக் கொடுத்து வினைப்பயனை நுகரச் செய்வது ஆகும். வினைப் பயனை நுகரும் காலம் வரை உயிர்களை நிலை நிறுத்துதல் காத்தலாகும். இவ்வாறு பிறந்தும் வினையை நுகர்ந்தும் இறந்தும் உயிர்கள் மாறி மாறிச் செல்வதால் அவற்றிற்கு இளைப்பு ஏற்படும். இளைப்பை ஆற்றுவதற்காக சர்வ சங்கார காலத்தில் இறைவன் அவற்றை ஒடுக்குகின்றான். இளைப்பாறிய பின்பு மீண்டும் தோற்றுவிக்கிறான். "எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்" என்ற திருவாசகம் உயிர்கள் இளைப்புறுவதைக் காட்டும். கால எல்லையைக்கடந்து நிற்பதே நித்தப்

பொருள். ஆதலால் தோற்றமும் நடுவும் இறுதியும் அற்றவன் இறைவன் என்று குறித்தார். ''ஆதியும் அந்தமு மில்லா அரும்பெருஞ் சோதி'' என்பது இதனைக் குறித்தது. தொல்லையுறும் என்பது தொன்மையாகவே உறுகின்ற என்று பொருள் தந்தது. தோற்றமில் காலம் தொட்டு உள்ள பொருள் என்பது ஆயிற்று.

— முந்துற்ற

**நெல்லுக்கு உமிதவிடு நீடுசெம்பில் காளிதமும்**
**தொல்லைக் கடல் தோன்றத் தோன்றுஉவரும் எல்லாம்**
**ஒருபுடை யொப்பாய்த்தான் உள்ளவாறு உண்டாய்**
**அருவமாய் எவ்வுயிரும் ஆர்த்தே — உருவுடைய**
**மாமணியை உள்ளடக்கும் மாநாகம் வன்னிதனைத்**
**தான்அடக்கும் காட்டத் தகுதியும் போல் — ஞானத்தின்**
**கண்ணை மறைத்த கடிய தொழில் ஆணவத்தால்**
**எண்ணும் செயல்மாண்ட எவ்வுயிர்க்கும் — உள்நாடிக்**
**கட்புலனால் காணார்தம் கைக்கொடுத்த கோலே போல்**
**பொற்புடைய மாயைப் புணர்ப்பின்கண் முற்பால்**
**தனுகரணமும் புவனமும் தந்து அவற்றால்**
**மனமுதலா வந்த விகாரத்தால் வினையிரண்டும்**
**காட்டி அதனாற் பிறப்பாக்கிக் கைக்கொண்டு**
**மீட்டறிவு காட்டும் வினைபோற்றி.**

முன்பிருந்தே நெல்லுக்கு உமியும் தவிடும், செம்பில் களிம்பும் கடல் நீரில் உப்பும் உடனாய் இருப்பது போல உயிரோடு கலந்திருப்பதாய், இங்குக் கூறப்பட்ட உவமைகள் எல்லாம் தனக்கு ஒருபுடை ஒப்புமையாய் மட்டிலுமே நிற்கத் தான் என்றும் நிலைபேறு உடையதாகவும், வடிவற்றதாகவும், எல்லா உயிர்களையும் தனக்குள் அடக்கும் தன்மை உடையதாகவும் உள்ளது ஆணவ மலம். ஒளி மிக்க நாகமணியைத் தன்னுள் அடக்கி இருக்கும் பாம்பினைப் போலவும், நெருப்பைத் தன்னுள் அடக்கி இருக்கும் விறகினைப் போலவும், உயிர்களின் அறிவினை முற்றிலும் மறைத்து அவற்றிற்கு அறியாமையைத் தருகின்ற இத்தகைய ஆணவ மலத்தால் எல்லா உயிர்களும் கட்டப்பட்டுச் செயல் இழந்து கிடக்கும். கண்ணற்ற குருடர்களுக்கு அவர்களின் தேவை அறிந்து உதவுவதற்காகக் கொடுத்த ஊன்றுகோலைப் போல், பொற்புடைய மாயையைச் செயலிழந்து கிடக்கும் உயிர்களோடு கூட்டுவித்து முதலில் உடல் கருவி உலகு நுகர்ச்சிப் பொருள் ஆகியவற்றைத் தந்து, மனம் முதலியவற்றால் வந்த வேறுபாடுகளால் தோன்றுகின்ற நல்வினை தீவினைப் பயன்களையும் பொருந்துவித்து, வினைப்பயனை நுகர்வதற்காகப் பல்வேறுபட்ட பிறப்புக்களையும் தந்து அதனால் மலநீக்கம் பெற்ற பக்குவமுடைய

உயிர்களுக்கு மீட்சியை வழங்கி, எல்லையற்ற அறிவாகிய தனது பேரின்பத்தைத் தந்தருளும் இறைவனின் கருணைச் செயலை வணங்குகிறேன்.

கேவல நிலையில் உயிர் ஆணவத்தோடு கலந்து அறியாமையே வடிவாக நிற்கின்ற நிலையை மாற்றி, உடல் கருவி ஆகியவற்றைத் தந்து சகல நிலையில் சேர்த்து, உரிய பக்குவம் வருங்கால் சுத்த நிலையை வழங்கும் அருட்செயலை ஆசிரியர் போற்றுகிறார்.

ஆணவ மலம் உயிரைத் தோற்றமில் காலந்தொட்டே முற்றிலும் பிணித்து நிற்கிறது. நெல்லின் உமியும் தவிடும் இடையில் வந்து தோன்றாமல் நெல்லுள்ளபோதே அவையும் உள்ளன. அது போலவே ஆணவ மலமும் உயிர் என்று உண்டோ அன்றிலிருந்து அதனைப் பற்றி யிருக்கும். செம்பில் களிம்பும் அத்தகையதே. செம்பில் களிம்பு தோன்றினால் செம்பு மறைந்து முற்றிலும் களிம்பே தோன்றுவது போல ஆணவ மலம் உயிரை முற்றிலும் மறைத்து நிற்கும். கடலினிடத்து உள்ள நீரில் கலந்திருக்கும் உப்பு. நீரை உவர்ப்பாக்கிக் கடல் வெளியைப் பற்ற இயலாதது போல ஆணவ மலம் உயிரை மட்டிலும் பற்றி இறைவனைப் பற்றுவதற்குரிய ஆற்றலற்று இருக்கும்.

இம்மூன்று உவமைகளும் ஓரளவே பொருந்துவன. ஏனெனில் நெல்லின் உமியையும் தவிட்டையும் நீக்கிவிட்டால் பின்னர் அவை நெல்லை வந்து கூடுவதில்லை. ஆணவ மலமோ உயிரை விட்டு ஒரு காலத்தும் பிரிவதில்லை. செம்பில் களிம்பு காலப்போக்கில் தோன்றுவ தாகும். ஆணவ மலமோ உயிர் என்று உண்டோ அன்றே உளதாகும். நீரின் உவர்ப்பு கடல் வெளியில் முழுவதும் பற்றாது எனினும் ஓரளவு கடல் வெளியில் உவர்ப்புத் தன்மை இருக்கும் ஆனால் உயிரைப் பற்றிய ஆணவமோ இறைவனை ஒரு சிறிதும் பற்றாது.

ஒளிமிக்க மாணிக்கத்தை நாகம் மறைத்திருப்பது அறிவுள்ள உயிரைக் கொடியதாகிய ஆணவம் மறைத்து நிற்பதற்கு உவமை யாயிற்று நெருப்பை விறகு மறைத்திருப்பது. ஆன்மாவை ஆணவம் மறைத்திருப்பதற்கு உவமையாயிற்று.

அறிவுடைப் பொருளாகிய உயிர் ஆணவமலத்தின் தொடக்கால் அறிவும், செயலும் இழந்து அறிவற்ற பொருள் போலக் கிடப்பதனால் ஆணவத்தின் செயல் கடிய தொழில் எனப்பட்டது.

விழியிழந்தவர்களுக்குக் கொடுக்கக் கூடிய கோல் அவர்களுக்கு வழி நடப்பதற்கு ஓரளவு துணை செய்யும் எனினும் பார்வை தராது. அதுபோலவே பொற்புடைய மாயை உயிரின் அறிவை ஓரளவு விளக்கு

மாயினும் இறைவனை அறிகிற நல்லறிவை அதனால் தர இயலாது. ''மாயை விடிவாம் அளவும் விளக்கு அனையது'' என்பது திருவருட் பயனில் கூறப்பட்டுள்ளது. திருஞான சம்பந்தரும் மாயையை ஒண்தளை என்று அருளினார்.

காளிதம் — களிம்பு, வன்னி – நெருப்பு. காட்டம் விறகு, விகாரம் வேறுபாடு, மீட்டறிவு காட்டும் வினை என்பது உயிர்களை மீட்டு அவற்றிற்கு அறிவு விளக்கம் தந்து மீண்டும் பிறவாத நெறி காட்டும் இறைவனின் செயலைக் குறித்தது. ''மீட்டிங்கு வந்து வினைப் பிறவி சாராமே'' என்பது மாணிக்கவாசகர் திருவாக்கு.

— நாட்டுகின்ற

**எப்பிறப்பும் முற்செய் இருவினையால் நிச்சயித்துப்**
**பொற்புடைய தந்தைதாய் போகத்துட் – கர்ப்பமாய்ப்**
**புல்லிற்பனிபோல் புகுந்திவலைக்கு உட்படுங்கால்**
**எல்லைப் படாஉதரத்து ஈண்டியதீப் — பல்வகையால்**
**அங்கே கிடந்த அநாதிஉயிர் தம்பசியால்**
**எங்கேனு மாக எடுக்குமென – வெங்கும்பிக்**
**காயக்கருக்குழியில் காத்திருந்தும் காமியத்துக்கு**
**ஏயக்கை கால் முதலாய் எவ்வுறுப்பும் — ஆசறவே**
**செய்து திருத்திப்பின்பு யோகிருத்தி முன்புக்க**
**ஐயவழியே கொண்டு அணைகின்ற — பொய்யாத**
**வல்லபமே போற்றி.**

எல்லா வகைப் பிறப்புகளிலும் முன் செய்த வினைக்கு ஈடாகப் பிறப்பித்து, அதன் பின்னர் அவற்றுள் உயர்ந்ததாகிய மானிடப் பிறப்பில் தந்தையும் தாயும் நுகரும் இன்பச் சேர்க்கையில் புல் நுனியில் பனித்திவலை போல் தந்தையின் விந்து தாயின் கருப்பையில் சேர அதற்குள் உயிரைப் புகுத்தி, அன்னையின் வயிற்றில் உள்ள மிகுதியான வெப்பத்தால் அது அழிந்து போகாமலும், கருப்பையில் உள்ள கிருமிகள் அதனை உண்டு விடாமலும் காத்துக் கரு வளரும் காலத்து முந்திய வினைக்கு ஏற்பக் கை கால் முதலிய எல்லா உறுப்புக்களையும் முறையே வளர்த்துக் கருப்பையில் அச்சிறிய உடல் பொருந்துமாறு செய்து பின்னர் உரிய பொழுதிலே இரு கைகளும் குவிந்து, தலை கீழாய்ப் பிறக்குமாறு முன்பு புகுந்த சிறிய வழியைப் பெரிய வழியாக்கி இவ் உலகில் பிறக்கும் வண்ணம் அதனை அணைத்துச் சென்று வெளிக் கொணரும் பொய்யாத வல்லமையை வணங்குகிறேன்.

மானிட வாழ்க்கையில் பிறப்புத்தான் மிகுந்த ஆபத்தான அனுபவம் (Birth is the most dangerous experience in life) என்பர். தந்தையின் விந்துவில் கணக்கற்ற உயிர்க் கிருமிகள் இருப்பினும் ஒன்றே

ஒன்று அன்னையின் கரு முட்டையைக் கிழித்துக் கொண்டு உள்ளே புகுந்து படிப்படியாகப் பத்துத் திங்கள் வளர்ந்து முழுக் குழந்தையாகப் பேறுகாலத்தில் சிக்கலின்றிப் பிறப்பது என்பது இறைவனின் திருவருள் ஆற்றலால் நடைபெறுகிறதேயன்றி இவ்வளர்ச்சிக்குத் துணையாவார் வேறு யாரும் இலர். இதற்கு இறைவன் ஒருவனே அருகிருந்து காக்கின்ற பெருங் கருணையைச் செய்கிறான் என்பதனை இப் பகுதியில் ஆசிரியர் விளக்குகிறார்.

''ஒருமடமாதும் ஒருவனுமாகி இன்பசுகம் தரும் அன்பு பொருந்தி
உணர்வு கலங்கி ஒழுகியவிந்து ஊறுசுரோணித மீது கலந்து
பனியில் ஓர்பாதி சிறு துளி மாது பண்டியில் வந்து புகுந்து திரண்டு
பதும அரும்பு கமடம் இதென்று பார்வை மெய்வாய் செவி கால் கைகள் என்ற
உருவமும் ஆகி உயிர்வளர் மாதம் ஒன்பதும் ஒன்றும் நிறைந்து மடந்தை
உதரமகன்று புவியில் விழுந்து''

எனப் பட்டினத்தார் உடற் கூற்று வண்ணத்தில் கூறுவது இங்கே கருதத்தக்கது.

நாட்டுகின்ற எப்பிறப்பும் என்பது நால் வகைத் தோற்றத்து எழு வகைப் பிறப்பில் எண்பத்து நான்கு நூறாயிரம் பிறவி வகை என்று ஆகமங்களில் கூறப்படுவனவற்றைக் குறிக்கின்றது

தாயின் கருப்பையில் அளவற்ற வெப்பமும் உயிரணுவை உண்ணும் திறம் படைத்த கணக்கற்ற கிருமிகளும் உள்ளன என்பதனால் அது வெங்கும்பி எனப்பட்டது. கும்பி வெப்பம் மிகுந்த தூய்மையற்ற நரகங்களுள் ஒன்று.

கருமுதிர்ந்த பருவத்துக் கை கால்களை மடக்கிக் கொண்டு குழவி தலைகீழாகக் கிடக்கும். ஆதலால் அத்தோற்றத்தை யோகு இருத்தி என்று குறித்தார். முன் புக்க ஐய வழி என்பது உயிர் தாயின் வயிற்றில் முன்னர்ப் புகுந்த சிறிய வழி என்று பொருள் தரும்.

தாயின் வயிற்றில் குழவி பத்துத் திங்களாக வளரும் பருவத்தில் அது தாண்டி வர வேண்டிய தடைகளைப் பற்றித் திருவாசகம் போற்றித்திரு அகவலில் மாணிக்க வாசகப் பெருமான் பின் வருமாறு கூறுகிறார்.

''மானுடப் பிறப்பினுள் மாதா உதரத்து
ஈனமில் கிருமிச் செருவினில் பிழைத்தும்
ஒருமதித் தான்றியின் இருமையில் பிழைத்தும்
மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்
ஈரிரு திங்களில் பேரிருள் பிழைத்தும்

*அஞ்சு திங்களில் முஞ்சுதல் பிழைத்தும்*
*ஆறு திங்களில் ஊறலர் பிழைத்தும்*
*ஏழு திங்களில் தாழ்புவி பிழைத்தும்*
*எட்டுத் திங்களில் கட்டமும் பிழைத்தும்*
*ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்*
*தக்க தசமதி தாயொடு தான் படும்*
*துக்க சாகரத் துயரிடைப் பிழைத்தும்''*

*பிறக்கிற குழந்தை எதிர்படுகிற இடுக்கண்களை எல்லாம் இறைவனே உடன் இருந்து அகற்றுகின்றான் என்பதை இப்பகுதியில் விளக்கினார்.*

**அம்மாயக் கால் தான் மறைப்ப**
**நல்ல அறிவொழிந்து நன்குதீ தொல்லையுரு**
**அக்காலந் தன்னிற் பசியை அறிவித்து அழுவித்து**
**உக்காவி சோரத்தாய் உள்நடுங்கி மிக்கு ஓங்கும்**
**சிந்தை உருக முலையுருகுந் தீஞ்சுவைப்பால்**
**வந்து மடுப் பக்கண்டு வாழ்ந்திருப்பப் பந்தித்த**
**பாசப் பெருங் கயிற்றாற் பல்லுயிரும் பாலிக்க**
**நேசத்தை வைத்த நெறி போற்றி**

*தாயின் கருவிலிருந்து உலகத்தில் பிறந்தவுடன் இந்த உடலுக்குக் காரணமான மாயை சூறாவளி போல அலைத்து மயக்கும். கருவிலிருந்த போது உலகில் பிறவாதிருக்கவேண்டும் என்று நினைத்திருந்த குழவி அந் நினைவை மறக்கும். நல்லதும் தீயதுமாகிய வினைத் தொடர்பால் அக் குழந்தைக்கு மயக்கம் ஏற்படும். இறைவன் அதற்குப் பசி தோன்றிற்று என்பதனை அறிவிப்பான். அப்பசியைப் பிறர் உணரும் வண்ணம் குழந்தையை அழச் செய்வான். குழந்தை அழுவதைக் கண்ட தாய் மனம் நடுங்கி அன்பினால் உருகித் தன் மார்பின் வழி ஒழுகும் இனிய சுவைப் பாலை அக்குழந்தையின் பசி தீருமாறு அதற்கு ஊட்டுவாள். பசி தீர்ந்த குழந்தை மகிழக் கண்டு தானும் மகிழ்வாள். இவ்வாறு தாயும் குழந்தையும் என வைத்த பாசப் பெருங் கயிற்றினால் பல்லுயிர்களையும் கட்டி அவரவரிடையே பற்று வளருமாறு செய்தருளும் அறநெறியை வணங்குகின்றேன்.*

*பிறந்த குழந்தைக்கும் தாய்க்கும் அன்புப் பிணைப்பை இறைவனே ஏற்படுத்துகிறான். அந்த பிணைப்பே நாளாவட்டத்தில் உற்றார், உறவினர், உலகியல் பொருள்கள் மீதும் உண்டாகும் பற்றாக வளர்கிறது என்பதனை இப்பகுதியில் கூறினார்.*

*மாயக்கால் — மாயை என்னும் பெருங்காற்று. பிறந்த குழந்தையைச் சடம் என்னும் காற்று வந்து தாக்கும் எனவும், அந்தத் தாக்குதலைப் பொறாமல் அக் குழந்தை அழத் தொடங்குகிறது எனவும்*

கூறுவர். உயிருக்கு வாய்த்த உடம்பு மாயையின் காரியம். பிறப்பதற்கு முன்பு வரை கருவினுள் இருக்கும் குழவி பிறவாமையை வேண்டியே தவம் கிடக்கும் எனவும், பிறந்த வினாடியில் அந்த நினைவு முற்றாக மறைந்து உலகியலில் பற்றுக் கொள்ளும் எனவும் கூறுவர். இதனைக் குறிக்க நல்ல அறிவு ஒழிந்து என்று குறிப்பிட்டார்.

குழந்தை பிறந்தவுடன் நல்வினை தீவினை என்பனவற்றின் பயன்கள் அதனை அலைக்கழிக்கத் தொடங்குகின்றன. அதனால் விளையும் தொல்லைகளும் அக்குழந்தையைப் பற்றுகின்றன.

பத்து மாதம் தாயின் கருவிலிருந்த குழந்தை பசிப்பதுமில்லை. அதனைத் தெரிவிக்க அழுவதுமில்லை. இறைவன் திருவருளால் குழந்தைக்கு வேண்டிய உணவு அக்காலத்தில் தாயிடமிருந்தே கிடைத்து விடுகிறது. தாய் வேறு குழந்தை வேறு ஆனவுடன் இறைவன் அறிவிக்க குழந்தைக்குப் பசி உணர்வு தோன்றுகிறது. அப் பசியை வெளிப்படுத்த அது அழுவதும் இறைவன் அறிவிக்க நிகழ்வது தான். உயிர் அறிவிக்க அறிவது என்பதை வலியுறுத்தும் பொருட்டு, பசியை அறிவித்து, அழுவித்து எனக் கூறினார்.

குழந்தை அழுவதைக் கண்ட தாய் உள் நடுங்கி மனம் சோர்ந்து அன்பு மீதூர்ந்து தன் மார்பில் சுரக்கின்ற இனிய பாலைக் குழந்தைக்கு ஊட்டுகிறாள். குழந்தையின் மகிழ்ச்சியைக் கண்டு தாயும் மகிழ்கிறாள். இவ்வாறு தாய் சேய் என்னும் பாசப் பிணைப்பு உண்டாகிறது. இந்த அன்பினையும் இறைவனே தந்தருளுகிறான்.

— ஆசு அற்ற

**பாலைப் பசும்பதத்தும் பாலனும் அப்பதத்தும்**
**நாளுக்கு நாள்சகல ஞானத்து — மூள்வித்துக்**
**கொண்டாள ஆளக் கருவிகொடுத்து ஒக்கநின்று**
**பண்டாரி யானபடி போற்றி**

குற்றமற்ற குழவிப் பருவத்திலும், அதன் பின்னர் இளஞ் சிறுவனாய் வளர்கின்ற பருவத்திலும், பின்னர் வாலிபனாகும் போதும் படிப்படியாய் அறிவை வளர்வித்து, வளரும் அறிவுக்கேற்ற கருவி வளர்ச்சியையும் கொடுத்து, உடன் நின்று உதவிபுரியும் அருட் செல்வனை வணங்குகின்றேன்.

வளர்ச்சியின் ஒவ்வொரு படி நிலையிலும் உடலும் அறிவும் படிப் படியே வளர்வதற்குத் தோன்றாத் துணையாய் உடனிருந்து அருள் பாலிக்கிறான் இறைவன் என்பதனை இப்பகுதி விளக்குகின்றது.

*பண்டாரம் — செல்வம். அதனை உடையவனாகிய இறைவன் பண்டாரி எனப்பட்டான். செல்வம் என்பது இங்கே அருட்செல்வத்தைக் குறித்தது.*

தண்டாத

**புன்புலால் போர்த்த புழுக்குரம்பை மாமனையில்**
**அன்புசேர் கின்ற கட்டு ஐந்தாக்கி முன்புள்ள**
**உண்மை நிலைமை ஒருகால் அகலாது**
**திண்மை மலத்தால் சிறையாக்கிக் கண்மறைத்து**
**மூல அருங்கட்டில் உயிர்மூடமாய் உள்கிடப்பக்**
**காலம் நியதி அது காட்டி – மேல் ஒங்கும்**
**முந்திவியன் கட்டில் உயிர் சேர்த்துக் கலைவித்தை**
**அந்த அராகம் அவை முன்பு—தந்த**
**தொழில் அறிவு இச்சை துணையாக மானின்**
**எழிலுடைய முக்குணமும் எய்தி மருளோடு**
**மன்னும் இதயத்தில் சித்தத்தால் கண்டபொருள்**
**இன்னபொருள் என்று இயம்ப வொண்ணு அந்நிலை போய்க்**
**கண்டவியன் கட்டில் கருவிகள் ஈர் ஐந்தொழியக்**
**கொண்டு நியமித்து அற்றை நாள் கொடுப்பப் பண்டை**
**இருவினையால் முன்புள்ள இன்பத்துன் பங்கள்**
**மருவும் வகை அங்கே மருவி உருவுடன் நின்று**
**ஓங்கு நுதலாய ஓலக்க மண்டபத்தில்**
**போங்கருவி யெல்லாம் புகுந்து ஈண்டி நீங்காத**
**முன்னை மலத்து இருள் உள்மூடா வகையகத்துள்**
**துன்னும் இருள் நீக்கும் சுடரே போல் அந்நிலையே**
**சூக்கம் சுடர் உருவிற் பெய்து தொழிற்கு உரியர்**
**ஆக்கிப்பணித்த அறம் போற்றி**

*நீக்க இயலாத தசைப் போர்வையால் போர்த்தப்பட்ட புழுக் கூடு போன்ற உடம்பில் நனவு கனவு உறக்கம் பேருறக்கம் உயிர்ப்பு அடங்கல் என்னும் ஐந்து வகைக் கட்டுக்களால் பிணிக்கிறான். தோற்றமில் காலந்தொட்டு ஆணவ மலத்தின் மறைப்பினுல் கட்டப் பட்டுக் கண்கள் மறைக்கப்பட்டு மூலாதாரமாகிய வீட்டில் உயிர் அறிவற்றுக் கிடக்கிறது. அவ்வாறு அறிவற்றுக் கிடக்கும் காலத்தை நியதியினுல் வரையறை செய்து உயிரினை உந்திச் சுழி வரை மேல் ஓங்குவிக்கிறான். அவ்விடத்தில் உயிர் வளியை ஆன்மாவுடன் கூடுமாறு செய்து கலை வித்தை அராகம் ஆகிய மூன்றினுலும் ஆன்மாவின் செயல் அறிவு விழைவு என மூன்றையும் தோற்றுவிக்கிறான். அதற்குத் துணையாகப் பிரகிருதி மாயையில் உண்டான சாத்துவிகம் இராசதம் தாமதம் என்ற மூன்று குணங்களையும் சேர்க்கிறான். அதற்குமேல்*

இதயத் தானத்தில் சித்தமென்னும் கருவியுடன் கூட்டிச் சித்தத்தால் கண்ட பொருள் யாதென்று அறியாமல் ஆன்மாவை மயங்குவிக்கிறான். அதன் பின்னர் ஆன்மாவைக் கழுத்தில் கொண்டு சேர்த்துச் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐந்தையும், வாக்கு கால் கை எருவாய் கருவாய் ஆகிய தொழிற் கருவிகள் ஐந்தையும், மனம் புத்தி அகங்காரம் சித்தம் ஆகிய அகக் கருவிகள் நான்கையும், பிராணன் முதலிய காற்றுக்கள் பத்தையும், புருடனையும் கூட்டி நியமித்து, அற்றை நாள் தொடுத்து வருகின்ற நல்வினை தீவினைப் பயனாகிய இன்பத் துன்பங்களை நனவிலும் கனவிலும் பொருந்தும் வகை செய்து, நுதலாகிய திரு ஓலக்க மண்டபத்தில் எல்லாக் கருவிகளுடனும் பொருந்தி வீற்றிருக்குமாறு செய்தான். நீங்காத ஆணவ மலத்தின் இருள் மீண்டும் மூடாதபடி சூக்குமை பைசந்தி மத்திமை வைகரி ஆகிய நான்கு வாக்குக்களையும் பொருத்தி ஒளியூட்டி, வினைக்கு ஈடாகப் புலன்களின் வழியாக உலகியல் பொருள்களை நுகரச் செய்து, இவ்வாறு உயிர்களைச் செலுத்திப் பணிக்கின்ற அறத்தினுக்கு என் வணக்கம் உரித்தாகுக.

மூல அருங் கட்டில் மூடமாய் உட்கிடந்த உயிர் மேல் நோக்கிச் சென்று ஐந்தவத்தைப் பட்டு வருவதை இப் பகுதியில் விரிவாக ஆசிரியர் தெரிவிக்கிறார். நனவு நிலையின்கண் தத்துவ தாத்துவிகங்களுடன் கூடி யான் எனது என்னும் செருக்கோடு வினைப் பயனை நுகர்ந்து வருவதை ஓர் அரசன் திருவோலக்க மண்டபத்துள் பரிவாரங்களுடன் வீற்றிருப்பதற்கு உவமித்தார்.

கேவல நிலையில் உயிர் ஆணவத்தால் முற்றிலும் மறைக்கப் பட்டு அறியாமையில் கிடந்தது அதனுடன் இறைவன் கருவிகளைப் பொருத்திய பிறகு உயிரின் அறிவு சற்றே விளங்கித் தோன்றலாயிற்று. இதன் பிறகு உயிர் மீண்டும் கேவலத்தை அடையாதபடி சுத்த நிலை நோக்கி முன்னேறுவதற்காக இறைவன் செய்கின்ற அருட் செயல்கள் இங்கே விளக்கப்பட்டன. கண்ட வியன் கட்டில் — கழுத்தாகிய அகன்ற இடத்தில், சூக்கம் — சூக்குமம், நுண்மை.

**வேட்கை மிகும்**
**உண்டிப் பொருட்டால் ஒரு கால் அவியாது**
**மண்டிஎரியும் பெருந்தீ மாற்றுதற்குத் திண்திறல் சேர்**
**வல்லார்கள் வல்லவகையால் தொழில் புரிதல்**
**எல்லாம் உடனே ஒருங்கிசைந்து செல் காலை**
**முட்டாமற் செய்வினைக்கும் முன் செய்வினைக்கும் செலவு**
**பட்டோலை தீட்டும் படி போற்றி**

தணியாத வேட்கையால் மண்டி எரியும் பசியாகிய பெரும் தீயைத் தணிப்பதற்கு உயிர்கள் யாவும் தம்மால் இசைந்த வகை முய்லுமாறு பணித்தான். இவ்வாறு முயல்கின்ற உயிர்களுக்குக் காலம் தவறாது முற்பிறப்பில் செய்த வினை, நுகரும் வினை, ஏறு வினை ஆகிய மூன்றுக்கும் தவறாது கணக்கு எழுதி அவ் வினைப் பயனை உரியார்க்குச் சேர்க்கும் இறைவனின் அருள் முறைமையை வணங்குகிறேன்.

உலகத்து நுகர்ச்சியும் முயற்சியும் உணவினால் உண்டாகின்றன. கொழுந்து விட்டு எரியும் எந்தத் தீயினையும் நீர் சொரிந்து முற்றிலும் அவித்து விட முடியும். பசித்தீ மட்டிலும் உண்ட பொழுது அவிந்து அதன் பின்னர் மேல் எழும். பசித்துண்டு பின்னும் பசிப்பான் மனிதன். ஆகையினால் பசியாகிய வயிற்றுத் தீத் தணிவதில்லை. அத்தகைய கொடிய தீயை அணைப்பதற்கு உயிர்களெல்லாம் பலவாறு முயல்கின்றன. சேவித்தும் சென்றிரந்தும் தெண்ணீர்க் கடல் கடந்தும் பாவித்தும் பாராண்டும் பாட்டிசைத்தும் உயிர்கள் பல்வேறு வகையால் பாடுபடுவ தெல்லாம் நாழி அரிசி உணவிற்காகவே என்பார், வல்லார்கள் வல்ல வகையால் தொழில் புரிதல் என்று குறிப்பிட்டார்.

சஞ்சிதம் பிராரத்தம் ஆகாமியம் ஆகிய மூன்று வினைகளையும் தப்பாமல் கணக்கு எழுதி அவரவர் வினைப் பயன் அவரவர்க்கே சென்று பொருந்தும்படி பேராமல் ஊட்டுகின்ற பிரான் என்பதனை உணர்த்தப் 'பட்டோலை தீட்டும் படி' என்று கூறினார்.

அப்பர் பெருமான் திருஇன்னம்பர்ப் பதிகத்தில்,

"தொழுது தூமலர் தூவித் துதித்து நின்று
அழுது காமுற்று அரற்றுகின் றாரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்
எழுதும் கீழ்க்கணக்கு இன்னம்பர் ஈசனே"

என்று அருளிய திருவாக்கை இங்கு நினைவுகூர்க.

— நட்டு ஓங்கும்

**இங்கிலைமை மானுடருக்கே யன்றி எண்ணிலா**
**மன்னுயிர்க்கும் இந்த வழக்கேயாய் — முன்னுடைய**
**நாள்நாள் வரையில் உடல் பிரித்து நல் வினைக்கண்**
**வாழ்நாளின் மாலாய் அயனாகி — நீள் நாகர்**
**வானுடர் கோமுதலாய் வந்த பெரும் பதத்து**
**நானு விதத்தால் நலம் பெறுநாள் — தான் மாள**
**வெற்றிக் கடுந்தூதர் வேகத்துடன் வந்து**
**பற்றித்தம் வெங்குருவின் பால்காட்ட — இற்றைக்கும்**
**இல்லையோ பாவி நிறவாமை என்றெடுத்து**
**நல்லதோர் இன்சொல் நடுவாகச் — சொல்லி இவர்**

செய்திக்குத் தக்க செயலுறுத்துவீர் என்று
வெய்துற்று உரைக்க விடைகொண்டு — மையல் தரும்
செக்கினிடைத் திரித்தும் தீவாயில் இட்டெரித்தும்
தக்க நெருப்புத்தூண் தழுவுவித்தும் — மிக்கு ஓங்கும்
நாராசம் காயச்சிச் செயிமடுத்தும் நா அரிந்தும்
ஈரா உன் ஊனைத் தின் என்றடித்தும் — பேராமல்
அங்கு ஆழ் நரகத்து அழுத்து வித்தும் பின்னும் தம்
வெங்கோபம் மாறாத வேட்கையராய் — இங்கொருநாள்
எண்ணி முதற் காணாத இன்னல் கடுநரகம்
பன்னெடு நாள் செல்லும் பணி கொண்டு — முன் நாடிக்
கண்டு கடன் கழித்தல் காரியமாம் என்று எண்ணிக்
கொண்டு வரு நோயின் குறிப்பறிவார் — மண்டு எரியில்
காய்ச்சிச் சுட அறுக்க கண் உரிக்க நல் நிதியும்
ஈத்துத்தாய் தந்தை தமர் இன்புறுதல் — வாய்த்த நெறி
ஓடிய தேரின் கீழ் உயிர் போன கன்றாலே
நீடு பெரும் பாவம் இன்றே நீங்கும் என — நாடித் தன்
மைந்தனையும் ஊர்ந்தோன் வழக்கே வழக்காக
நஞ்சு அனைய சிந்தை நமன் தூதர் — வெஞ்சினத்தால்
அல்லல் உறுத்தும் அருநரகம் கண்டு நிற்க
வல்ல கருணை மறம் போற்றி

*நிலைபெற்று ஓங்கும் இந்த நிலைமை மனிதர்களுக்கே அன்றி எண்ணிலாத பல உயிர்களுக்கும் முறைமையாகும். குறிப்பிடப்பட்ட காலம் முடிந்த பிறகு உயிர் உடலில் இருந்து பிரியும். நல்வினை செய்த உயிர்கள் திருமால் அயன் இந்திரன் முதலிய பதங்களைப் பெற்றுப்பல்வேறு விதமான இன்பங்களையும் துய்த்து வரும். மாளுங் காலத்து எமனின் கொடுமை மிக்க தூதர் வேகத்துடன் வந்து அவ்வுயிர்களைப் பற்றித் தம் தலைவனாகிய இயமன் முன் நிறுத்துவர். அவனும் தன் நடுவு நிலைமையால் மனமிரங்கி "பாவிகளே! இன்று வரைக்கும் உமக்குப் பிறவாமை வாய்க்க வில்லையோ?" என்று கூறித் தன் ஏவலர்களை நோக்கி "இவ்வுயிர்கள் செய்திருக்கும் வினைக்கு ஏற்ப தண்டனை வழங்குக" என்று ஆணையிடுவான். இயமனின் ஏவலர்கள், அந்தந்த உயிர் செய்த தீவினைக்கு ஏற்பச் செக்கிலிட்டு ஆட்டியும், கொழுந்துவிடும் தீயிலிட்டு எரித்தும், நெருப்புத் தூணைத் தழுவச் செய்தும், இரும்பு ஊசியைக் காய்ச்சிக் காதின் வழிச் செலுத்தியும், நாவினை அரிந்தும், அவரவர் தசையை அரித்து அவரவரையே தின்னுமாறு அடித்துத் துன்புறுத்தியும், தப்ப முடியாத கொடிய நரகங்களில் அழுந்துமாறு செய்தும், தொடக்கமும் முடிவும் காணாத கடு நரகத்தில் ஆழ்த்துவர். இத் தகைய தண்டனைகள் யாவும் உயிர்களைத் துன்புறுத்தும் நோக்கத்தோடு செய்யப் படுவதில்லை. உலகத்துத் தாய் தந்தையர் தம் மக்களுக்கு நோய் வரும்*

காலத்து மருத்துவர்களை அழைத்துப் பண்டுவம் செய்யுமாறு வேண்டுவர். மருத்துவர்களும் நோய் நாடி, அந் நோயைத் தீர்க்கும் வழி நாடிக் காய்ச்சிய இரும்புக்கோல் கொண்டு சுட்டும், கத்தியால் அறுத்தும், கண் படலத்தை உரித்தும் மருத்துவம் செய்வர். இம் மருத்துவம் துன்பம் தருவன ஆயினும் அவற்ருல் நோய் நீங்கும். ஆதலினுல் பெற்றேர் மருத்துவருக்கு நன்றி பாராட்டிப் பொருள் வழங்குவார்கள். அது போலவே நரகத் துயர் தீவினைகளைத் தீர்ப்பன. மனுநீதிச் சோழன் தன் மகன் ஓட்டி வந்த தேரின் கீழே அகப்பட்டு உயிரிழந்த பசுங்கன்றின் கொலைப் பாவம் அவனைப் பற்ருத வண்ணம் அன்றைக்கே நீங்கும்படித் தன் மைந்தனைத் தேர்க் காலில் இட்டு அன்றே கொன்றது போன்ற இயல்புடையது நரகத் தண்டனை. நஞ்சு போன்ற சிந்தனையுடைய இயம தூதர் அல்லற் படுத்துவதும் அரு நரகம் செலுத்துவதும் இறைவன் மறக்கருணையினுல், ஆகவே அந்த மறக்கருணையை வணங்குகிறேன்.

இந்தப் பகுதியில் உயிர்களின் தீவினைகளுக்கு ஏற்ப இறைவன் அவற்றை நரகத்தில் அழுத்தி மறக்கருணை காட்டுவான் என்பது விளக்கப்படுகிறது.

**— பல்லுயிர்க்கும்**
**இன்ன வகையால் இருவினைக்கண் நின்றருத்தி**
**முன்னை முதல் என்ன முதலில்லோன் — நல்வினைக்கண்**
**எல்லா உலகும் எடுப்புண்டு எடுப்புண்டு**
**செல்காலம் பின் நரகம் சேராமே நல்ல நெறி**
**எய்துவதோர் காலம் தன் அன்பரைக் கண்டு இன்புறுதல்**
**உய்யும் நெறி சிறிதே உண்டாக்கிப் - பையவே**
**மட்டாய் மலராய் வருநாளில் முன்னை நாள்**
**மொட்டாய் உருவாம் முறை போலக் கிட்டியதோர்**
**நல்ல பிறப்பில் பிறப்பித்து நாடும் வினை**
**எல்லையிரண்டும் இடையொப்பில் பல்பிறவி**
**அத்தமதில் அன்றே அளவென்று பார்த்திருந்து**
**சத்தி பதிக்கும் தரம் போறறி**

இதுவரை கூறப்பட்ட வகையிலே இறைவன் உயிர்களைக் காத்தருளி அவற்றின் கட்டு நீங்கும் வரையும் இருவினைப் பயன்களையும் அவற்றைத் துய்க்குமாறு செய்வான். தனக்கு மேல் ஒரு முதல் இல்லாத ஒப்பற்றவனுகிய சிவபெருமான் உயிர்களை நல்வினையில் செலுத்தி எல்லா உலகுகளிலும் மாறி மாறிப் பிறக்கச் செய்து, அதன் பின்னர் உயிர்கள் நரகத்தைச் சேராது நன்னெறி சேரும் நிலைக்கு உயர்த்துவான். அப்போது சிவனடியார்களைக் கண்ட உடனே சிவனையே கண்டது

போன்று அவ்வுயிர்கள் இன்புறும் அடியார் ஏவிய பணிகளை மகிழ்ச்சி யோடு நிறைவேற்றும் அளவுக்கு அவற்றுக்கு நல்லறிவு உண்டாகும். தேன் நிறைந்த மலர் மொட்டாகி அரும்பாகிப் போதாகி அதன் பின்னரே மலர்வதைப் போல இவ்வுயிர்களையும் இறைவன் படிப்படியாக முன்னேற்றுவான் பக்குவம் வாய்ந்த உயிர்களை நல்ல பிறவியில் பிறக்குமாறு செய்து நல்வினை தீவினை இரண்டிலும் உவர்ப்புத் தோன்றி, அதனால் இருவினை ஒப்பும் மலபரிபாகமும் எய்திய உயிரிடத்திலே பிறவியின் முடிவிலன்றோ வீடு பேறு என்று காலம் பார்த்திருந்து அவ்வுயிர்களிடத்துத் தன் திருவருட் சத்தியைப் பதிக்கின்ற கருணையை வணங்குகிறேன்.

உயிர்களை உய்விப்பதற்காக அவற்றை மாறி மாறிப் பிறப்பித்துப் படிமுறையால் வளர்த்து இறைவன் செய்யும் பெரும் கருணை இந்நூலின் இதற்கு முந்திய பகுதியில் விளக்கப்பட்டது. இறைவனை ஒப்பாரும் மிக்காரும் இல்லை என்பதனால் முன்னைய முதல் என்ன முதல் இல்லோன் என்று கூறினர். நல்வினைக்கண் என்றது இறைவன் உயிர்களிடத்துக் கொண்ட கருணையினால் மேற்கொண்ட ஐந்தொழில்களையும் குறித்தது. ''தாபர சங்கமங்கள் என்று இரண்டு உருவில் நின்று, மாபரன் பூசை கொண்டு மன்னுயிர்க்கு அருளை வைப்பன்'' என்பதனால் சிவனடியாரைக் கண்டு இன்புறுதல் உய்யும் நெறி எனப்பட்டது. பூ மலர்வதற்கு முன்பு மொட்டாகி அரும்பாகிப் போதாகி அதன் பின், மலர்வதைப் போல இறைவன் திருவடியை அடைவதற்கு முன்பு உயிர்கள் நல்ல குலத்தில் பிறந்து நல்லாரோடு இணங்கி நல் ஒழுக்கத்தில் பயிலுதல் இன்றியமையாததாயிற்று.

இருவினை ஒப்பு என்பது இன்பத்திலும் துன்பத்திலும் ஒப்ப உவர்ப்பு நேர்தல். இது தன் முனைப் பற்றுத் திருவருளையே பற்றி ஒழுகுங்கால் அன்றி எய்தவராது. இருவினை ஒப்பும் மலபரிபாகமும் எய்திய உயிர்களிடம் இறைவனின் திருவருட்சத்தி பதியும். இது சத்தி நிபாதம் எனப்படும். அற்றம் — முடிவு. இங்கு எதுகையின் பொருட்டு அற்றம் அத்தம் ஆயிற்று.

— முத்திதரு

**நன்னெறி விஞ்ஞானகலர் நாடுமலம் ஒன்றினையும்**
**அங்கிலையே உள்நின்று அறுத்தருளிப் - பின் அன்பு**
**மேவா விளங்கும் பிரளயா கலருக்குத்**
**தேவாய் மலகன்மம் தீர்த்தருளிப் - பூவலயம்**
**தன்னின்று நீங்காச் சகலர்க்கு அவர்போல**
**முன்னின்று மும்மலம் தீர்த்து ஆட்கொள்கை — அன்னவனுக்கு**
**ஆதி குணமாதலினால் ஆடுந் திருத் தொழிலும்**

சோதி மணிமிடற்றுச் சுந்தரமும் பாதியாம்
பச்சையிடமும் பவளத் திருச்சடைமேல்
வைச்ச நதியும் மதிக்கொழுந்தும் — அச்சம் அற
ஆடும் அரவும் அழகார் திருநுதல் மேல்
நீடுருவ வன்னி நெடுங்கண்ணும் கேடில்லயம்
கூட்டும் தமருகமும் கோல எரியகலும்
பூட்டரவக் கச்சும் புலியதளும் — வீட்டின்ப
வெள்ளத்தழுத்தி விடுந்தாளி னும்அடியார்
உள்ளத்தினும் பிரியா ஒண்சிலம்பும் கள்ளவினை
வென்று பிறப்பறுக்கச் சாத்திய வீரக் கழலும்
ஒன்றும் உருத் தோன்றுமல் உள்ளடக்கி என்றும்
இறவாத இன்பத்து எமைஇருத்த வேண்டிப்
பிறவா முதல்வன் பிறந்து நறவாருந்
தாருலா வும்புயத்துச் சம்பந்த நாதன்என்று
பேரிலா நாதன்ஒரு பேர்புனைந்து - பாரோர்தம்
உண்டி உறக்கம் பயம்இன்பம் ஒத்தொழுகிக்
கொண்டு மகிழ்ந்த குணம் போற்றி

மேற்கூறியவாறு சந்நிதிபாதம் அடைந்த உயிர்களுக்கு முத்திப் பேறு வழங்கும் போது, இறைவன் அவ்வவ் வுயிரின் தகுதிக்கு ஏற்பவே அருள் பாலிக்கிறன். விஞ்ஞானகலர்களாகிய ஒரு மலம் உடையார்க்கு உள் நின்று ஆணவ மலத்தை அறுத்து அருளுகிறன். அன்பு பொருந்திய பிரளயாகலர் ஆகிய இரு மலம் உடையார்க்கு மானும் மழுவும் தாங்கிய தெய்வத் திருவடிவோடு முன் தோன்றி அவர்களுடைய ஆணவ மலம் கன்ம மலம் ஆகியவற்றைத் தீர்த்தருளுவான். உலகியலில் உழன்று கொண்டிருக்கின்ற சகலராகிய மும்மலம் உடையார்க்கு அவர்களைப் போலவே மானுடச் சட்டை சாத்தி குருவடிவாக எழுந்தருளி ஆணவம் கன்மம் மாயை ஆகிய மும்மலங்களையும் தீர்த்து ஆட்கொள்வான். இவ்வாறு ஆட்கொள்ளுவது இறைவனுக்கு என்றும் உள்ள இயல்பு ஆதலின் அவன் அழகிய சிற்றம்பலத்தில் நின்று ஆடுகின்ற திருக்கூத்தை யும், ஒளி பொருந்திய நீலமணி மிடற்றையும், தனது வடிவில் ஒரு பாதி யைக் கொண்ட அன்னை சிவகாமியைத் தாங்கிய இடப் பாகத்தையும், பவளம் போன்ற மேனியையும், திருச்சடைமேல் தாங்கிய கங்கையையும், பிள்ளைப் பிறையையும், திரு மேனி மீது அச்சமின்றி ஆடுகின்ற பாம்பினை யும், அழகிய நெற்றியின் மீது நீண்டு இலங்கும் நெருப்பு விழியும், தாளம் தவருத தமருகம் என்னும் உடுக்கையும், கையில் ஏந்திய தழலும் இடையில் கட்டிய புலித் தோலும், அதன் மேல் பூண்ட பாம்புக் கச்சும் வீட்டின்ப வெள்ளத்து அழுத்தும் திருத்தாளையும் அடியார் உள்ளத் திலும் நீங்காத ஒளி மிக்க சிலம்புகளும் உயிர்களைப் பிறப்புக்கு உட்

படுத்தும் வினை களைவென்று அவற்றை உய்விக்கச் சூளுரைத்துச் சாத்திய வீரக் கழலும் ஆகிய ஒப்பற்ற அடையாளங்கள் வெளிப்பட்டுத் தோன்றாமல் உள்ளே அடக்கி, ஒருபோதும் நீங்காத பேரின்பத்தில் எம்மை இருத்துவதற்காகப் பிறவாத பெரியோன் இன்று எம் பொருட்டுப் பிறந்து வந்தான் என்று கூறும் படி தேன் பிலிற்றும் மாலை தாங்கி ஒருநாமம் இல்லாதான் மறை ஞான சம்பந்தன் என்று ஒரு திரு நாமம் புனைந்து, மண்ணுலக மக்களைப் போல் உணவு உறக்கம் அச்சம் இன்பம் ஆகியவை கொண்டு ஒத்து ஒழுகி எம்மை ஆட்கொள்ள வந்த உயர்ந்த பண்பினை வணங்குகிறேன்.

ஒரு மல முடையார் விஞ்ஞானகலர் எனப்படுவர். இவர்களுக்கு ஆணவ மலம் மட்டிலுமே உண்டு. இவர்களுக்கு அருள் பாலிக்கும் போது இறைவன் உயிர்க்குயிராய் உள் நின்று உணர்த்துவான். இது, தன்மையில் உணர்த்துவது இருமலமுடையார் பிரளயாகலர் எனப் படுவர். இவர்களுக்கு அருள் புரியும் போது இறைவன் முக்கண்ணும் மணிமிடறும் மான் மழுவும் கூடிய தன் திருவடிவோடும் முன்னிலையில் நின்று அருளுவான். மும்மலமுடைய சகலருக்கு மானுட வடிவம் தாங்கி, குருவாக எழுந்தருளி வந்து அருளுவான்.

ஆசிரியர் உமாபதி சிவத்துக்கு ஞான குருவாக விளங்கியவர் மறை ஞான சம்பந்தர். இறைவனே அவ்வாறு குரு வடிவு கொண்டு எழுந்தருளி வந்து அருள் பாலித்தான் எனக் கூற வருகிற ஆசிரியர் இந்த இடத்தில் இறைவனின் திருவடிவத்தை மிக விரிவாக வருணித்து அத்தகையவனே தமக்கு ஞான ஆசிரியராக மறை ஞான சம்பந்தர் என்னும் திருப்பெயர் கொண்டு எழுந்தருளினான் என்று கூறுகின்றார்.

இடப்பால் பச்சை நிறம் உடையது என்பதனால் உமையொரு பாகத் திருமேனி குறிக்கப்பட்டது. வைத்த என்பது எதுகை நோக்கி வைச்ச என்று திரிந்தது. கேடில் லயம் என்றது குற்றமற்ற தாள முறையினை. எல்லை யற்ற தாளம் என்பதும் பொருந்தும். இறைவனது தூக்கிய திருவடியே பிறவியை வேரறுக்குமாதலால் வீட்டின்ப வெள்ளத்து அழுத்திவிடும் தாள் என்று கூறினார். ஒன்றியிருந்து வழிபடும் அடியார் உள்ளத்தில் இறைவனின் திருச்சிலம்போசை ஒலிக்கும் என்பர். இறைவனது தாளினும் அடியார் உள்ளத்தினும் பிரியாத ஒண்சிலம்பு என்றது 'சிற்றம்பலத்தும் என் சிந்தையின் உள்ளும்' என்ற திருக்கோவையாரை நினைவூட்டுவது.

பிறவா முதல்வன் பிறந்து என்றது குருவியின் பெருமையை உணர்த்துவதற்காகவே யன்றி, சிவபெருமான் மானிடனாகப் பிறந்தான் என்ற கருத்தைத் தராது. குருவாக வந்து அருளும் போது இறைவன்

அதிட்டித்து நின்றும் ஆவேசித்து நின்றும் அருள்பாலிப்பனே அல்லாது அவன் கரு மேனி தரிப்பவன் என்றல் பொருந்தாது. ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்றுமில்லான் ஆகிய இறைவன் தம் பொருட்டு எளியனுகி சம்பந்தநாதன் என்னும் பெயர் புனைந்து வந்தான் என்று ஆசிரியர் நன்றி உணர்வோடு குறிப்பிடுகிறுர்.

— மிண்டாய
ஆறு சமயப் பொருளும் அறிவித்து அவற்றில்
பேறு இன்மை எங்களுக்கே பேருக்கித் தேருத
சித்தம் தெளியத் திருமேனி கொண்டுவரும்
அத்தகைமை தானே அமையாமல் — வித்தகமாம்
சைவ நெறியிற் சமய முதலாக
எய்தும் அபிடேகம் எய்துவித்துச் செய்யதிருக்
கண்ணருளால் நோக்கிக் கடியபிறப் பாற்பட்ட
புண்ணும் இருவினையும் போய்அகல — வண்ணமலர்க்
கைத்தலத்தை வைத்தருளிக் கல்லாய நெஞ்சுருக்கி
மெய்த் தகைமை யெல்லாம் விரித்தோதி – ஒத்தொழுகும்
சேண்ஆர் இருள்வடிவும் செங்கதிரோன் பால்நிற்பக்
காணு தொழியும் கணக்கேபோல் — ஆணவத்தின்
ஆதி குறையாமல் என்பால் அணுகாமல்
நீதி நிறுத்தும் நிலை போற்றி

தருக்குடைய புறச் சமயங்கள் ஆறும் கூறுகின்ற பொருளை எனக்கு அறிவித்து அவற்றுல் பயனில்லை என்ற உண்மையையும் தெரிவித்து, சித்தத்திலே தெளிவு உண்டாகுமாறு திருமேனி கொண்டு தோன்றி அத்தேடு அமையாமல், மேன்மை மிக்க சைவத் திரு நெறியில் சார்வித்து சமயம் முதலாகிய நால்வகைத் தீக்கைகளையும் செய்வித்து, செம்மையான திருக்கண் நோக்கத்தைப் பதிவித்துக் கொடிய பிறப்பினுல் ஏற்பட்ட துயரமும் இரு வினையும் போய் அகலுமாறு அழகிய தாமரை மலர் போன்ற திருக்கையைத் தலை மீது வைத்து அருள் பாலித்து கல் போன்ற மனத்தை உருகுமாறு செய்து முப்பொருளின் இயல்பெல்லாம் விரித்தோதிப் பரந்து கிடக்கும் இருள் கதிரவன் தோன்றிய உடனேயே அப் பேர் ஒளியால் அடங்கி ஒழியும் தன்மை போல் என்னைப் பற்றி நிற்கும் ஆணவத்தை நிலை பேறு அழியாமலும் அதே நேரத்தில் அது என்னைப் பற்றுமலும் செய்கின்ற நீதியை நிலை நிறுத்துகிற பெருந்தகைமையை வணங்குகிறேன்.

புறச் சமயங்கள் ஆறு என்றுரேனும் முக்கூற்றுப் புறச் சமயங்கள் ஆறு என்று பொருள் கொள்க. மிண்டாய ஆறு சமயம் என்பது அவை வீடு பேற்றிற்கு வழி காட்டாமல் தருக்கித் திரியவே வழி காட்டுதலின்

என்க. கற்க இடர்ப் பட்டு மிகக் கற்ற எல்லாமும் கற்றவர் பால் தருக்க மிட்டு வாதிடுவதற்கு அன்று என்று விளக்கினர். புறச் சமயங்களின் பேறு இன்மையை மாற்றிச் சித்தாந்த சைவத்தின் பேற்றினை வழங்கினர் ஆசிரியர் என்கிறார்.

உலகத்துப் பொருள்களில் மயங்கி ஒன்றை விட்டு ஒன்றைப் பற்றி அலைகின்ற சித்தம் தெளியுமாறு திருமேனி கொண்டு எம் முன் எழுந்தருளிச் சைவ நெறியில் செலுத்தினர்.

வித்தகமாம் சைவ நெறி என்பது பிற சமயங்களுக்கு இல்லாத உயர்வு சைவத்திற்கு உண்டு என்பதைக் குறிப்பிட்டதாகும். 'வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தத் திறன்' என்று சிவப் பிரகாசத்துள் கூறியது காண்க.

தீக்கை என்பது மலத்தைக் கெடுத்து ஞானத்தைக் கொடுப்பது என்று பொருள் படும். இது பல வகைப்படும். ஆயினும் சமய தீக்கை விசேட தீக்கை, நிர்வாண தீக்கை, ஆச்சாரிய அபிடேகம் ஆகிய நான்குமே சிறப்பாக் கூறப்படும். எனவே சமயம் முதலாக எய்தும் அபிடேகம் எய்துவித்து என்றார்.

நயன தீக்கை, பரிச தீக்கை என்பவற்றைக் குறிப்பிட திருக் கண் அருளால் நோக்கி .. கைத்தலத்தை வைத்தருளி என்றும் கூறினர். கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன் கருணை வெள்ளத்து அழுத்துகின்ற திருவருளை கல்லாய நெஞ்சு உருக்கி என்றார். முப்பொருளையும் பொது உண்மை என்று இரண்டு இயல்பாய் உணர்த்திய ஆசிரியரின் பெருமையை மெய்த்தகைமை எல்லாம் விரித்தோதி என்றார்.

ஆணவ மலம் முத்தி நிலையிலும் தன் வலிமை கெட்டு நிற்பதன்றி, முற்றிலும் அழிவதில்லை. ஆதலினல் ''ஆணவத்தின் ஆதி குறையாத'' என்றார். கதிரவன் ஒளியின் முன் இருள் அடர்த்து நிற்பதில்லை; ஆயினும் அழிந்து போவது மில்லை. அது போன்றதே ஆணவம் என்பதற்காகக் கதிரவன் முன்னிலையில் இருள் என்பதனை இங்கே உவமையாக எடுத்துக் கூறினர்.

— மேதக்கோர்

**செய்யும் சரியை திகழ்கிரியா யோகத்தால்**
**எய்துஞ்சீர் முத்தி பதம் எய்துவித்து - மெய்யன்பால்**
**காணத் தகுவார்கள் கண்டால் தமைப் பின்பு**
**நாணத் தகும்ஞான நன்னெறியை - வீணே**
**எனக்குத் தரவேண்டி எல்லாப் பொருட்கும்**
**மனக்கும் மலரயன் மால் வானேர் - நினைப்பினுக்கும்**

தூரம் போலே அணிய சுந்தரத்தான் என் தலை மேல்
ஆரும்படி தந்து அருள் செய்த பேராளன்
தந்த பொருள் ஏதென்னில் தான் வேறு நான் வேறாய்
வந்து புணரா வழக்காக்கி முந்தி என் தன்
உள்ளம் என்றும் நீங்காது ஒளித்திருந்து தோன்றி நிற்கும்
கள்ளம் இன்று காட்டும் கழல் போற்றி

மேன்மையுடையோர் இயற்றும் சரியை, கிரியை, யோகம் ஆகிய மூன்று நிலைகளிலும் ஒழுகி அவற்றுக்குரிய பத முத்திகளை அடைந்தோர்க்கு, அதனினும் உயரியதாகிய ஞான நன்னெறியை இறைவன் காட்டுகின்றான். இஞ்ஞான நன்னெறியைக் கண்டவர்கள் அதற்கு முன்பு தாம் இருந்த நிலையை எண்ணி நாணும் அளவுக்கு, உயரிய நெறி. அத்தகைய நெறியை ஒன்றுக்கும் பற்றாத எனக்கும் தர எண்ணி எல்லாப் பொருள்களுக்கும் மனத்துக்கும் அயனுக்கும் திருமாலுக்கும் வானோர் நினைப்பினுக்கும் எட்டாதவன் போல நின்றும் யாவற்றிலும் உயிர்க்கு உயிராகக் கலந்து நிற்கும் அவனுடைய அழகிய திருத்தாளை என் தலை மீது சூட்டி யருளிய பேரருளாளன். அவன் எனக்குத் தந்த கொடை என்னவெனில் தான் வேறு நான் வேறாய் இருந்து இப்போது பொருந்தியதில்லை என்ற உண்மையை எனக்கு உணர்த்தியதுவே. என்றென்றும் என்னுடைய உள்ளத்தில் ஒளிந்திருந்தும் என்னால் காண இயலாமல் இருந்தும் இன்று வெளிப்பட்டு அருளிய கள்ளத் தன்மையைக் காட்டிய திருவடிகளுக்கு என் வணக்கம் உரியது.

சைவ சமயம் நால்வகை நெறிகளை வலியுறுத்துகிறது அவை சரியை கிரியை யோகம் ஞானம் என்பன. இவற்றுள் முந்தைய மூன்றும் பத முத்திகளையும் நான்காவதாகிய ஞானம் பர முத்தியையும் தரும் என்பர். ஞான நெறியை எய்தியவர்கள் அதற்கு முன்பு தாமிருந்த நிலைக்கு நாணுவார்கள். ஆகையினால் 'கண்டால் தமைப் பின்பு நாணத் தகும் ஞான நன்னெறி' என்று கூறினார். யாவற்றிற்கும் எட்டா திருப்பது போலவே காட்டி அவற்றுள் எல்லாம் உடனாய் நின்று அருளுவதால் 'தூரம் போலே அணிய சுந்தரத் தாள்' என்று கூறினார். தன்முனைப்போடு கூடிய நிலையிலே புலப்படாமல் இருந்து திருவருள் வழிப்பட்ட நிலையிலே விளங்கித் தோன்றுவது இறைவனின் தன்மை ஆதலால் 'ஒளிந்திருந்து தோன்றி நிற்கும் கள்ளம் என்றார்.

— வள்ளன்மையால்
தன்னைத் தெரிவித்துத் தன்தாளின் உட்கிடந்த
என்னைத் தெரிவித்த எல்லையின் கண் — மின் ஆரும்
வண்ணம் உருவம் மருவும் குணமயக்கம்

**எண்ணும் கலைகாலம் எப்பொருளும் - முன்னம் எனக்கு**
**இல்லாமை காட்டிப் பின்பு எய்தியவா காட்டி இனிச்**
**செல்லாமை காட்டும் செயல் போற்றி**

*தனது பெருங் கருணையினால் தன்னை எனக்கு உணர்த்தி நான் தனது அடியவன் என்பதையும் உணர்த்திய போது, மின்னல் போல் தோன்றி அழிகின்ற யாக்கையும் அதனோடு கூடிய மயக்கங்களும் என் அறிவுக்குத் துணையாய் நின்ற கலை காலம் முதலிய தத்துவங்களும் பொருந்தாத தன்மையான கேவல நிலையையும், பின் அவை வந்து பொருந்திய சகல நிலையையும் உணர்த்தி இனி மேல் அவை என்னை வந்து பொருந்தாத வண்ணம் சுத்த நிலை எய்திய தன்மையையும் உணர்த்தியருளிய பேராற்றலை வணங்குகிறேன்.*

*தோற்றமில் காலமாய் ஆணவத்தால் கட்டுண்டு அறியாமையே வடிவாகக் கிடந்த உயிருக்கு இறைவன் பொற்புடைய மாயையைப் புணர்ப்பித்து சகல நிலையில் செலுத்தி அதன் பின் படிமுறையே வளர்த்து சுத்த நிலையை அருளுகிறான். இவ்வாறு அருளுக்கு உரியதான உயிர் மீளவும் பிறவித் துன்பத்துக்கு ஆட்படுவதில்லை. அந்தப் பெருங் கருணையை நினைவு கூர்ந்து வணங்குகிறார் ஆசிரியர்.*

**— எல்லாம் போய்த்**
**தம்மைத் தெளிந்தாராய்த் தாமே பொருள் ஆகி**
**எம்மைப் புறம் கூறி இன்புற்றுச்—செம்மை**
**அவிகாரம் பேசும் அகம் பிரமக் காரர்**
**வெளியாம் இருளில் விடாதே—ஒளியாய்நீ**
**நின்ற நிலையே நிகழ்த்தி ஒரு பொருள் வேறு**
**இன்றியமையாமை எடுத்து ஓதி ஒன்றாகச்**
**சாதித்துத் தம்மைச் சிவமாக்கி இப்பிறவிப்**
**பேதம் தனில் இன்பப் பேதம் உறுப் — பாதகரோடு**
**ஏகமாய்ப் போகாமல் எவ்விடத்தும் காட்சி தந்து**
**போகமாம் பொன் தாளின் உள் புணர்த்தி — ஆதியுடன்**
**நிற்க அழியா நிலை இதுவே என்றருளி**
**ஒக்க வியாபகம் தன் உள் காட்டி — மிக்கோங்கும்**
**ஆனந்த மாக் கடலில் ஆரா அமுது அளித்துத்**
**தான் வந்து செய்யும் தகுதியினால்—ஊன் உயிர் தான்**
**முன் கண்ட காலத்தும் நீங்காத முன்னோனை**
**என்கொண்டு போற்றிசைப்பேன் யான்.**

*எல்லாப் பொருள்களும் பொய் என்று கூறியும்; யாம் அவற்றை விட்டு நீங்கினோம் என்றும், எமக்கு மேம்பட்ட பொருள் வேறு ஒன்று இல்லை என்றும், சைவ சித்தாந்தச் செந்நெறியைப் புறங் கூறித் திரிவாராயும், அதிலேயே மகிழ்ச்சி காண்பவர்களாகவும் பிரமப்*

பொருளைப் போன்றே தமக்கும் விகாரம் இல்லை என்று கூறித் தாமே பிரமம் என்று கூறி வருபவர்களின் செறிந்த இருளுக்குள் என்னைச் செல்ல விடாது தடுத்து இறைவனாகிய நீயே அறிவொளியாய்த் திகழ்கின்ற தன்மையினை உணர்த்தி எனக்கு வழி காட்டினாய், அது மட்டும் அல்லாமல் ஒப்பற்ற பொருளாகத் தாம் விளங்குவதாகக் கூறியும், யாம் இறைவனோடு ஒன்றுவோம் யாமே சிவம் என்றும் இப்பிறவியிலேயே பேரின்ப வாழ்வைப் பெறத்தவறிய சிவசமவாதிகளாகிய பாதகரோடு நான் சேர்ந்து விடாதவாறு என்னைத் தடுத்தாட் கொண்டாய். எங்கும் நீக்கமற நிற்கும் உன்னுடைய பெரு நிலையைக் காட்டி அழிவில்லாத பேரின்ப வீட்டினை வழங்கும் உன் திருவடி மலர்களில் என்னை ஆட்படுத்தி அழியாத வீட்டு நிலை இதுவே என்று உணர்த்தி, உனது பேரறிவுள் என் சிற்றறிவு அடங்கி நிற்குமாறு அருள் பாலித்து நாளுக்கு நாள் வளர்ந்தோங்கும் ஆனந்தப் பெருங் கடலில் விளைகின்ற அமுதத்தை எனக்கு வழங்கிக் காத்தருளி, நான் தளைப்பட்டுக் கிடந்த காலத்தும் என்னை விட்டு நீங்காது என்னைக் காத்தருளிய இறைவனை நான் எவ்வாறு புகழ்ந்து போற்றுவேன்?

அகம் பிரமக்காரர் என்று குறித்தது ஏகான்ம வாதிகளை. அவர்களோடு சேர்ந்து பழி நெறியில் படராமல் காத்தது இறைவன் திருவருளே என்று ஆசிரியர் போற்றுகிறார். முத்தி நிலையில் உயிர் சிவமாகும் என்று கூறும் சிவசமவாதிகளோடு கூடாமல் தன்னைக் காத்ததும் இறைவனின் திருவருளே என்று நன்றி பாராட்டுகிறார். சைவ சித்தாந்தம் கூறும் முத்திப் பேறு என்பது உயிர் இறைவனின் திருவடி நிழலில் இருந்து, என்றென்றும் மாறாத பேரின்பத்தை நுகர்வதே என்பதை உணர்த்தி யருளிய குரு வடிவில் எழுந்தருளி வந்த இறைவனை எவ்வளவு போற்றினாலும் தகும். ஆகையினால் 'என் கொண்டு போற்றிசைப்பேன் யான்' என்று உருகி வணங்குகிறார் ஆசிரியர்.

**போற்றி திருத்தில்லை போற்றி சிவபோகம்**
**போற்றி அவன் மெய்ஞ்ஞானப் புண்ணிய நூல் போற்றி எங்கள்**
**வெம்பந்த வாழ்க்கை விட வேறாய் வந்து உள் நின்ற**
**சம்பந்த மாமுனி பொன் தாள்**

திருத்தில்லை நகருக்குப் போற்றி! தில்லையில் கோயில் கொண்ட இறைவன் தந்தருளிய சிவ போகத்தைப் போற்றுகிறேன். இறைவனின் மெய்ஞ்ஞான விளக்கங்களை எடுத்து உரைக்கும் அருள் நூல்களுக்குப் போற்றி! வெப்பமுடைய பிறவியை வேரறுக்க என்னுள் ஒன்றாய் உடனாய் வேறாய் நின்று என்னை ஆண்டு கொண்ட மறைஞான சம்பந்தப் பெருமுனிவரின் திருவடிகளுக்குப் போற்றி!

உ

சிவமயம்

# கொடிக் கவி

கொடிக்கவி என்னும் இந்நூல் மெய்கண்ட சாத்திரங்களுள் பதினொன்ருவதாக வைத்து எண்ணப்படுவது. இது மொத்தம் நான்கு பாடல்கள் மட்டிலுமே கொண்டது. இதன் முதற் பாடல் கட்டளைக் கலித்துறை யாப்பிலும், மற்றைய மூன்று பாடல்களும் வெண்பா யாப்பிலும் அமைந்தவை. அளவில் மிகச் சிறியதான இந்த நூல் தனிச் சாத்திர நூலாகவே கருதப்படுகிறது. இதனை இயற்றி அருளியவர் உமாபதி சிவம்

இந்நூல் எழுந்தது பற்றி ஒரு வரலாறு கூறப்படுகிறது. ஆசிரியர் உமாபதி சிவம் தில்லை வாழ் அந்தணருள் ஒருவர். அருள் நூல்களிலும் வேதத்திலும் தேர்ந்த பயிற்சியுடையவர். இவருடைய எல்லையற்ற கல்வியினுலும் ஒழுக்கத்தினுலும் பல்லக்கில் செல்லவும், பகல் விளக்கு எடுக்கவும், சின்னங்கள் பணிமாறவும் உரிமை பெற்றிருந்தார். ஒரு நாள் அவ்வாறு அவர் பல்லக்கில் செல்லும் போது சந்தான குரவருள் மூன்ருமவராகிய மறைஞானசம்பந்தர் உமாபதி சிவத்தை நோக்கி ''பட்ட கட்டையில் பகற் குருடு போகிறது பார்'' என்று குறிப்பிட்டார். பல்லக்கு பட்ட மரத்தால் அமைக்கப் பட்டது என்பதையும், பகலிலும் பணியாளர்கள் விளக்கேந்தி முன் செல்வதால் இவரைப் பகற்குருடு எனவும் எள்ளலாகக் குறிப்பிட்டார்.

இச்சொற்களைக் கேட்டவுடன் ஞானம் கைவரப் பெற்றவராய்ப் பல்லக்கிலிருந்து இறங்கி மறைஞானசம்பந்தரைச் சென்று வணங்கி அவரைத் தனது ஞான ஆசிரியராக ஏற்றுக் கொண்டார் உமாபதி சிவனர். ஒரு முறை மறைஞானசம்பந்தர் தில்லை நகரின் தெருவில் நெசவுக்காகப் பாவாற்றிக் கொண்டிருந்தவர்களிடம், அவர்கள் வைத்திருந்த உப்பில்லாத கஞ்சியைத் தம் கைகளில் வாங்கி ஏந்திக் குடித்தார். அப்போது அவர் புறங்கை வழியே ஒழுகிய மிச்சிலை, ஆசிரியர் உமாபதிசிவம் ஞான ஆசிரியருடைய திருவருட்பிரசாதம் என்று ஏற்று அருந்தினர்.

இதனைப் பொருத தில்லை வாழ் அந்தணர்கள் தாழ்ந்த குலத்தவர் தந்த கஞ்சியை உண்டதனல் ஆசிரியர் உமாபதி சிவம் சாதி ஆசாரத் தினின்றும் வழுவினர் என்று குற்றம் சாட்டி அவரைத் தம் சாதியினின்றும் நீக்கி வைத்தனர் அதன் பின் ஆசிரியர் உமாபதி சிவம் தில்லையை அடுத்த கொற்றவன்குடியிலே மடம் அமைத்து வாழ்ந்திருந்தார்.

அப்போது தில்லைத் திருக்கோவிலில் திருவிழாத் தொடங்கிற்று. அந்தணர்கள் கொடியேற்ற முனைந்தனர். எவ்வளவு முயன்றும் கொடி ஏறவில்லை. அந்நிலையில் அம்பலவாணப் பெருமான் திருவருளால் ''உமாபதி சிவம் வந்தால் கொடி ஏறும்'' என்று விண்ணிலே ஒரு திருவாக்கு எழுந்தது. அதனைக் கேட்டு அஞ்சிய அந்தணர்கள் ஆசிரியர் உமாபதி சிவத்தை அணுகித் தங்கள் செயலுக்கு வருந்தி மன்னிப்புக் கேட்டு அவரைத் தக்க சிறப்புக்களுடன் தில்லைக்கு அழைத்து வந்தனர்.

திருக்கோவிலின் முன்பு வந்து கொடி மரத்தின் அருகே நின்று இக் கொடிக் கவியின் முதலாவது பாடலை உமாபதி சிவம் அருளிச் செய்த அளவிலே தடை ஏதுமின்றிக் கொடி தானாக மேல் ஏறிற்று. அதன் பின்னர் அடுத்த மூன்று பாடல்களையும் அருளிச் செய்து உமாபதி சிவம் நூலை நிறைவு செய்தார். எனவே இந்நூல் கொடிக் கவி அல்லது கொடிப் பாட்டு என்று வழங்கலாயிற்று.

**1 ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றே இடம் ஒன்று மேலிடில் ஒன்று**
**ஒளிக்கும் எனினும் இருள் அடராது உள் உயிருக்கு உயிராய்த்**
**தெளிக்கும் அறிவு திகழ்ந்து உளதேனும் திரிமலத்தே**
**குளிக்கும் உயிர் அருள் கூடும் படி கொடி கட்டினனே.**

சிவஞானப் பேரொளிக்கும் ஆணவமாகிய காரிருளுக்கும் இடம் கொடுத்து நிற்பது உயிர் ஒன்றே. இவ்வுயிரில் பதிஞானம் மேலிட்டு நின்றால் ஆணவம் ஒளித்து நிற்கும். ஆணவ மலம் மேலிட்டு நின்றால் ஞானப் பேரொளி விலகி நிற்கும். ஆயினும் இருள், ஒளியை அடர்த்து எழுகின்ற ஆற்றலை உடையதன்று. உயிர்களுக்கு இறைவன் திருவருளால் சற்றே அறிவு விளங்கித் தோன்றுமாயினும் உயிர்களின் ஆணவ மலச் சார்பால் அவை மும்மலங்களுக்குள் மூழ்கிக் கிடக்கின்றன. அவற்றிலிருந்து உயிர்கள் தம்மைத் தாமே விடுவித்துக் கொள்ளும் வலிமையற்றன. இவ் வுயிர்களை மும்மலங்களிலிருந்து விடுவித்துத் தீக்கை முறைகளின்படி செலுத்தித் திருவருட் பேரொளியிலே கூட்டும் படிக்குக் கொடி உயர்த்தினேன்.

அரசன் ஒருவன் கொடி கட்டி ஆளுகிறான் என்றால், அவனுடைய ஆணை அந்த நாட்டில் வாழும் உயிர்களைக் காப்பதற்காகத் தடையற்று நிகழ்ந்தேறுகிறது என்று பொருள். இவ்வாறு கொடி உயர்த்திய மன்னவன் குடிமக்கள் தன்னால், தன் பரிசனத்தால், கள்வரால், உயிர் தம்மால், ஊனமிகு பகைத்திறத்தால் வருகின்ற அச்சங்களைப் போக்கி ஆட்சி புரிகிறான்.

திருக்கோவிலில் நடைபெறுகிற திருவிழாக்களுக்கு முன்னதாக நிகழும் கொடியேற்றம், இறைவன் திருவருள் ஆணை வழி உயிர்களை எல்லாம் இடர்க் கடலினின்றும் ஏற வாங்கிப் பேரின்ப வழியிலே

செலுத்துவான் என்பதற்கு உரிய குறியீடாகும். சிவபெருமானின் திருக் கோயில்களிலே உயர்த்தப்படும் கொடி 'சேஉயரும் திண்கொடி' என்று திருஞான சம்பந்தரால் சிறப்பித்து அருளப்படும் விடைக் கொடி.

ஒளி எனப்பட்டது இங்கு பதிஞானத்தைக் குறித்து நின்றது. இருள் என்றது இரு பொருளையும் காட்டாத தன்மையுடைய ஆணவ மலத்தினை. இவ்விரண்டும் தங்குவதற்குரிய இடம் உயிர் ஆகிய ஆன்மா ஒன்றே. இரு இயல்புகள் ஓரிடத்திலே கூடி நிற்குமா எனின், ''இருளில் இருளாகி எல் இடத்தில் எல்லாம், பொருள்கள் இலதோ புவி'' என்று திருவருட்பயன் உயிரவை நிலையை உணர்த்திற்று.

உயிரைப் பற்றும் இருள் பேரறிவுப் பிழம்பாகிய இறைவனைப் பற்றாது என்பதையும், இறைவனின் திருவருள் பதிந்த உயிரையும் பற்றாது என்பதனையும் 'ஒன்று மேலிடில் ஒன்று ஒளிக்கும் எனினும் இருள் அடராது' என்ற சொற்களால் விளக்கினார்.

உயிர்க்கு உயிராக நிற்கும் இறைவன் உயிரை விட்டு நீங்கா திருந்தும் உயிர் எவ்வாறு இருளில் அழுந்திற்று என்ற வினாவிற்கு ''உள்ளத்துள் நிற்றியேனும் உயிர்ப்புளே வருதியேனும், கள்ளத்துள் நிற்றியம்மா யாங்ஙனம் காணுமாறே'' என்ற அப்பர் பெருமான் திருவாக்கே விடையாயிற்று. தோன்றாத் துணையாக இறைவன் உயிரோடு இருந்தும் உயிர் ஆணவத்தால் மறைக்கப்பட்டு மும்மலங் களிலும் மூழ்கிக் கிடக்கிறது.

அதனைப் படிமுறையே முன்னேற்றிச், சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நெறிகளில் செலுத்தி தீக்கை வகைகளையும் அருளி உயிர் அருளோடு கூடும்படி இக்கொடியை ஏற்றினேன்.

**2 பொருளாம் பொருள் ஏது போது ஏது கண் ஏது**
**இருளாம் வெளிஏது இரவு ஏது அருளாளா!**
**நீபுரவா வையம் எலாம் நீ அறியக் கட்டினேன்**
**கோபுர வாசல் கொடி**

மெய்ப் பொருளாகிய பொருள் எது? அப்பொருளில் நின்றும் வெளிப்படுகின்ற ஒளிக்கற்றையாகிய அருள் எது? அந்த ஒளியிலே காணும் கண் எது? அந்தக் கண்ணை மறைத்து நிற்கும் இருளாகிய வெளி எது? இரவு தான் எது? அருள் நிறைந்த பரம் பொருளே நீ காக்கின்ற இந்த உலகம் முழுவதும் இவற்றை எல்லாம் அறியுமாறு உன்னையே சான்றாகக் கொண்டு உன் திருக்கோபுர வாயிலில் இக்கொடியை ஏற்றினேன்.

மெய்ப் பொருளாக விளங்குவதும் என்றும் நிலைத்து இருப்பதும் உயிருக்கு உயிராகவும் பேரின்ப வடிவமாகவும் உள்ளது தனக்கு வேறு ஒரு முதல் இல்லாததாகிய சிவ பரம் பொருள் ஆகும்.

போது என்பது இங்கு கிரணம் என்று பொருள் கொள்ளப்படும். சிவ பரம் பொருளாகிய அறிவுப் பிழம்பு கதிரவன் எனக் கொண்டால் அக் கதிரவனை விட்டு எப்போதும் நீங்காமல் நிற்கும் ஒளியாக முதல்வனது சிற்சத்தி கொள்ளப்படும்.

ஒளியினால் பயன் கொள்ளுவது கண். இவ்விடத்தில் கண் உயிரைக் குறித்தது. ஏனெனில் உயிராகிய ஆன்மாவே இறைவன் திருவருளால் பயன் கொள்ளத் தக்கது இருளாம் வெளி என்ற சொல்லாட்சி அருளாம் வெளி என்ற ஒன்று உண்டு என்பதைக் குறிப்பால் உணர்த்திற்று. இருளாம் வெளி என்ற சொற்கள் சகல நிலையையும், இரவு என்பது கேவல நிலையையும் குறித்தன. கேவல நிலையில் உயிரின் அறிவு முற்றிலும் மறைக்கப்பட்டு உள்ளது சகல நிலையில் அது சற்றே விளங்கிச் சிற்றறிவு பெறுகிறது.

இருள், வெளி என்ற சொல்லாட்சி இருபா இருபஃதில் "இருள் வெளி ஆகும் மருளினை அறுத்து" என்று அருளப்படுவது காண்க. இவ் வைந்து நிலைகளையும், உலகம் எல்லாம் அறியும் படி உம்மைச் சான்றாக வைத்துக் கொடி உயர்த்தினேன் என்றார்.

மல மாயை கன்மங்கள் இறைவனைப் பொருந்தா. ஆகையினால் அவற்றை நீ புரவா வையமெல்லாம் என்று குறித்தார் எனக் கொள்ளுவர் சில ஆசிரியர்கள். மற்றும் சிலர் நீ புரவு ஆம் வைய மெல்லாம் என்று பிரித்து, உன்னால் புரக்கப்படும் வையமெல்லாம் என்று பொருள் கொள்ளுவர். இறைவன் அருளால் அல்லாமல் உயிர்கள் எதனையும் அறிய மாட்டா. ஆகையினால் அவனையே சான்றாகக் கொண்டு மேற் கூறப்பட்ட ஐவகைப் பொருள்களின் தன்மையையும் உணர்த்துவதற்காக இக் கொடியை உயர்த்தினேன் என்று கூறினார்.

**3 வாக்காலும் மிக்க மனத்தாலும் எக்காலும்**
**தாக்காது உணர்வுஅரிய தன்மையனை — நோக்கிப்**
**பிறித்து அறிவுதம்மில் பிரியாமை தானே**
**குறிக்கும் அருள் நல்கக் கொடி.**

சொல்லாலும், சொல்லினும் விரையப் பாயும் மனத்தாலும், ஒரு காலத்திலும் எட்டுவதற்கும் உணர்வதற்கும் அரிய தன்மை உடையவனை அறிவுக்கு அறிவாக விளங்கும் இறைவனை அறிவதற்கான அருளை அவனே வழங்குமாறு வேண்டிக் கொடி கட்டினேன்.

இறைவன் சொல்லால் உணர்த்தப்படுவதற்கும் மனத்தால் உணரப்படுவதற்கும் அரியவன். சிவஞான சித்தியாரில் "மறையினால் அயனால் மாலால், மனத்தினால் வாக்கால் மற்றும் குறைவிலா அளவினாலும் கூறொணாதாகி நின்ற இறைவனார் கமல பாதம்" என்று அருள் நந்தி சிவம் அருளிச் செய்ததும், சிவப்பிரகாசத்தில் "பாசமா ஞானத்தாலும் படர் பசு ஞானத்தாலும் ஈசனை உணர ஒண்ணாது" என்பதும் இக் கருத்தை வலியுறுத்தும்

இவ்வாறு எட்டாத தன்மை உடைய இறைவன் எங்கோ தொலைவில் இல்லாமல் உயிருக்கு உயிராக அவற்றோடு நிற்கிறான். உயிர்களின் தன் முனைப்பினால் அறியப்படாதவன். அவனுடைய திருவருள் வழியிலே அடங்கி நிற்பாருக்குத் தானே இரங்கி ஆசிரியத் திருமேனி கொண்டு வந்து அருள் பாலிக்கிறான் என்பதனைக் குறிக்கத் தம்மிற் பிரியாமை தானே குறிக்கும் அருள் நல்க என்று குறித்தார். திருவருட்பயனில் 'தாமே தருபவரைத் தம் வலியனால் கருத, ஆமே இவன் யார் அதற்கு (70)' என்று கூறியதும் இங்கு நினையத் தக்கது.

**4 அஞ்சு எழுத்தும் எட்டு எழுத்தும் ஆறு எழுத்தும் நால் எழுத்தும்**
**பிஞ்சு எழுத்தும் மேலைப் பெரு எழுத்தும் — நெஞ்சு அழுத்திப்**
**பேசும் எழுத்துடனே பேசா எழுத்தினையும்**
**கூசாமல் காட்டக் கொடி.**

சிவாய நம என்னும் திருவைந்தெழுத்தையும் ஓம் ஆம் ஔம் சிவாய நம என்னும் எட்டு எழுத்துக்களையும், ஓம் நமசிவாய என்னும் ஆறு எழுத்துக்களையும், ஓம் சிவாய என்னும் நான்கு எழுத்துக்களையும் முறைப்படி எண்ணி அதன் பின்னர் மென்மையான எழுத்தாகிய திருவருட் சத்தியைக் குறிக்கும் வகரத்தையும், உயர்ந்த பெரு எழுத்தாகிய சிவபெருமானைக் குறிக்கும் சிகரத்தையும் நெஞ்சத்திலே பதியுமாறு நினைந்து இடையறாது ஓதுவதால் பேசும் எழுத்தாகிய அருட் சத்தியைக் குறிக்கும் வகரம், பேசா எழுத்தாகிய சிவத்தைக் குறிக்கும் சிகரத்தை மிக எளிதாக உயிரோடு கூட்டுவிக்கும். அவ்வாறு கூட்டுவிப்பதற்காகக் கொடி கட்டினேன்.

திருவைந்தெழுத்து வெறும் எழுத்துக்களாகக் கொள்ளப் படாமல் ஒவ்வொன்றும் ஒரு பொருளைக் குறித்து நின்றது. சிகரம் சிவத்தையும், வகரம் திருவருளாகிய சத்தியையும், யகரம் உயிரையும், நகரம் மறைப்பாற்றலையும், மகரம் மலத்தையும் குறித்தன. அதனால் சுந்தரமூர்த்தி நாயனார் "அந்தியும் நண்பகலும் அஞ்சு பதம் சொல்லி" என்று அருளினார். இவற்றை ஓதும் முறையையும் நிற்கும் முறையையும் நல்லாசிரியர் வழிக் கேட்டுணர்வதே சிறப்பாகும்.

நமசிவாய என்பது தூல பஞ்சாக்கரம், சிவாய நம என்பது சூக்கும பஞ்சாக்கரம், சிவயசிவ என்றோ சிவயவசி என்றோ ஆசிரிய மரபின் படி ஓதப்படுவது அதி சூக்கும பஞ்சாக்கரம். இவ்வாறே எட்டு எழுத்தும் ஆறு எழுத்தும் நாலு எழுத்துமாக ஓதும் முறைமையும் உண்டு. இம்மைப் பயன் பெறுவதற்காக நமசிவாய என்று ஓதுவதும், பேரின்ப வீட்டை அடைவதற்காக சிவாய நம என்று ஓதுவதும் திருவட் பயன், உண்மை விளக்கம் போன்ற ஞான நூல்களில் விரிவாக எடுத்துரைக்கப்படுகின்றன.

மேலான சிவ பரம் பொருளை உயிர் திருவருளின் வழியே, அதன் துணை கொண்டே அறிதல் வேண்டும். ஆதலினால் சத்தியைக் குறிக்கும் வகரத்தை இளமையும் மென்மையும் உடையதாகிய பிஞ்சு எழுத்து என்று குறிப்பிட்டார். தனக்கு ஒப்பும் இணையும் அற்ற சிவ பரம் பொருளைக் குறிக்கும் சிகரத்தை மேலைப் பெரு எழுத்து என்று குறிப்பிட்டார்.

யகரமாகிய உயிர் வகரமாகிய அருளோடு கூடும் நிலை துரிய நிலை எனப்பெறும். இந்நிலையில் சொல் உண்டு. அருளாளர்களின் பாடல்கள் எல்லாம் துரிய நிலையில் நின்று பாடப் பெற்றவைகளேயாம் இதுபற்றியே வகரத்தைப் பேசும் எழுத்து என்றார். உயிர் சிகரமாகிய சிவத்தோடு ஒன்றித் தான் என்பது இன்றிச் சிவமாயே நிற்கும் நிலை துரியாதீதம் எனப்படும். இந்நிலையில் நினைவும் இல்லை; சொல்லும் இல்லை ‘‘பேசா அநுபூதி’’ என்பது இதுவே. இது பற்றியே சிகரம் பேசா எழுத்து எனப்பட்டது.

உ

சிவமயம்

# நெஞ்சு விடு தூது

நெஞ்சு விடு தூது என்னும் இந்நூல், ஆசிரியர் உமாபதி சிவத்தால் அருளிச் செய்யப்பட்டது. மெய்கண்ட சாத்திரங்கள் பதினன்கினுள் இது பன்னிரண்டாவதாக வைத்து எண்ணப் பெறும்.

சாத்திர நூல்களுள் இது ஒன்றே சிற்றிலக்கிய வகையில் அமைந்தது. தூது என்ற சிற்றிலக்கியம் பெரும்பாலும் தலைவி ஒருத்தி கிளி, குயில், தன் நெஞ்சு இவை போன்றவற்றுள் ஏதாவது ஒன்றைப் பாட்டுடைத் தலைவனிடத்துத் தூது அனுப்பித் தன் காதலை அவனுக்கு எடுத்துரைத்துத் திரும்புமாறு விடுப்பதாக அமையும். இந்த நூல், உமாபதி சிவம் தம்முடைய ஞான ஆசிரியர் ஆகிய மறைஞானசம்பந்தரிடம் தமது நெஞ்சைத் தூதாக விடுத்து அவரிடத்திலிருந்து திருக்கொன்றை மாலையை வாங்கி வருமாறு கேட்பதாக அமைந்துள்ளது.

இந்நூலுள் உலகாயதம், சமணம், ஏகான்மவாதம், பௌத்தம் முதலிய சமயங்களில் ஈடுபட்டு நில்லாமல், ஒப்பற்ற தனி முதல்வனாகிய சிவபெருமானிடம் சென்று பூங்கொன்றை மாலையை வாங்கி வருமாறு வேண்டுகிறார் ஆசிரியர். நூலுள் மறைஞானசம்பந்தர் சிவபெருமானாகவே போற்றப் படுகிறார்.

இறைவனின் இயல்பு, உயிரின் சிறுமை, உயிரைப் பற்றியிருக்கும் தளைகள், நெஞ்சுக்கு அறிவுறுத்தல், சிவபெருமானின் தசாங்கம், சிவனே குருவாக வருதல், குருவருள், சிவபெருமானின் ஒப்பற்ற தன்மை, நெஞ்சு சேரக் கூடாத இடங்கள், இறைவனின் திரு ஓலக்கச் சிறப்பு ஆகியன நூற்று இருபத்து ஒன்பது கண்ணிகளால் விளக்கப்படுகின்றன. ஆசிரியர் மறைஞானசம்பந்தரைச் சிவபெருமானாகவே கருதி வழிபடும் உமாபதி சிவத்தின் பேரன்பு, போற்றிப் பஃறொடையில் காணப்படுகிறது போலவே இந்நூலிலும் காணப்படுகிறது.

இந் நூல் கலிவெண்பா யாப்பில் அமைந்துள்ளது.

**பூமேவும் உந்திப் புயல் வண்ணன் பொற்பதுமத்**
**தார் மேவும் மார்பன் சதுமுகத்தோன் — தாம் மேவிப்**
**பன்றியும் அன்னமுமாய்ப் பார் இடந்தும் வான் பறந்தும்**
**என்றும் அறியா இயல்பினன் — அன்றியும்**
**இந்திரனும் வானோரும் ஏனோரும் எப்புலியும்**
**மந்தர வெற்பும் மறிகடலும் — மந்திரமும்**
**வேதமும் வேத முடிவும் விளை விந்துவுடன்**

**நாதமும் காணு நலத்தினன் - ஓத**
**அரியான் எளியான் அளவிறந்து நின்ற**
**பெரியான் சிறியான் பெண்பாகன் தெரியா**
**அருவான் உருவான் அருவுருவு மில்லான்**
**மரியான் மரிப்பார் மனத்தான் - பரிவான**
**மெய்யர்க்கு மெய்யன் வினைக்கு வினை யாயினன்**
**பொய்யர்க்குப் பொய்யாய பொய்யினன் ஐயன்**
**படநாகம் பூண்ட பரமன் பசுவின்**
**இடமாய் நிறைந்த இறைவன் – சுடர் ஒளியான்**
**என்றும் உளன்**

கார் மேகம் போன்ற நிறத்தினையும் உந்திச் சுழியிலிருந்து தோன்றுகின்ற தாமரை மலரையும் உடைய திருமாலும், நான்கு முகங்களையும் பொற்றாமரை மாலை தாங்கிய மார்பினையும் உடைய அயனும், சிவபெருமானின் அடி முடி காண்பதற்கு முற்பட்டுப் பன்றி வடிவோடு நிலத்தை அகழ்ந்தும், அன்ன வடிவம் கொண்டு விண்ணில் பறந்தும், அவர்கள் இருவராலும் ஒரு காலத்தும் காண முடியாத இயல்பினை உடையவன். அல்லாமலும் வானோரும், வானோர் தலைவனை இந்திரனும், பிறரும் வேறு உலகத்து வாழ்வாரும் மந்தர மலையின் உச்சியிலும், மறித்துச் சுழல்கின்ற கடலின் ஆழத்திலும், வாழ்வாரும் உணர்தற்கு அரியவன், மந்திரங்கள், நான்மறைகள், அம் மறையின் முடிவு எனப்படும் உபநிடதங்கள் உயிருக்கு அறிவை விளைவிக்கும் விந்து நாதம் ஆகிய இவற்றின் அதிதெய்வங்கள் என்ற இவற்றினால் எல்லாம் எட்டுதற்கு அரியவன். அன்புடைய அடியவர்களுக்கு எளியவன். பெரியவற்றிற்கு எல்லாம் பெரியவன். அணுவிலும் நுண்ணியவன். உமையம்மையைத் தன்னுடைய இடப்பாகத்திலே கொண்டருளியவன். கண்ணுக்குத் தெரியாத அருவாகவும், அடியார்க்குக் காட்சி தரும் உருவாகவும் அரு உருவாகவும், இம் மூன்று திறமும் அல்லாதவனாகவும் விளங்குபவன். தான் என்றும் இறவாதவன். உலகில் தோன்றி மறையும் உயிர்களின் மனத்திலே நீங்காது குடிகொண்டவன். தன் மீது அன்பு செலுத்துவாருக்குப் பரிவு காட்டும் மெய்ம்மையாளன். துன்புறுத்தும் வினை அடியாரைத் துயர் செய்யாது ஓட்டும் ஆற்றலுடையவன், பொய்ம்மை உடையவர்களால் காண இயலாததனால் அவர்க்குப் பொய்யானவன். உயிர்களுக்கெல்லாம் தலைவன். படமெடுத்து ஆடும் பாம்பினை அணிந்த பரமன். உயிர்களை இடம் கொண்டு அவற்றுள் நிறைந்த இறைவன். பேரொளிப் பிழம்பு வடிவானவன். என்றென்றும் உள்ளவன்.

சிவபெருமான் தொழுவார்க்கே அருள்கின்ற கருணையாளன். வழுவான மனத்தோடு தேடலுற்ற மாலுக்கும் அயனுக்கும் அவனுடைய திருவடியும் திருமுடியும் காண்பதற்கு அரிதாயின.

"பிரமன் அரி யென்று இருவரும் தம் பேதைமையால் பரமம் யாம் பரமம் என்றவர்கள் பதைப்பு ஒடுங்க அரனார் அழலுருவாய் அங்கே அளவிறந்து பரமாகி நின்றவா தோணோக்கம் ஆடாமோ" என்ற திருவாசகமும் காண்க. மரியான் – இறவாதவன். மரிப்பார் – இறப்பவர்கள்; தோன்றி நின்று அழியும் உயிர்கள். இதனை ஸ்மரிப்பார் என்ற வட சொல்லின் திரிபாகக் கொண்டு நினைப்பார் என்று பொருள் கொள்ளுவதும் உண்டு. இறைவன் வினைத் தொடக்கு அற்றவன். ஆதலால் உயிர்களைப் பற்றும் வினைகளை அவன் ஒருவனே நீக்குதல் கூடும் என்று விளக்குதற்கு வினைக்கு வினையாயினான் எனக் குறித்தார்.

**அன்றளவும் யானும் உளனாகி**
**நின்றநிலை யில்தரித்து நில்லாமல் — சென்று சென்று**
**தோற்றியிடும் அண்டம் சுவேதசங்கள் பாரின் மேல்**
**சாற்றும்உற் பீசம் சராயுசங்கட்கு — ஏற்ற பிறப்பு**
**எல்லாம் பிறந்தும் இறந்தும் இருவினையின்**
**பொல்லாங்கு துய்க்கும் பொறியிலியேன்**

இறைவன் என்று முதல் உள்ளானோ அன்றே உயிராகிய நானும், உள்ளேன். ஆயினும் இறைவன் நிலை வேறுபாடு அடையாதவன். நானோ ஒரு நிலையில் நிலைத்து நிற்க அறியாது மாறி மாறிப் பிறப்பினுட் பட்டு வருபவன். முட்டையுள் பிறப்பன, வேர்வையுள் பிறப்பன, வித்தினில் முளைப்பன. கருப்பையில் பிறப்பன என்று இவ்வாறு நால்வகைத் தோற்றங்களிலும் வினைக்கேற்ற பிறப்பில் பிறந்தும் இறந்தும் நல்வினை, தீவினைகளை நுகரும் பொல்லாங்கு உடைய அறிவற்றவன் ஆயினேன்.

உயிர்கள் தோற்றுவிக்கப்படாதவை, என்றும் அழியாதவை, எண்ணில் அடங்காதவை என்பன சைவ சித்தாந்தத்தின் கொள்கை. எனவே இறைவன் என்றைக்கு உளனோ அன்றைக்கே உயிர்களும் உள என்றார். இறைவன் நிலையில் திரியாதவன். ஆனால் உயிர்களோ வினைகளில் அழுந்தி மாறி மாறிப் பிறந்து இறந்து துயர் உறும் இயல்பு உடையன.

இவ் உயிர்கள் நால்வகைத் தோற்றமும் எழு வகைப் பிறப்பும் எண்பத்து நான்கு நூறாயிரம் பிறவி வேறுபாடுகளும் உடையன என்பர். நால் வகைப் பிறப்புக்கள்: அண்டம்—அண்டசம் என்பதன் திரிபு; முட்டையில் பிறப்பன; சுவேதசம் - வேர்வையில் தோன்றுவன; உற்பீசம் —வித்தில் இருந்து மேல் நோக்கி வளர்வன; சராயுசம் - கருப்பையில் தோன்றுவன என்பன. பொறியிலியேன் என்பதற்கு நல்லூழ் அற்றவன் என்று பொருள் கொள்ளினும் அமையும். இப்பகுதியில் உயிரின் சிறுமையை ஆசிரியர் எடுத்துரைக்கிறார்.

—கல்லா
உணர்வின் மிசையோடு உலகா யதனைப்
புணர்வதொரு புல்லறிவு பூண்டு - கணையில்
கொடிதெனவே சென்று குடிப்பழியே செய்து
கடிய கொலை களவு காமம் – படியின்மிசைத்
தேடியுழன்று தெரிவைத் தெரியாமல்
வாடி இடையும் மனந்தனக்கும்—நாடி அது
போன வழி போகும் புந்திக்கும் புந்தியுடன்
ஆன திறலார் அகந்தைக்கும் - மேனி
அயர அயர அழிய அழியும்
உயிரின் துயரம் உரையேன்

*அருள் நூல்களைக் கல்லாத காரணத்தால் உலகாயதனோடு உறவாடிச் சிற்றறிவின் வயப்பட்டு, வில்லிலிருந்து விடுபட்ட அம்பினை விடவும் வேகமாகச் சென்று, கொடு வினைகள் செய்து பிறந்த குடிக்குப் பழி தேடிக் கொடியதாகிய கொலை களவு காமம் இவற்றிலே ஈடுபட்டு வருந்தி, தெரிந்து கொள்ள வேண்டியவற்றைத் தெரிந்து கொள்ளாமல் உலகத்துப் பொருள்களில் மயங்கி அதனாலே வாட்டமடைந்து தளரும் மனத்துக்கும், அம் மனம் செல்லும் வழியே போகும் புத்திக்கும், புத்தியினால் தோன்றுகின்ற அகந்தைக்கும் ஆட்பட்டு அந்த முயற்சியிலே உடல் அயர அதனால் அழியும் உயிரின் துயரத்தை இன்னதென உரைக்க அறியேன்.*

*அருள் நூல்களைக் கல்லாது வறிதே காலம் கழித்தமையால், கல்லா உணர்வின் என்றார். உலகாயதர் காட்சியளவை ஒன்றே கொண்டு நடையை மெய்யென்று நாத்திகம் பேசுவர். இறைவனும் ஆன்மாவும் இல்லை என்பர். வீடு பேற்றை உடன்படார். இவ்வுலகத்து இன்பமே உயர்ந்த இன்பம் எனக் கொள்ளுவர். இவர்களோடு உறவு பூண்டதால் மெய்யுணர்வைப் பெற முயலும் முயற்சி தோன்றாது. ஆகையினாலே புல்லறிவு பூண்டு எனக் கூறினார். நில்லாதவற்றை நிலையின என்று உணரும் புல்லறிவாண்மை'' என்ற வள்ளுவப் பெருந்தகையின் திருவாக்கும் கருதத்தக்கது.*

*கணை — வேகத்துக்கும், துன்பம் விளைவிப்பதற்கும் உவமையாயிற்று. உலகியல் ஆர்வம் பிறந்த குடிக்கு ஏற்ற பெருமையைக் குறைக்கும் என்பதனால் குடிப் பழியே செய்து என்றார், தெரிய வேண்டிய பொருளைத் தேடாமல் உலகத்துப் பொருள்களை நுகர்வதாகிய தேட்டத்தில் மனம் வாடிற்று என்றார். இடையும் — வருந்தும். மனம் போன வழி புத்தியும், அதன் வழி யான், எனது என்னும் செருக்கும் இவ் விரண்டு பற்றுக்களாலும் உடல் தளர்வும், தளர்வின்*

விளைவாக உடம்பினின்று உயிர் நீங்கலும் ஆகிய துயரங்களை எடுத்துரைக்க இயலாது என்பதனுல் உயிரின் துயரம் உரையேன் என்று கூறினர்.

— வயிரமே
கொண்டதொரு காமனுக்கும் கோபனுக்கும் மோகனுக்கும்
மண்டு மதமாச் சரியனுக்கும் — திண்திறல்சேர்
இந்திரியம் பத்துக்கும் ஈரைந்து மாத்திரைக்கும்
அந்தமிலாப் பூதங்கள் ஐந்துக்கும் — சிந்தை கவர்
மூன்று குற்றம் மூன்று குணம் மூன்று மலம் மூன்று அவத்தை
ஏன்று நின்று செய்யும் இரு வினைக்கும் — தோன்ருத
வாயுஒரு பத்துக்கும் மாருத வல்வினையே
யாய கிளைக்கும் அருநிதிக்கும் — நேயமாம்
இச்சை கிரியை இவைதரித்தங்கு எண்ணிலா
அச்சம் கொடுமை யவைபூண்டு — கச்சரவன்
சீரில்நிலை நில்லாது திண்டாடும் பல்கருவி
வாரில் அகப்பட்டு மயங்கினேன்

விளைந்து முதிர்ந்த காமத்துக்கும் சினத்திற்கும் மோகத்திற்கும் மண்டிக் கிடக்கிற மதத்திற்கும் பொருமைக்கும் ஆட்பட்டேன். வலிமை பொருந்திய அறிவுப் பொறி, செயற் பொறிகள் ஐந்து ஐந்துக்கும், பொறிகளின் வழியும் பூதங்களின் வழியும் அறியத் தக்க தன் மாத்திரைகள் பத்திற்கும் ஐம்பெரும் பூதங்களுக்கும் சிந்தையைக் கவர்ந்து எழுகின்ற காமம் வெகுளி மயக்கம் என்னும் முக்குற்றங் களுக்கும் சாத்துவிதம் இராசதம் தாமதம் ஆகிய மூன்று குணங்களுக்கும் ஆணவம் கன்மம் மாயை ஆகிய மும்மலங்களுக்கும் கேவலம் சகலம் சுத்தம் ஆகிய மூன்று நிலைகளுக்கும், என்னைப் பற்றி விடாத இரு வினை களுக்கும் கண்ணுக்குப் புலனுகாத பிராணன் முதலான வளிகள் பத்துக்கும், வல்வினைக்குக் காரணமாக விளங்குகின்ற உறவினர்க்கும், பொருள் மேல் கொண்ட ஆசைக்கும் என்னுடைய அறிவு விழைவு ஆற்றல்களைச் செலுத்தி அச்சத்துக்கும் கொடுமைக்கும் இடம் கொடுத்துப் பாம்பினைக் கச்சாக அணிந்து விளங்கும் இறைவனின் சீரில் நிலை பெற்று நில்லாது என்னை ஆட்டுவிக்கும் கருவி கரணங்களின் கடலனைய துன்பத்தில் அகப்பட்டு மயங்கினேன்.

காமம் கோபம் மோகம் மதம் மாச்சரியம் ஆகிய தீய பண்புகளை ஆண்பால் ஒருமையாகக் கூறி இகழ்ச்சிக் குறிப்பாக அவற்றை உயர்த்துவது போலப் பழித்தார். இப்பகுதியில் உயிர்கள் தத்துவங் களால் கட்டுண்டு நிற்பதையும், உலகியல் வயப்பட்டு மயங்குவதையும் அல்லல் உறுவதையும் பொதுவாகக் கூறுகின்ற நோக்கத்தில் ஆசிரியர் தம்மேல் ஏற்றிக் கூறினர்.

— தேருங்கால்

உன்னை ஒழிய உறவில்லை என்னுமது
தன்னை அறிவைத் தனியறிவை முன்னம்
தலைப்பட்டார் தீரத்துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றையவர் என்று — நிலைத் தமிழின்
தெய்வப் புலமைத் திருவள்ளுவர் உரைத்த
மெய் வைத்த சொல்லை விரும்பாமல் — ஐவர்க்கும்
ஆவதுவே செய்து அங்கு அவர் வழியைத் தப்பாமல்
பாவமெனும் பௌவப் பரப்பழுந்திப் — பூவையர் தம்
கண்வலையிற் பட்டுக் கலவிக்கலை பயின்று அங்கு
உண்மை நிலையுணர்ச்சி ஓராமல் — திண்மையினுல்
நாவில் கொடுமை பல பிதற்றி நாள் தோறும்
சாவில் பிறப்பில் தலைபட்டு இங்கு — ஆவி நிலை
நிற்கும் வகை பாராய் நிலையான நெஞ்சமே
பொற்பினுடன் யானே புகலக் கேள்

*நுணுகி ஆராய்ந்தால் ஒப்பற்ற தலைவனுகிய உன்னைத் தவிர உறவு வேறு இல்லை என்னும் உண்மையையும், தன்னையும் அறிந்து தலைவனுகிய உன்னையும் அறியும் நிலை கைவரப் பெற்றவர்களே விடுதலை பெற்றவர்கள் என்பதை நிலை பெற்ற தமிழில் தெய்வப் புலமைத் திருவள்ளுவர். ''தலைப்பட்டார் தீரத்துறந்தார் மயங்கி வலைப்பட்டார் மற்றையவர்'' என்று அருளிய மெய்ம்மை மிக்க சொல்லைக் கைக் கொள்ளாமல் ஐம்பொறிகளின் வழியே சென்று அவை காட்டும் இன்பத்தில் மயங்கி அதனுல் பாவமாகிய கடற் பரப்பில் மூழ்கிப் பெண்களின் கண் வலையில் அகப்பட்டு அவரோடும் கூடி, மெய்யுணர் தலைத் தலைப்படாது செருக்கினுலே நாவினுல் இன்னுத சொற்களைக் கூறி, ஒவ்வொரு நாளும் இயற்றும் வினையினுல் இறப்பும் பிறப்பும் தரும் வினைகளைச் செய்து உயிர் நிற்கும் நிலையை நெஞ்சமே காண்பாயாக. இந்தத் துயரக் கடலினின்றும் விடுபட்டு உய்வினை அடைவதற்குரிய வழியை நான் புகலுவேன் கேட்பாயாக.*

*உலகியல் உறவு நிலையானதன்று. உயிருக்கு உண்மையான உறவாக விளங்குவது இறைவனைத் தவிர வேறு யாரும் இல்லை என்பதனை அருளாளர்கள் வலியுறுத்தி யுள்ளார்கள். ''உற்றார் யார் உளரோ உயிர் கொண்டுபோம் பொழுது'' என்ற அப்பர் பெருமான் திருவாக்கு உலகியல் வாழ்க்கையில் இறைவன் ஒருவனே நீடித்த உறவாவான் என்பதை வலியுறுத்துகிறது. அறிவை என்ற சொல் உலகியல் அறிவை உணர்த்தாமல் உண்மை அறிவாகிய சிவஞானத்தை*

உணர்த்திற்று. கருவி கரணங்களின் துணை இல்லாமல் வரையறைக்கு உட்படாமல் அறிய வல்ல சிவபெருமான் தனி அறிவு என்ற சொல்லால் குறிப்பிடப் பெறுகிறார்.

திருக்குறள் நீதி நூல் என்ற அளவில் கொள்ளப் படாமல் மெய் உணர்தலுக்கும் துணை செய்யும் என்று சைவச் சான்றோர்கள் கொண்டார்கள் என்பதனைத் ''தலைப்பட்டார் தீரத் துறந்தார்'' என்று தொடங்கும் திருக்குறளை இவ்வாசிரியர் முழுமையாக எடுத்தாண்டிருப்பது புலப்படுத்தும், இதுபோலவே திருக்குறளின் சொல்லும் பொருளும் மற்றைய சாத்திர நூல்களில் பயின்று வருவதையும் காணலாம். திருவள்ளுவ நாயனாரிடத்து ஆசிரியர் உமாபதி சிவம் கொண்டிருந்த மதிப்பு, 'நிலைத் தமிழின் தெய்வப் புலமைத் திருவள்ளுவர் உரைத்த மெய் வைத்த சொல்' என்று அவர் பாராட்டுவதிலிருந்து விளங்குகிறது.

ஐம்புலன்களையும் ஐவர் என்று சொல்லும் வழக்கு திருநாவுக்கரசு நாயனார் தனித்திருநேரிசையில், ''புள்ளுவர் ஐவர் கள்வர்'' என்று கூறுவதிலிருந்தும் மற்றும் பிற இடங்களிலிருந்தும் அறியலாகும்.

பெண்ணாசையில் பட்டு உயிர்கள் அல்லலுறுவதைப் பொதுமையில் கடிகிறார். இங்குக் கூறப்பட்டது அறம் சாராச் சிற்றின்ப வேட்கையே.

**— வெற்பின் மிசை**
**வந்திருக்க வல்லான் மதியாதார் வல் அரணம்**
**செந்தழலில் மூழ்கச் சிரித்தபிரான் — அந்தமிலா**
**வேத முடிவில் விளைவில் விளைவில் ஒளி**
**ஆதியமலன் நிமலன் அருள் — போத**
**அறிவில் அறிவை அறியு மவர்கள்**
**குறியுள் புகுதும் குணவன் — நெறி கொள்**
**வெளியில் வெளியில் வெளியன் வெளியில்**
**ஒளியில் ஒளியில் ஒளியன் — ஒளியில்**
**அளியில் அளியில் அளியன் அளியில்**
**அளவில் அளவில் அளவன் — அளவிறந்து**
**நின்றான் அனைத்தும் நிறைந்தான் நினைப்பவர் பால்**
**சென்றான் தெரியத் தெரியாதான் — குன்றா**
**விளக்காய் நிறைந்த விரி சுடரான் விண் மேல்**
**துளக்காமல் நின்ற பெருஞ் சோதி — உன் கண்ணுக்கு**
**அல்லாது தோன்றா அமலன் அகிலமெலாம்**

**நில்லாமல் நின்ற நிலையினன் - சொல் ஆரும்**
**ஈசன் பெருமை இருவினையேன் இன்று உனக்குப்**
**பேசும் தகைமை யெல்லாம் பேணிக் கேள்**

திருக்கயிலாய மலையிலே எழுந்தருளி யிருக்கும் பெருந்தகை. தம் செருக்கினால் பிறரை மதியாத முப்புரத்து அசுரர்கள் மூவரையும் அவர்களது மூன்று கோட்டைகளையும் நெருப்பிலே மூழ்கி அழியுமாறு சிரித்து எரித்த பிரான், எல்லையற்ற வேதத்தின் முடிவிலும் அதன் பொருளிலும், பொருளால் விளையும் பயனிலும் ஒளிர்கின்ற முன்னைப் பழம் பொருளாகவும் குற்றமற்றவனாகவும் இயல்பாகவே பாசங் களிலிருந்து நீங்கியவன் ஆகவும் திகழ்பவன். அறிவினுக்கு அறிவாக விளங்குகின்ற மெய்யறிவை அறியும் ஆற்றலுடைய அருளாளர்களின் மனத்துக்குள் புகுந்து கோவில் கொண்ட பண்பாளன். ஐம் பூதங்களில் ஒன்றாகிய விண்வெளிக்கும், வெளியாகிய மூலப்பகுதியின் வெளிக்கும் அதற்குக் காரணமாகிய கலை வெளிக்கும் இடம் கொடுத்து நிலைபேறாக விளங்குபவன். இத்தகையோன் இவை எவற்றிலும் தோய்வற்று நிற்பவன். கலை ஒளிக்கும் மேலான ஒளியாகிய தூவா மாயையின் ஒளிக்கும், அதற்கு மேலதாகிய சுத்த வித்தையின் ஒளிக்கும், அதற்கும் மேம்பட்ட விந்துவின் ஒளிக்கும் ஒளி தருகின்ற பேரொளி. அவ் விந்துவுக்கு மேம்பட்ட சதாசிவத்துக்கும், அதற்கும் மேலான பராசத்திக்கும் காரணமாக விளங்கும் பரமசிவம். அப்பெருமான் அளவைகளால் அளந்தறியப் படாதவன் ஆயினும் திருவருளைத் தலைப்பட்டார்க்குத் தன் கருணையால் எட்டுதற்கு உரியவன். தன்முனைப் பாலும், உலகியல் அறிவாலும் அளந்தறியப் படாத பெருமையன். எங்கும் நீக்கமற நிறைந்தவன். அவனை நினைவார் திருவுள்ளத்தில் குடிகொண்டு நிறைந்தவன், யாவற்றையும் ஒருங்கே உணர்தல் அவனது இயல்பு குன்றாத பேரொளியாய் நின்று யாவற்றையும் விளக்குபவன். விண்ணிற் சுழலும் ஞாயிறும் மதியும் போல அல்லாமல் அசைவற்ற சோதி. குறைந்தும் கூடியும் மாறுபடாது நிலை பெற்று நிற்கும் பெரும் சோதி. அகக் கண்ணால் காண்பாருக்கல்லது புறக்கண்ணால் காண் பார்க்குக் காட்சிப்படாதவன். உலக மெல்லாம் நிறைந்திருப்பினும் உலகப் பொருட்களால் தொடக்குறாதவன். சொற் பதம் கடந்த ஈசன் பெருமையை இருவினை ஆழியில் அகப்பட்ட நான், நெஞ்சமே, இன்று உனக்கு எடுத்துரைப்பேன். கவனமாகக் கேட்பாயாக.

— **பாசம்**

**பலவும் கடந்து பரிந்தருள் சேர் பண்பாற்**
**குலவி விளங்கும் குணக் குன்றேன் — இலகவே**
**செய்ய தருமச் செழும் கிரியின் மீது இழிந்து**
**வைய்ம் பரவ மகிழ்ந்து எழுந்து அங்கு ஐயம்**

களவு பயம் காமம் கொலை கோபம் காதி
அளவில் வினையெல்லாம் அழித்து இங்கு — உளம் மகிழத்
தொம்மெனவே எங்கும் முழங்கிச் சுருதி பயில்
செம்மை தரும் ஆகமங்கள் சேர்ந்து ஓடி — மும்மலத்தின்
காடு அடங்க வேர் பறித்துக் கல்விக் கரை கடந்து அங்கு
ஓடுபல் பூதத்து உணர்வு அழிந்து — நீடு புகழ்
மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னப் பேர் பெற்ற
ஐவாய வேட்கை யவா அகற்றி நையும் இயல்
வாக்குப் பாதம் பாணி பாயுரு உபத்தம் பலவும்
நீக்கிச் செறிந்து நிறைந்து ஓடிப் — போக்கரிய
பந்தம் எனும் சோலை பறித்துப் பரந்து அலைக்கும்
அந்த மனம் புத்தியுடன் ஆங்காரம் சிந்தி விழ
மோதி அருள் நீர்மை ஓங்கி விறல் முக்குணமும்
காதி உரோமம் எலாம் கை கலந்து சீதப்
புளகம் அரும்பப் புலன் மயக்கம் போக்கி
வினைவில் புலன் முட்ட மேவிக் களபதன
மாதர் மயக்கம் அறுத்துவளர் மண்டலத்துச்
சோதி யொரு மூன்றினையும் சோதித்து நீதியினால்
ஆதாரம் ஆறினுஞ் சென்று ஆறி அடல் வாயுக்கள்
மீதான பத்தும் மிகப் பரந்து காதிப்
பிருதிவி அப்புத்தேயு வாயு ஆகாய
உறுதி நிலம் ஐந்தும் ஓடி மறுவிலா
நான் முகன் மால் ஈசன் மகேசன் நலம் சிறந்த
தான் முகம் ஐந்தாம் சதாசிவமும் - ஆனதொரு
விந்து நாதம் கடந்து சுத்த வெறு வெளியில்
அந்தமிலாப் பாழ் அடங்கத் தேக்கிய பின் முந்தி வரும்
அவ்வறிவுக்கு அப்பாலும் சென்று அண்டம் உள்ளடக்கிச்
செவ்வறிவே யாகித் திகைப்பு ஒழிந்திட்டு - எவ்வறிவும்
தானுயவீடு அளித்துத் தன்னில் பிறிவிலா
ஊனுகி எவ்வுயிர்க்கும் உள் புகுந்து மேனியிலாத்
அஞ்சு அவத்தையுங் கடந்து ஆய பெரும் பேரொளிக்கே
தஞ்சம் எனச் சென்று தலைப்பட்டு வஞ்ச மறத்
தான் அந்தம் இல்லாத தண்ணளியால் ஓங்கி வரும்
ஆனந்தம் என்பதோர் ஆறுடையான்

*இயல்பாகவே பாசங்களைக் கடந்து, உயிர்களிடத்துக் கொண்ட பரிவினால் அருள் மிகுந்து, அதனால் விளைந்த பண்புகள் எல்லாம் மிகுந்து விளங்குகின்ற குணம் அவனுக்குரிய திருமலை. விளங்கித் தோன்றும் அறம் என்னும் செழுமை மிக்க மலையிலிருந்து தோன்றிச் சம வெளியில் இறங்கி, உலக மக்கள் மகிழ்ச்சி கொள்ளும்படி பொங்கிப் பரந்து, தன்*

வெள்ளப் பெருக்கால் ஐயம் களவு அச்சம் காமம் கொலை சினம் ஆகிய வற்றை எல்லாம் அழித்து அளவற்ற வினைக் காட்டை வேரறுத்து 'தொம்' என முழங்கி, வேதங்களும் செம்மையான ஆகமங்களும் சேர்ந்து தன்னோடு ஓடி வர, மும்மலத்தின் காட்டை வேரொடு களைந்து, கல்வி ஆகிய கரையைக் கடந்து, ஐம் பூதங்களின் வழி வரும் உணர்வை அழித்து மெய் வாய் கண் மூக்கு செவி என்ற பொறிகளின் வழியே செல்லும் ஆசையையும் அழிக்கும். துன்பத்துக்குக் காரணமாகின்ற நா, கால், கை, எருவாய், கருவாய் இவற்றை நீக்கி நிறைந்தும் செறிந்தும் ஓடி, போக்குவதற்கரிய கட்டுகள் என்ற சோலைகளைப் பறித்து, எங்கும் பரந்தோடி, உயிரைத் துன்பத்தில் ஆழ்த்தும் மனம் புத்தி ஆங்காரம் சித்தம். இவற்றின் செயல் எல்லாம் சிந்தி விழ மோதி, அருள் என்னும் தண்மை நிறைந்து, முக்குண வயப்படல் ஒழித்து மயிர்க் கூச்செறிந்து புளகம் அரும்ப ஐம் புல மயக்கத்தைப் போக்கி, அறிவு நிறையுமாறு மேவி சந்தனம் அணிந்த மகளிர் மீது உண்டாகும் மயக்கத்தினை ஒழித்தும், கதிர் மதியம் நெருப்பு என்னும் மும்மண்டலங்களையும் நெறிப்படுத்தி, மூலாதாரம் முதலிய ஆறு ஆதாரங்களிலும் முறையே சென்று பத்து வகை வளிகளுக்கும் மேற்பட்டு ஐம்பூதங்களையும் செம்மை நிலையிலே நிறுத்தி, குற்றமற்ற நான்முகன், திருமால், ஈசன், மகேசன், சதாசிவன் ஆகியவர்களுக்கு உட்பட்ட கலைகளையும் அவற்றின் அடிப்படையான விந்து நாதம் ஆகியவற்றையும் கடந்து தூய பெரு வெளியிலே சென்று அதனையும் தன் மயமாக்கித் தனக்குள் அடக்கி, செம்மையான அறிவுடன் கூட்டி, உயிர்களின் திகைப்பினை ஒழித்திட்டு, எல்லா அறிவினையும் தானேயாய் நிற்குமாறு வீடு பேற்றை அளித்து உடலை விட்டு நீங்காத உயிர் போல எவ்வுயிர்க்கும் உள்ளே புகுந்து உடம்பின் ஐந்து நிலைகளையும் கடந்து அதற்கு மேலாக விளங்கும் பேரொளிக்கே தஞ்சம் என்று சென்று தலைப்பட்டு வஞ்சமற வழங்கும் முடிவில்லாப் பேர் அருளாய்ப் பொங்கிப் பரவி வரும் மகிழ்ச்சி என்னும் ஆற்றினை உடையவன்.

இறைவனுடைய பெருமையை மேலும் எடுத்து விளக்கத் தொடங்குகிற ஆசிரியர் அவனுக்கு உரியதாகிய திருத்தசாங்கத்தைக் கூறத் தொடங்குகிறார். முதலில் அவனது மலைப் பாசங்களைக் கடந்து உயிர்கள் மீது கொண்ட பரிவினால் அருட் குன்றம் ஆக விளங்குவது அவனுடைய மலை ஆகும் என்று உரைத்தார். அதனை அடுத்து அவனுக்குரிய ஆறு ஆனந்தம் என்னும் ஆறு எனக் குறிப்பிட்டு அதனை விரிவாகச் சொல்லுகிறார். அவனது ஆறு அறமாகிய மலையிலிருந்து புறப்பட்டுக் காடுகளையும், சோலைகளையும் மோதிக் கொழித்துப் பரந்து பாய்வதை வருணிக்கிறார்.

இந்தப்பகுதி, திருவாசகத்தின் திருஅண்டப் பகுதியில், "அண்டத்து அரும் திறல் மேகம்" என்ற இறைவனின் கருணைப்

பெருமையை திருவார் பெருந்துறை வரையில் ஏறி மழையாய்ப் பொழிந்து வெள்ளமாய் ஓடி வரும் தன்மையை மாணிக்கவாசகப் பெருமான் விரித்துரைத்த் பகுதியோடு ஒப்பிட்டு உணரத் தக்கது.

''மெய்வாய் கண் மூக்கு செவி என்னப் பெயர் பெற்ற, ஐவாய வேட்கை அவாவினை'' என்னும் நாலடியார்ச் செய்யுளின் பகுதியை எடுத்தாண்ட நயம் நினையத் தக்கது. அது போலவே உண்மை விளக்கத்தை நினைவூட்டும் வண்ணம் (பாடல் 17) ''அந்த மனம் புத்தியுடன் ஆங்காரம்'' என்ற சொற்றொடரும் ஆசிரியரால் பயன் படுத்தப்பட்டுள்ளது.

— ஆனந்தம்
**பண்ணும் பயன்சுருதி ஆகமங்கள் பார்த்துணர்ந்து**
**நண்ண அரிய தொரு நாடுடையான் எண்ணெண்**
**கலையால் உணர்ந்து கருத்தழிந்து காம**
**நிலையான தெல்லாமும் நீத்து அங்கு அலைவு அறவே**
**தேட்டற்ற சிந்தை சிவஞான மோனத்தால்**
**ஓட்டற்று வீற்றிருக்கும் ஊருடையான்**

இன்பப் பயனை விளைவிப்பதற்காக எண்ணரிய ஆகம நூற்களைப் படித்து உணர்ந்தாலும் சென்றடைதற்கு அரிதான நாடு அவனுடைய நாடாகும். ஆய கலைகள் அறுபத்து நான்கினையும் கற்றுத் துறை போனாலும் அவை யெல்லாம் மனி திருமைப் பாட்டிற்கு வழி காட்டா என்பதனை அறிந்து அவற்றை நீத்து, இன்ப வேட்கை முதலிய உலகியல் தேட்டங்களையும் துறந்து, அலை பாயும் சிந்தையை அடக்கி அதனால் தேடுதற்கரிய சிவஞானத்திலே தோய்ந்து அதிலேயே ஒடுங்கி ஓட்டத் தவிர்ந்த நிலையில் விளங்கின்ற ஊர் அவனுடைய தலைநகர் ஆகும்.

''அறம் பொருள் இன்பம் வீடு அடைதல் நூற் பயனே'' என்பர் இலக்கண நூலார். எனவே நூல்களின் பயனாகக் கருதப்படுவது எல்லை யற்ற இன்பமாகிய வீடு பேறு. சிவஞான சித்தியாருள் ஆசிரியர் அருள் நந்தி சிவம்

''வேதநூல் சைவ நூல் என்று இரண்டே நூல்கள்,
வேறு உரைக்கும் நூல் இவற்றின் விரிந்த நூல்கள்''

என்று அருளிச் செய்ததை மனதில் கொண்டு இங்கே ஆகமங்கள் என்று குறிக்கப்பட்டன்த வேதங்களையும் உளப்படுத்தியதாகக் கொள்ளுதல் வேண்டும். வேதங்களையும் ஆகமங்களையும் கற்பதன் மூலமே இன்பப் பயன் கிட்டாது என்பார் ''ஆகமங்கள் பார்த்துணர்ந்து நண்ண அரிய தொரு நாடுடையான்'' என்றார். ''நூலறிவு பேசி நுழைவிலாதார் திரிக'' என்று திருவாசகம் இதனையே வலியுறுத்தும்

கலைகள் அறுபத்து நான்கு எனப்படும். இவை யாவும் உயிர்களை வீட்டு நெறிக்கு இட்டுச் செல்ல வல்லனவல்ல. எனவே அவை யாவற்றிலும் பயின்று எல்லை கண்டாலும் நிறைவு கிடைப்பதில்லை. ஆதலால் 'கருத்தழிந்து' என்று குறித்தார் காமம் முதலிய குற்றங்களிலிருந்து நீங்கி, மன ஒருமை கைவரப் பெற்றுச் சிவஞான மோன நிலையில் திருவருளில் தோய்ந்திருந்தாலே சிவஞானம் விளையும். அதுவே இறைவனின் திரு நகரமாகும்.

திரு உந்தியாரில் "ஓட்டு அற்று நின்ற உணர்வு பதி முட்டித் தேட்டு அற்ற இடம் சிவம் உந்தீபற, தேடும் இடம் அது அன்று உந்தீபற" (தாழிசை 13) எனவரும் பகுதியின் சொல்லும் பொருளும் இங்கு எடுத்தாளப்பட்டிருப்பது கருதத் தக்கது.

**நாட்டத்தால்**
**தெண்ணீர் அருவி விழச் சிந்தை மயக்கந் தெளிந்து**
**உண்ணீர்மை எய்தி உரோமமெலாம் நண்ணும்**
**புளகம் புனை மெய்யர் பொய்யிற் கூடாமல்**
**உளகம்பம் கொண்டு உன் உருகி அளவிலா**
**மாலாயிருக்கு மவர் மனத்தை வாங்க அருள்**
**மேலாய் விளங்கு அலங்கல் மெய்யினுள் தோலாத**
**வானம் புவனம் மலை கடல் ஏழ் பாதளம்**
**ஊன் ஐந்து பூதத்து உயிருணர்ச்சி — ஞானமாய்**
**எல்லாமாய் அல்லவாய் எண்ணுவார் எண்ணத்துள்**
**நில்லாமல் நிற்கும் நிலை வாசியான்**

கண்களிலிருந்து கண்ணீர் அருவி போலக் கொட்டத் திருவருள் இன்பத்தில் திளைத்திருப்பதனாலே சிந்தையின் மயக்கம் தெளிந்து, உள்ளும் புறம்பும் ஒரு தன்மைக் காட்சியராய் மயிர்க்கால்கள் சிலிர்க்கப் புளகம் எய்தி வழிபடுன்ற மெய்யடியார்கள் பொய்யினைத் தவிர்த்து மெய்ப் பொருளையே பற்றி விதிர்விதிர்த்து உள்ளுருகி இறைவனிடத்து அளவற்ற அன்பினால் தம்மை இழந்திருக்கும் அடியவர்களுடைய மனத்தைத் தன்னிடத்து ஈர்க்கும் பேரருளையே மாலையாய்க் கொண்டவன். அருளே அவனது திருத்தார். இருளால் தோற்கடிக்கப் படாத ஒளி நிறைந்த வானம் பல்வேறு புவனங்கள் மலைகள் கடல்கள் ஏழு பாதாள உலகங்கள் எண்ணற்ற உடல்கள் ஐம்பெரும் பூதங்கள் உயிர்கள் உயிர்களின் உணர்ச்சி இவை யாவற்றிலும் நிறைந்து நிற்கும் பேர் அறிவாளன் ஆயினும் அவற்றினின்று வேறாகவும் தன்முனைப்பால் எட்ட நினைப்பார் தம் எண்ணத்தில் அகப்படாது நிற்கும் நிலையையே தான் ஊர்ந்து செல்லும் குதிரையாக உடையவன்.

— சொல் ஆரும்
பாதாளம் ஊடுருவிப் பார் ஏழும் விண் ஏழும்
ஆதாரமாகி அகண்டம் நிறைந்து ஓத
அரிதாய் எளிதாய் அருமறை ஆறு அங்கத்து
உருவாய் உயிராய் உணர்வாய்ப் பெரிதாய
வெய்யதுயர்ப் பாசம் அற வீசியே வெம்பிறவித்
துய்ய கடலைத் துகள் எழுப்பி — ஐயமுறும்
காமக் குரோத லோப மோக மதம் காய்ந்து அடர்த்துச்
சாம் அத் தொழிலின் தலை மிதித்து நாமத்தால்
கத்தும் சமயக் கணக்கின் விறற் கட்டு அறுத்துத்
தத்தம் பயம் கொலைகள் ஆங்கழித்தே — தத்தி வரும்
பாசக் குழாத்தைப் பட அடித்துப் பாவையர் தம்
ஆசைக் கருத்தை அறவீசி — நேசத்தால்
ஆனவே கம்கொண்டு அருள் மும் மதத்தினால்
ஊனையார் தத்துவங்களுள் புகுந்து தேனைப்
பருகிக் களித்து உயர்ந்து பன் மறை நாற்கோட்டால்
மருவித் திகழ் ஞான ஆனையான்

பெரியோரால் சொல்லப்படுகின்ற பாதாள உலகங்கள் ஏழும் பாருலகங்கள் ஏழும் விண்ணுலகங்கள் ஏழும் ஆகிய அனைத்திலும் நீக்கமின்றி நிறைந்தும், அவற்றுக்கு ஆதாரமாகியும், வரையறைக்கு உட்படாமலும், சொல்லால் உணர்த்துவதற்கு அரியதாகவும், திருவருளால் உணர்பவர்களுக்கு எளிமை உடையனவாகவும், அரிய மறைகளும் அவற்றின் ஆறு அங்கங்களும் தனக்கு வடிவாகவும், அவற்றை உணரும் உயிர்களையே தனக்கு உயிராகவும் உணர்வாகவும் மிகப் பரந்த கொடிய துயரை விளைக்கின்ற பாசத்தை வேரோடு அறுத்துப் பிறவிப் பெருங் கடலைப் புழுதி கிளம்புமாறு வற்றச் செய்து, ஐயமும் காமமும் வெறுப்பும் பொருளாசையும் செருக்கும் ஆகிய இழி தகைமைகளைச் சினந்து அழித்தும், இறப்பென்னும் துயரத்தின் தலையில் மிதித்தும் வெவ்வேறு பெயர்களால் விளங்கித் தாம் தாம் கூறும் கொள்கைகளே ஏற்புடையன மற்றையோர் கொள்கைகள் பொருந்தாதன என்று தமக்குள் பூசலிடும் சமயங்களின் வலிய கட்டுகளை அறுத்து, அச்சம் உயிர்க் கொலை முதலிய தத்தம் தீவினையை அடியோடு அழித்துப் பாசக் குழாங்கள் அனைத்தையும் அடித்துத் துரத்தி மகளிர் மேற் செல்லும் ஆசைக் கருத்தை அறவே களைந்து உயிர்கள் மீது வைத்த அன்பினால் அருளாகிய மும்மதம் பொழிய உடம்பெனும் தத்துவக் காட்டின் உள்ளே புகுந்து மகிழ்ச்சி என்னும் தேனைப் பருகி மறைகள் என்னும் நான்கு கொம்புகளுடன் விளங்குகின்ற ஞானம் எனும் யானையைத் தனக்கு உரிமையாக உடையவன்.

- இருமுச்
சமையம் கடந்து தனக்கு ஒப்பிலாது
சுமை துன்ப நீக்கும் துவசன் கமையொன்றித்
தம்மை மறந்து தழல் ஒளியுள் ளேயிருத்தி
இம்மை மறுமை இரண்டு அகற்றிச் செம்மையே
வாயுவை ஓடா வகை நிறுத்தி வானத்து
வாயுவையும் அங்கே யுற அமைத்துத் தேயுவால்
என்றும் ஒரு தகைமை யாயிருக்கும் இன்பருளே
நின்று முழங்கும் நெடுமுரசோன் அன்றியும்
மாலும் அயனும் வகுத்தளித்த வையமெலாம்
சாலும் அதற்கப்பாலும் எப்பாலும் மேலே
உலகும் உலகால் உணர வொண்ணு ஊரும்
இலகி நடக்கும் எழில் ஆணையான்

*ஆறு சமயங்களையும் கடந்து தனக்கு ஒப்பில்லாத முதன்மை கொண்டு, உயிர்களுக்கு உறுகின்ற துன்பங்களை நீக்குவதற்காக உயர்த்தப்பட்ட விடைக் கொடியை உடையவன். புலனடக்கி, அதன் வழிச் செல்லும் தன் உணர்வுகளையும் அடக்கித் தம்மையே மறந்து மூலாதாரத்து மூண்டெழு கனலைத் தம்முள் இருத்தி, அதனுல் இம்மை மறுமைத் துன்பங்கள் இரண்டையும் அகற்றி வளிகளைத் தறிகெட்டு ஓடாத வகை நிறுத்தி, யோக நிலையிலே நின்று கனல் போன்று என்றும் ஒரு தன்மையராய் இருக்கும் இனிய அன்பர்களின் உள்ளத்தே முழங்குகின்ற நெடிய முரசினை உடையவன். நான்முகனுல் படைக்கப் பட்டுத் திருமாலால் காக்கப் பெறும் எல்லா உலகங்களிலும் அவற்றின் அப்பாலுக்கு அப்பாலும் எவ்விடத்தும் இவற்றின் மேம்பட்டு விளங்கும் உலகிலும் அருள்வெளியாகிய ஊரிலும் இறைவனின் ஆணை தடையின்றிச் செல்லும். இது வரை இறைவனுக்குரிய தசாங்கங்கள் விவரித்துக் கூறப்பட்டன.*

—அலகிறந்த
காட்சியான் காட்சிக்கும் காணுக் கலைஞான
ஆட்சியான் ஆட்சிக்கும் ஆயினுன் சூட்சியான்
பாரும் திசையும் படரொளியாலே நிறைந்தான்
தூரும் தலையும் இலாத் தோன்றலான் — வேராகி
வித்தாகி வித்தின் விளைவாகி மேவுதனுச்
சத்தாகி பூதங்கள் தாணுகிச் சுத்த
வெறு வெளியாய்ப் பாழாய் வெறும் பாழுக்கு அப்பால்
உறுபொருளாய் நின்ற ஒருவன் பொறியிலியேன்
வெம்பும் பிறவியலை வீழாமல் வீடளித்த
சம்பந்த மாமுனியென் தம்பிரான் - அம்புவியோர்
போற்றும் திருவடியென் புன் தலை மேலே பொறித்தோன்

ஏற்றின் புறத்தமைந்த எங்கோமான் - சாற்றுவார்
சாற்றும் பொருளான் தனி முதல்வன் தான் அல்லான்
வேற்றின்பம் இல்லா விளங்கொளியான் போற்றும்
குருவேடமாகிக் குணம்குறி ஒன்று இல்லாப்
பெரு வேட மாய் நிறைந்த பெம்மான் — கருவேடம்
கட்டும் உருக் கட்டறுத்தான் கற்றவர் வாழ் தில்லையான்
எட்டு மவர்க்கு எட்டா இயல்பினன் — மட்டவிழ்தார்
வானோன் பவனி வரக் கண்டு வல்வினையேன்
ஏனோரும் ஏத்துதல் கண்டு ஏத்தினேன்

எண்ணற்ற உயிர்களுக்கு அவ்வவற்றின் விருப்பத்திற்கு இணங்க இரங்கிக் காட்சி தரும் இறைவன், தன்முனைப்போடு காணப் புகுவார்க்குக் காண்பதற்கு அரியவன் பல வகைப்பட்ட கலை ஞானங்களையும் தன் ஆட்சிக்கு உட்படுத்தியவன். எவ்வுயிரையும் ஆண்டருளும் தலைவன் அவற்றின் உயிருக்கு உயிராக நின்றே அவற்றால் உணரப் படாத சதுரப்பாடு உடையவன். அவற்றில் தோய்வு இன்றி இருப்பவன். உலகும் எட்டுத் திசைகளும் தன் பேரொளியாலே நிறைவித்தவன். அடியும் முடியும் இல்லாத பெருமை உடையவன். எல்லாப் பொருள் களுக்கும் வேராகியும், வித்து ஆகியும், வித்தில் இருந்து விளையும் விளைவு ஆகியும். உடல் கருவி உலகு நுகர்ச்சி பொருள்கள் ஆகியும் ஓசை ஊறு உருவம் சுவை மணம் முதலியவை ஆகியும் ஐம்பூதங்களாகியும் விளங்குபவன். அபர விந்து அபர நாதம் பர விந்து பர நாதம் ஆகியவற்றை எல்லாம் கடந்து அப்பாலாய் உயிர்கள் சென்றடைவதற்குரிய பரம்பொருளாய் ஒப்பற்றவனாய் நிலை பெற்றவன். நல்லூழ் இல்லாத நான் பிறவிக் கடலில் விழுந்து அழுந்தாமல் எனக்கு வீடு பேறு அளித்த சம்பந்த மாமுனிவன் என்ற திருப் பெயர் தாங்கிய என் தலைவன். உலகத்தவர் போற்றும் தன் திருவடிகளை என் புன்மை நிறைந்த தலை மீது பதித்தவன். அற வடிவாகிய விடையின் மீது வீற்றிருக்கின்ற எங்கள் அரசன். அறிவுடையார் அவன் பெருமைகளைச் சொல்லிச் சொல்லிப் புகழும் தன்மையாளன். திருவருள் வயப்பட்டார்க்குத் தன்னை யன்றி வேறு இன்பம் இல்லாத வண்ணம் விளங்குகின்ற பேரொளியாய் விளங்குபவன். அத்தகையவன் குரு வேடம் தாங்கி என்னை ஆட்கொள்ளுவதற்கு எழுந்தருளி வந்தான். ஆயினும் மற்றை உயிர்களுக்குரிய குணங்களோ அடையாளங்களோ யாதுமற்ற அருள் உருவம் கொண்டு, எங்கும் நீக்கமற நிறைந்திருக்கின்ற பெருமகன். எண்ணற்ற உயிர்கள் கருவுட் புகுந்து உருவைப் பெறும் பிறவிக் கட்டினை அறுத்தவன். மெய்ந் நூற் பொருளை ஆழக் கற்றவர்கள் வாழ்கின்ற தில்லைப் பதியைத் தன் இருப்பிடமாகக் கொண்டவன். அத்தகைய பெருமானை எட்டிப் பிடிப்பேன் என்று தன்முனைப்போடு முயல்கிறவர்களுக்கு அவன் எட்டாத இயல்பினை உடையவன். தேன் சொரியும் கொன்றை மாலையை

அணிந்து அப்பேரருளாளன் திருஉலா வருதலைக் கண்டு மெய்யடியார் பலரும் அவனை வழிபட்டனர். வலிய வினையுடைய அடியேனும் மற்றவர்கள் ஏத்துதலைக் கண்டு ஏத்தி வணங்கினேன்.

— தான் என்னைப்
பார்த்தான் பழைய வினைப் பஞ்ச மலக் கொத்தை யெல்லாம்
நீத்தான் நினைவுவே றாக்கினான் — ஏத்தரிய
தொண்ணூற்று அறுவர் பயில் தொக்கின் துவக்கு அறுத்தான்
கண்ணூறு தேன் அமுதம் காட்டினான் — வெண்ணீறும்
வேடமும் பூசையுமே மெய்யென்றான் பொய்யென்றான்
மாடையும் வாழ்க்கை மனையுமே — நாடரிய
அஞ்செழுத்தின் உள்ளீடு அறிவித்தான் அஞ்செழுத்தை
நெஞ்சழுத்தி நேய மயலாக்கி — அஞ்செழுத்தை
உச்சரிக்கும் கேண்மை யுணர்த்தி அதில் உச்சரிப்பு
வைச்சிருக்கும் அந்த வழியாக்கி — அச்ச மறச்
சென்று விளக்கை எழத்தூண்டிச் செஞ்சுடரின்
ஒன்றி ஒரு விளக்கின் உள்ளொளியாய் — நின்ற
பெரு விளக்கின் பேரொளியாய் உள்ளே பிரசம்
மருவும் மலர் போல் மதித்து அங்கு — அருவினுருக்
கொள்ளா அருவைக் கொளுத்திக் குணங்குறியொன்று
இல்லா இடத்தே இனைப்பாற்றி விள்ளாத
உள்ளம் முதலாக உள்ளதெலாம் வாங்க அருள்
வெள்ள மயலளித்து மேவினான் கள்ளம்
மறப்பித்தான் மெய்ஞ்ஞான மாக்கி மன மெல்லாம்
இறப்பித்தான் என் பிறவி தீர்த்தான் — விறற் சொல்லுக்கு
எட்டானை யார்க்கும் எழுதா இயல் குணங்கள்
எட்டானை ஆற்றல் எழுத்தினான்

இத்தகைய பெருமையுடைய தலைவன் என்னைத் தன் திருக்கண் கண்களால் நோக்கினான். என் பழ வினைகளோடு கூடிய பஞ்ச மலக் கொத்தை அடியோடு அறுத்தான் அதனால் என் முன்னைய நினைவுகளை மடை மாற்றித் தூய்மைப் படுத்தினான். சொல்லற்கரிய தொண்ணூற்று ஆறு தத்துவங்களுக்கும் இடமாகிய உடலின் மீது உள்ள தொடக்கினை அறுத்தான். இப்பேரின்பத்தினாலே மகிழ்ந்து உளம் கனிந்து என் கண்களிலிருந்து இன்பக் கண்ணீர் மல்குமாறு செய்தான். தூய வெண்ணீறும் சிவனடியார் திருவேடப் பொலிவும் சிவ பூசையுமே நிலையான இன்பம் தரும் என்ற மெய்யினை அறிவுறுத்தினான். உலகியல் செல்வங்களும் உலக வாழ்க்கையும் மனையும் நிலையற்றன என்று உணர்த்தினான். நாடுதற்கரிய திருவைந்தெழுத்தின் உட்பொருளை எனக்கு அறிவித்தான்.

திருவைந்தெழுத்தை நெஞ்சத்தில் பதித்து உள்ளமெல்லாம் அன்பால் நிறையுமாறு அதனை ஓதி அதன் விளைவாகப் பேரின்பத்தை அடையும் நெறியைக் காட்டினான் திருவைந்தெழுத்தை மானதம் மந்தம் உரைகளால் உச்சரிக்கின்ற முறைமையும் அதன் விளைவுகளையும் அதனால் அச்சத்தை நீக்கி உள் ஒளியைப் பெருக்கி அந்தப் பேரொளியோடு ஒன்றி இருக்கும் வகையையும் எனக்கு அருள் செய்தான். பெரு விளக்கின் பேரொளியாய் நின்ற தன்னைத் தேன் சொட்டும் மலராக அறிந்து மகிழ்ந்து மீண்டும் ஒரு பிறப்பில் உட்படாமல் விடுபடுகின்ற திருவருளை எனக்கு வழங்கிக் குணமும் குறியும் அற்ற இடத்திலே என் களைப்பெல்லாம் கழியுமாறு என்னை இளைப்பாற்றினான். சொல்லால் விளக்க இயலாதபடி என் உயிர் உடல் ஆகியவற்றை எல்லாம் தனது அருள் வெள்ளத்திலே அழுந்துமாறு என்னை இயைவித்தான். உள்ளத்தின் கள்ளத்தை மறப்பித்தான். அஞ்ஞானத்தின் அழுந்திக் கிடந்த என்னை மெய்ஞ்ஞானத்திலே அழுந்து வித்தான் மனம் முதலிய கருவிகளைக் கடந்து அருளை உணருமாறு செய்தான். என் பிறவியை அறுத்து அருளினான். அத்தகைய பெருமான் சொல்லுக்கு எட்டாதவன். இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் என்று எழுதி உணர்த்துவதற்கு அரியவன், எண் குணங்களை உடையவன் உணர்தற்கரிய பிரணவ எழுத்தாகிய ஓங்காரமாய் நின்றவன்.

—மட்டாரும்

**பாடலார் ஆடலார் பண்பலார் நண்பலார்**
**ஆடலார் ஆடல் அகன்பதியாம் — கூடலார்**
**காணக் கிடையாதான் காண்பார்க்குக் காட்சியான்**
**பாணர்க்கு இலகு பலகை யிட்டான் — சேணில்**
**சிறந்த உருவான் திருமாலுக்கு எட்டான்**
**நிறைந்த திருவுருவாய் நிற்போன் — கறங்குடனே**
**சூறை சுழல் வண்டு சுழல் கொள்ளி வட்டமென**
**மாறில் கருணையினால் மாற்றினான் — நீறணிந்த**
**மெய்யன் அமலன் நிமலன் அருள் வீடளிக்கும்**
**ஐயன் அறிவுக்கறி வாயினான் — பொய்யர்பால்**
**பொய்ம்மையாய் நின்றான் புரிந்தவர் தம் நெஞ்சத்துள்**
**மெய்ம்மையாய் நின்று விளங்கினான் — கைம்மழுவன்**
**அத்தன்பால் நீ சென்று அடையும் இடத்தையெலாம்**
**சித்தஞ்சேர் நெஞ்சமே செப்பக் கேள்**

தேனினும் இனிய இசை பாடும் இசைக் கலைஞர்களும் ஆடற் கலைஞர்களும், பண்பற்றவர்களிடம் நட்புக் கொள்ளாதவர்களும் ஆகிய சான்றோர்கள் வாழுகின்ற விரிந்து பரந்த நகராகிய மதுரைப் பெரு நகரில் வீற்றிருக்கின்றவன், எங்கள் பெருமான் உன்னைக் கண்ணால்

காண்பதற்கு அரியவன். அகத்தில் கண் கொண்டு காண்கின்ற அடியவர்களுக்குக் காட்சிப் படுபவன். பாணபத்திரர்க்குப் பொற் பலகை யிட்டு அவருடைய யாழிசையைச் செவி மடுத்து மகிழ்ந்தவன். சேய்மையிலே காணுகின்ற அந்தி வானம் போன்ற திருவுருவுமுடையவன். திருமாலுக்கும் எட்டாது நிற்பவன். ஆயினும் எங்கும் நிறைந்தவன். காற்றுடி, சுழற் காற்று, மலரைச் சுற்றும் வண்டு, சுழற்றும் கொள்ளி வட்டம் ஆகிய இவை போன்று மாறி மாறிப் பிறக்கும் என் இழிந்த தன்மையைத் தன் பேரருளால் மாற்றினான். தூய வெண்ணீறு அணிந்த திருமேனியை உடையவன். தூய்மையே வடிவானவன். இயல்பாகவே பாசங்களின் நீங்கியவன். உயிர்களுக்குத் தன் பேரருளால் வீடு பேறு அளிக்கும் தலைவன். உயிர்களின் அறிவுக்கு அறிவாக நிற்பவன் பொய்யர்க்குப் பொய்ம்மையாய் நிற்பவன். அவன் மீது அன்பு கொண்டு வழிபடுவார்களுடைய நெஞ்சத்தில் மெய்ம்மையாக விளங்கி நின்று அருள் புரிபவன். திருக்கையிலே மழு ஒன்று ஏந்தியவன். எந்தையாகிய பெருமானிடத்து நீ சென்று அடைவதற்குரிய வழியையும் வழியில் நீ தவிர்க்க வேண்டிய செயல்களையும் நான் கூற, நெஞ்சமே, நீ கேட்பாயாக.

— நித்தலுமே

பூசி முடித்து உண்டு உடுத்துப் பூங்குழலார் தங்கலவி
ஆசைதனில் பட்டு இன்ப ஆர்கலிக்குள் — நேசமுற
நின்று நினைக்கும் இது முத்தியல்லது வேறு
ஒன்று நினைக்கும் அது முத்தி — அன்று என்று
இலகா இருள்லகை போல் இகலே பேசும்
உலகாயதன் பால் உருதே பலகாலும்
தாம்பிரமம் கண்டவர் போல் தம்மைக் கண்டு ஆங்கதுவே
நான் பிரம்ம் என்பவர் பால் நண்ணாதே — ஊன் தனக்குக்
கொன்றிடுவதெல்லாம் கொலையல்ல என்று குறித்து
என்றும் அறமே தெய்வம் என்று என்று — வென்றிப்
பொறையே யெனும் புத்தன் பொல்லாத் புன்சொல்
மிறையே விரும்பி விழாதே — நிறைமேவி
வாழ்பவர் போல் மன்னுடம்பில் மன்னும் உரோமம் பறித்துத்
தாழ்வு நினையாது துகில் தான் அகற்றி ஆழ்விக்கும்
அஞ்சும் அகற்றும் அது முத்தி என்று உரைக்கும்
வஞ்சமணன் பாழி மருவாதே — செஞ்சொல் புனை
ஆதி மறை ஓதி அதன் பயன் ஒன்றும் அறியா
வேதியர் சொல் மெய் யென்று மேவாதே — ஆதியின் மேல்
உற்ற திருநீறும் சிவாலயமும் உள்ளத்துச்
செற்ற புலையர்பால் செல்லாதே நற்றவம் சேர்

**வேடமுடன் பூசை அருள் மெய்ஞ்ஞானம் இல்லாத**
**மூடருடன் கூடி முயங்காதே நீட**
**அழித்துப் பிறப்பது அறியாது அரனைப்**
**பழித்துத் திரிபவரைப் பாராதே**

நாள்தோறும் நறுமணம்மிக்க சந்தனம் முதலியவற்றைப் பூசி, பூச்சூடி இன்சுவை உணவினை உண்டும், பட்டாடை உடுத்தும் அழகிய கூந்தலை உடைய மங்கையரைத் துய்க்கின்ற ஆசையுள் பட்டுச் சிற்றின்ப மாகிய கடலுள் திளைத்து மகிழ்வதே முத்தி என்றும், அதுவல்லாது இறைவன் அருளிலே தோய்ந்து பேரருள் வெள்ளத்திலே திளைக்கும் வீடு பேறு என்பதாக ஒன்றில்லை என்றும் பிதற்றிக் கரிய ஆணவமாகிய இருட்டிலே திரியும் பேயைப் போல அலையும் உலகாயதர் பால் சென்று விடாதே. தாங்கள் பிரமப்பொருளைக் கண்டு விட்டவர்கள்போல் பல காலும் தருக்கிப் பேசித் தம்மையே கண்டு தாமே பிரமம் என்று கூறுகின்ற அகம் பிரமவாதிகளிடம் அணுகாதே. உயிர்களைக் கொலை செய்வது குற்றம் என்றும் ஆனால் கொல்லப்பட்ட உயிரின் ஊனைத் தின்பது குற்றமல்ல என்றும் வாதிட்டு இன்றவனை மறுத்து அறம் ஒன்றே தெய்வம் என்றும் பொறுமையே வெல்லும் என்றும் நெறியல்லாத நெறி பேசுகிற புத்த சமயத்தைச் சார்ந்தவர்கள் கூறுகிற இழிந்த கொள்கைகளில் அகப்பட்டு அலையாதே. உயர்ந்த வாழ்க்கை வாழ்வது போல் கருதிக் கொண்டு தன் தலையில் வளர்கின்ற மயிர்களைப் பறித்தும் ஆடையின்றித் திரிவது நாணமற்ற செயல் என்று கூட எண்ணுமல் மானம் காக்கும் ஆடையும் துறந்து, பிறவிக்கு ஆட்படுத்தும் ஐந்து கந்தங்களையும் அகற்றி வாழ்வதே முத்தி என்று உரைக்கும் வஞ்சமனம் கொண்ட சமணர்களின் பாழியில் சென்று சேராதே. பழமையான வேதங்களை நாள் தவருமல் ஓதினுலும் அம்மறைகளின் பயன் சிவ பரம் பொருளே என்று அறியாத வேதியர்களின் சொல்லை உண்மை என்று கருதி ஏமாருதே. சிவபெருமானின் திருமேனியில் திகழ்கின்ற திருநீற்றையும் அப்பெருமான் உறைகின்ற திருக் கோயில்களையும் நெஞ்சார எண்ணி வழிபடாத இழிந்தவரிடத்துச் சேராதே. நல்ல தவத்துக்குரிய சிவனடியார் திருவேடமும் சிவ பூசையும் அருள் உடைமையும் மெய்யுணர்தலும் அற்ற அறிவற்றோர் இடத்துச் சென்று சேராதே. மாறி மாறிப் பிறந்தும் இறந்தும் வருகின்ற சிறு தெய்வங்களை வணங்கி ஆதியும் அந்தமும் அற்ற சிவபெருமானைப் பழித்துத் திரிபவர்களை ஏறெடுத்தும் பாராதே.

**— விழித்து அருளைத்**
**தந்து எம்மை ஆண்டருளும் சம்பந்த மாமுனிவன்**
**அந்தம் கடந்து அப்பா லாய் நின்றோன் — எந்தை பிரான்**

**வீற்றிருக்கும் ஓலக்கம் எய்தி அடி வீழ்ந்து இறைஞ்சிப்**
**போற்றி சயசய போற்றியென — ஆர்த்தகரி**
**அன்று உரித்தாய் நின் பவனி ஆதரித்தார் எல்லாரும்**
**வென்றி மதன் அம்புபட வீழ்வரோ — நின்றிடத்து**
**நில்லாத செல்வம் நிலை என்று நீங்கிப்**
**பொல்லா நரகிற் புகுவரோ பல்லோரும்**
**கத்துஞ் சமயக் கணக்கிற் படுவரோ**
**சித்தம் பலகால் திகைப்பரோ — முத்தம்**
**பொருத நகை மடவார் புன்கலவி யின்பம்**
**மருவி மயங்கி வருவரோ இருபொழுதும்**
**நாள் இருபத் தேழும் நவக்கிரகமும் நலியும்**
**கோள் இது வென்று எண்ணிக் குறிப்பரோ — வேளை**
**எரித்த விழியாய் நின் இன்பக் கடற்கே**
**தரித்து மதி மறந்த தையல் – வருத்த மெலாம்**
**தீராய் என உரைத்துச் செங்கமலப் பூந்திருத்தாள்**
**தாராய் எனப் பலகால் தாழ்ந்திறைஞ்சி ஏர் ஆரும்**
**பூங்கொன்றை வாங்கிப் புகழ்ந்து புரி நெஞ்சமே**
**ஈங்கொன்ற வாராய் இனி**

*தனது திருக்கண் நோக்கத்தினல் எங்கள் மீது அருளைப் பொழிந்து எங்களை ஆண்டு கொண்டருளும் சம்பந்த மாமுனிவன், முடிவு என்ற ஒன்றை அறியாது யாவற்றுக்கும் அப்பாலாய் நின்றவன். எமது தந்தையும் தலைவனுமான பேரருளாளன். அவன் கொலு வீற்றிருக்கும் திரு ஓலக்க மண்டபத்தை என் நெஞ்சமே, நீ சென்று அடைவாயாக. அவன் திருவடிகளில் விழுந்து வணங்கி வெல்க! போற்றி! எனப் பணிந்து. அந்த நாள் ஆரவாரித்து வந்த யானையின் தோலை உரித்துப் போர்த்தாய். நீ உலாப் போன காட்சியைக் கண்டு வணங்கிய யாவரும் மன்மதன் விடுக்கும் அம்பு பட்டு வீழ்வாரோ? நிலையற்ற பொருட் செல்வத்தை நிலையென்று கருதி உன்னை விட்டு நீங்கிக் கொடுநரகத்தில் புகுவாரோ? தத்தம் மதங்களே உயர்ந்தனவெனக் கத்தும் புறச் சமயக் கூட்டத்துடன் சேர்வாரோ? அல்லது பன்முறை சித்தம் கலங்கிப் பலகாலும் திகைப்பாரோ? முத்துப் பல் நகை காட்டி மயக்கும் மங்கையர் இன்பத்தில் மயங்குவாரோ? பகலும் இரவும் ஆகிய பொழுதுகளும், இருபத்து ஏழு நாள் மீன்களும் ஒன்பதுகோள்களும் தமக்குத்தீங்கு விளைவிக்கும் என்று நினைத்து அஞ்சுவரோ? காமனை எரித்த விழியுடையாய்! உன்னைக் கண்டது முதல் உன்னைச் சேர்ந்து இன்புறுவதே வாழ்க்கையின் குறிக்கோள் என்று கருதி மற்றவற்றில் மனம் செலுத்தாது உன்னையே நினைந்திருக்கும் உன் அடியாளின் வருத்தத்தை யெல்லாம் தீர்த்தருளு வாயாக! செங்கமலப் பூப்போல விளங்குகின்ற உன் னு டை ய*

திருவடிகளைத் தந்து அருளுவாயாக என்று பல முறை தாழ்ந்து வணங்கி அழகு மிக்க அவனது கொன்றை மாலையை வாங்கி அவன் அருளையே மறவாது போற்றி, என் நெஞ்சமே, மீண்டும் என்னிடத்தில் பொருந்த வருவாயாக!

**வெம்பும் பிறவியலை வீழாமல் வீடளித்த**
**சம்பந்த மாமுனிவன் தார்வாங்கி — அம்புந்தும்**
**வஞ்சமே வும்விழியார் வல்வினையெல் லாம்அகல**
**நெஞ்சமே வாராய் நினைந்து**

நெஞ்சமே, வருத்தும் பிறவிக் கடலில் விழாமல் வீட்டின்பத்தை அருளிய மறைஞான சம்பந்த மாமுனிவனது கொன்றை மாலையை வாங்கி, அம்பினைப் போன்ற கொடிய கண்களைக் கொண்ட மகளிர் வழி வருகின்ற வல்வினை எல்லாம் அகலுமாறு அம்மாலையுடன் வருவாயாக.

உ
சிவமயம்

# உண்மை நெறி விளக்கம்

உண்மை நெறி விளக்கம் என்னும் இந்நூல் மெய் கண்ட சாத்திரங்கள் பதினன்கினுள் பதின்மூன்ருவதாக வைத்து எண்ணப் படுகிறது.

மெய்கண்ட சாத்திரங்களுள் சில நூல்கள் அளவால் மிகக் குறுகியவை. கொடிக்கவி, உண்மை நெறி விளக்கம், வினு வெண்பா ஆகிய மூன்றும் அத்தகையன.

மற்றைய மெய்கண்ட நூல்களைப்பற்றியும், அவற்றின் ஆசிரியர் களைப் பற்றியும் தெளிவான செய்திகள் நமக்குக் கிடைத்துள்ளன. உண்மை நெறி விளக்கத்தின் ஆசிரியரைப் பற்றி இரு வகைப்பட்ட கருத்துக்கள் கூறப்படுகின்றன. ஒரு கருத்து, உண்மை நெறி விளக்கத்தை அருளியவர் சந்தான குரவர்களில் நான்காமவராகிய ஆசிரியர் உமாபதி சிவம் என்பது. இக் கருத்துடையோர்கள் சிவப்பிரகாசம் திருவருட் பயன், வினு வெண்பா, போற்றிப் பஃறெடை, கொடிக் கவி, நெஞ்சு விடு தூது, உண்மை நெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம் ஆகிய எட்டு நூல்களையும் உமாபதி சிவம் அருளிச் செய்தார் என்று கொண்டு, இவை எட்டும் சேர்ந்து சித்தாந்த அட்டகம் என்று பெயர் பெறும் எனக் கூறுவர். இதே தலைப்பில் இவ் வெட்டு நூல்களும் ஒரு சேரப் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

மற்ருெரு கருத்து உண்மை நெறி விளக்கம் என்ற இந்நூலை அருளியவர் சீர்காழிச் சிற்றம்பல நாடிகளின் மாணவராகிய சீர்காழித் தத்துவ நாதர் என்பதாகும். இந்தக் கருத்துக்கு ஆதரவாக,

''எண்ணும் அருள் நூல் எளிதின் அறிவாருக்கு
உண்மை நெறி விளக்கம் ஓதினன் — வண்ணமிலாத்
தண்காழித் தத்துவனர் தாளே புனைந்தருளும்
நண்பாய தத்துவ நாதன்''

என்னும் பாடல் இந்நூலின் சிந்தனை உரையில் பாயிரமாக அமைந்திருப் பதையும் அவ்வுரையின் இறுதியில் சீர்காழிச் சிற்றம்பல நாடிகள் அருளிய துகளறு போதம் என்ற நூலில் விளக்கப் பெற்றுள்ள முப்பது அவதரமும் (நிலைகளும்) உண்மை நெறி விளக்கத்தின் ஆறு பாடல்களில் தசகாரியம் என அடக்கிக் கூறப்பட்டுள்ளது என்ற விளக்கத்தை மேற்கோளாகக் காட்டுகின்றனர். இக் கொள்கை யுடையவர்கள் இருபா இருபஃது நூலுக்குக் கிடைத்துள்ள பழமையான

உரை ஒன்றின் இறுதியில் உள்ள ஒரு வெண்பாவை எடுத்துக்காட்டி மேலே குறிப்பிட்ட பாடலில் பின் இரண்டு அடிகளில் கூறப்படுபவர் ''பண்புடைய சிற்றம்பல நாடி தாள் பணியும், சண்பை நகர் தத்துவ நாதன்'' என்று ஆதாரம் காட்டுகின்றனர். அவ்வாறே அறிஞர் சிலருக்குக் கிடைத்துள்ள உமாபதி சிவத்தின் நூல்கள் அடங்கிய ஓலைச் சுவடிகளில் உண்மை நெறி விளக்கம் காணப்படவில்லை என்று ஆதாரம் காட்டுவர்

மரபுவழி கொள்ளப்படும் கருத்து உண்மை நெறி விளக்கம் ஆசிரியர் உமாபதி சிவத்தால் அருளப்பட்டது என்பதே ஆகும்.

மேலே கூறப்பட்ட பாயிரம் தவிர்த்து இந்நூல் ஆறு விருத்தப் பாக்களை உடையது. பாயிரம் சிந்தனை உரையின் இறுதியிலே காணப் படுகிறது.

**1 மண் முதல் சிவம் அது ஈறும் வடிவு காண் பதுவே ரூபம்**
**மண் முதல் சிவம் அது ஈறும் மலம்சடம் என்றல் காட்சி**
**மண் முதல் சிவம் அது ஈறும் வகைதனில் தான்நிலாது**
**கண் நுதல் அருளால் நீங்கல் சுத்தியாய்க் கருதலாமே.**

மண் முதலாகச் சிவம் ஈறாக அருள் நூல்கள் முப்பத்தாறு தத்துவங்களைக் கூறுகின்றன. அத்தகைய தத்துவங்கள் யாவற்றையும் அருள் நூல்கள் கூறுகிற முறையில் முறைமை தவறாமல் கண்டு உணர்வதே தத்துவ ரூபம் எனப்படும். இத்தகைய முப்பத்தாறு தத்துவங்களும் சடம் ஆதலால் அவை தாமாகவே எதனையும் அறிய மாட்டா. உயிர்தான் அவற்றுள் ஒன்றி நின்று அறியும் என்று உணர்வது தத்துவ தரிசனம் ஆகும். இவ்வாறு கண்ட உயிர் திருவருளின் துணையினாலே முப்பத்தாறு தத்துவங்களின் இயல்பையும் விளைவையும் நன்கு தெளிந்து இவற்றோடு பொருந்தி நில்லாது விலகி நிற்றல் தத்துவ சுத்தி ஆகும்.

சைவ சித்தாந்த மெய்ப்பொருள் இயல் தத்துவங்கள் முப்பத்தாறு என்றும் தாத்துவிகங்கள் அறுபது என்றும் எடுத்துரைக் கின்றன. இவை இரண்டுமாகத் தொண்ணூற்று ஆறு ஆகும். இவற்றின் விளக்கங்களும் வகைகளும் உண்மை விளக்கம் சிவஞான சித்தியார் போன்ற நூல்களில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

தத்துவம் என்றால் உண்மை என்ற பொருள் தரும். உடல் கருவி உலகு நுகர்ச்சிப் பொருள் ஆகிய இவற்றைப் பகுத்தும் உயிர் இவற்றோடு பொருந்தி நிற்கும் முறைமையைக் கொண்டும் தத்துவங்கள் முப்பத்தாறு என்று கணக்கிடப்படுகின்றன. இத் தத்துவங்களை அறிதல் தத்துவ ரூபம் அல்லது தத்துவ வடிவு என வழங்கப்படும். இவற்றைத்

தான் என மயங்காது இவை வேறு தான் வேறு எனவும், தத்துவங்கள் யாவும் அறிவற்ற சட்ப் பொருள் எனவும் ஞான ஆசிரியனால் உணர்த்தப் பட்டு உணர்வது தத்துவ தரிசனம் அல்லது தத்துவக் காட்சி என வழங்கப்படும். இறைவன் திருவருளால் இத்தத்துவங்களின் இயல்பை நன்கு அறிந்து அவற்றோடு கூடாமல் நீங்குவதே தத்துவ சுத்தி என்ற தத்துவத் தூய்மை ஆகும்.

இறைவன் உயிர் தளை ஆகிய முப்பொருள்களும் என்றும் உள்ளவை. இறைவன் முழு முதன்மையும் எண் குணங்களும் உடையவன். எண் குணங்களில் ஒன்று இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், நீங்குதல் என்பது இவ்விடத்தில் சேர்ந்திருப்பது பின் நீங்குவது என்ற பொருளைத் தராமல் பாசங்களால் பற்றப்படாத இயல்பு என்ற பொருளைத் தருகிறது. எனவே பாசங்கள் உயிரைப் பற்றுகின்றன. ஆணவ மலம் உயிரைத் தோற்றமில் காலம் தொட்டே பிணித்து அறியாமையே வடிவாக ஆக்கி விடுகிறது.

உயிரின் அறியாமையைப் போக்குவதற்காக இறைவன் மாயையிலிருந்து தத்துவக் கூட்டங்களை உயிருக்குத் தருகிறான். அவற்றின் வழியாகவும் துணையோடும் உயிரின் அறிவு படிப்படியே வளர்ந்து உரிய பக்குவம் வந்த போது முத்தி நிலையை இறைவனருளால் எட்டுகிறது.

தொடக்க நிலையில் உயிர் தான் வேறு தத்துவங்கள் வேறு என்று அறிவதில்லை. தத்துவங்களையே தானாகக் கருதிக் கொள்கிறது. இதனை விட்டு நீங்க வேண்டுமானால் இவற்றின் தன்மையை அறிந்து முதலில் தன்னை வேறாகக் காணல் வேண்டும் அவ்வாறு காண்பதுவே தத்துவ ரூபம் எனப்படும். அதை அடுத்துத் தத்துவங்களின் தன்மையை, இலக்கணத்தை,அவை அறிவற்றன என்பதை உணர்வதாகும். மூன்றாவது படிநிலையாக இத்தத்துவங்களை விட்டு நீங்கினால் அல்லது சிவப் பேறு கைவராது என்பதை அறிதல் வேண்டும் அதுவே தத்துவ சுத்தி எனப் படும். இம் மூன்று படிநிலைகளையும் முதற்பாடலில் ஆசிரியர் விளக்கியுள்ளார்.

**2 பாயிருள் நீங்கி ஞானம் தனைக் காண்டல் ஆன்ம ரூபம்**
**நீயும்நின் செயல் ஒன்று இன்றி நிற்றலே தரிசனம் தான்**
**போய் இவன் தன்மை கெட்டுப் பொருளிற் போய் அங்குத்**
**தோன்றாது**
**ஆய்விடில் ஆன்ம சுத்தி அருள் நூலின் விதித்தவாறே.**

பரந்த இருளாக எல்லா உயிர்களையும் பற்றிக் கொண்டிருக்கிற ஆணவ மலத்தின் பிடியிலிருந்து விலகித் தன்னுடைய சிற்றறிவுக்கு அறிவுக்கு அறிவாக நின்று உதவுவது இறைவனுடைய பேரறிவே என்பதை உணர்வது ஆன்ம ரூபம் எனும் உயிரின் வடிவு. இறைவனின்

பேரறிவு புலப்பட்டுத் தன் சிறுமையையும் உணர்ந்த உயிர் அவனுடைய பேரறிவுச் சத்தியின்றித் தனக்கென ஒரு ஆற்றல் இல்லை செயல் இல்லை என்பதை உணர்வது இதற்கு அடுத்த படிமுறையாகும். இது ஆன்ம தரிசனம் எனும் உயிர்க் காட்சி. இது முற் கூறியதற்கு அடுத்த படிநிலை. எல்லாம் சிவன் செயல் என்றுணர்ந்த உயிர் செயலின்றி நின்ற தன்மையோடு அமையாது நான் இதனை அறிகின்றேன் நான் இதனைச் செய்கின்றேன் எனத் தன்முனைப்போடு சுட்டியறிவும் அறிவும் நீங்கப் பெற்று இறைவன் திருவருளிலே ஒன்றித் தன்முனைப்பும் அற்று ஆணையாம் சிவத்தை சார்ந்து அதிலேயே ஒடுங்கி அவனே தானே ஆகிய அந்நெறியில் நிற்பது ஆன்ம சுத்தி எனப்படும் உயிரின் தூய்மை ஆகும். இவை மூன்றும் இறைவன் அருளிய ஆகமங்களில் கூறப்பட்ட முறைமை.

ஞானம் என்பது திருவடி உணர்வாகிய சிவஞானம். இரவில் காண இயலாதிருந்த கண் காலையில் கதிரவன் தோன்றியதும் அதனைக் காண்கிறது. இதுவே ஆணவ மல மறைப்பில் இறைவனை அறிய ஒண்ணாது இருந்த உயிர் சிவானந்தத்தைக் காண்பதற்கு உவமையாயிற்று. இதுவே ஆன்ம ரூபம் எனப்படும்.

உயிர் தனித்து நின்று காணும் வல்லமையற்றது. ஏதாவது ஒரு பொருளைச் சார்ந்து நின்று தன்னைக் காணும் இயல்புடையது. இது வரை தத்துவங்களைச் சார்ந்து தத்துவம் வேறு தான் வேறு என உணராது இருந்த உயிர் இப்போது தன்னை இயக்குவிக்கும் திருவருள் ஆற்றலை யின்றித் தனக்கு ஒரு ஆற்றல் இல்லை என்பதை உணரும். இதுவே ஆன்ம தரிசனம் எனப்படும் உயிர்க் காட்சி.

திருவடிப் பேற்றினுள் இறைவன் திருவருளால் அடங்கி அதன்பின் சிவத்தைச் சார்ந்து பின் அதனை விட்டு அகலாது குறைவற்ற அன்பினால் அப் பேரின்பத்தைத் தன்னை மறந்து துய்த்துக் கொண்டிருக்கும் நிலை ஆன்ம சுத்தி எனப்படும் உயிர்த் தூய்மை.

இது வரை சொல்லப்பட்டவை முறையே தத்துவ ரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி, ஆன்ம ரூபம், ஆன்ம தரிசனம், ஆன்ம சுத்தி என்ற ஆறுமாகும். தத்துவங்களும் உயிரும் குற்றமுடையன ஆகையால் அவற்றின் வடிவு காண்டலும் இயல்பு காண்டலும் ஆகிய இரண்டு நிலைகளுக்குப் பின்னர் அவற்றின் தூய்மை நிலை பற்றிக் கூறப்பட்டது. இதை அடுத்த பகுதியில் பரம்பொருளாகிய சிவத்தைப் பற்றிக் கூறத் தொடங்குகிறார் ஆசிரியர். அது நான்கு வகையாகக் கூறப்படும். அவை முறையே சிவ ரூபம், சிவ தரிசனம், சிவ யோகம் சிவ போகம் என்பன. தூய்மையே வடிவான இறைவனுக்குத் தூய்மை கூற வேண்டுவதில்லை என்பது ஒன்று. உயிரின் குறிக்கோள் சிவத்தோடு ஒன்றுதலும் சிவப் பேரின்பத்தை நுகர்தலும் ஆகிய இரண்டுமே என்பது மற்றொன்று.

**3 எவ்வடிவுகளும் தானும் எழிற்பரை வடிவதாகிக்**
**கவ்வியமலத்து ஆன்மாவைக் கருதியே ஒடுக்கி ஆக்கிப்**
**பவ்வமீண்டு அகலப் பண்ணிப் பாரிப்பான் ஒருவன் என்றே**
**செவ்வையே உயிருட் காண்டல் சிவரூபமாகும் அன்றே.**

உலகத்தில் காணப்படுகிற அறிவுஇல் பொருளும் அறிவுடைப் பொருளுமாகிய எல்லா வடிவங்களும் தானே ஆகி அவற்றொடு இரண்டறக் கலந்து நின்று, எழில்மிக்க பராசத்தியையே தனக்கு வடிவமாகக் கொண்டு, மலத்தால் விழுங்கப்பட்டுக் கிடக்கும் ஆன்மாக்கள் மீது கொண்ட கருணையின் காரணமாக அவற்றுக்கு உடல் கருவி உலகு நுகர்ச்சிப் பொருள் ஆகியவற்றைத் தந்து அவற்றின் வினைக்கு ஈடாக பிறப்பு இறப்புக்களையும் வழங்கி அவற்றின் இளைப்பாறுதலுக்காக ஒடுக்கிப் பின்னர் உளவாக்கி, பக்குவப்பட்ட உயிர்களுக்குப் பிறவிக் கடலில் இருந்து மீள்வதற்கு வழிகாட்டி அவற்றுக்கு வீடுபேறு வழங்குபவன் சிவபெருமான் ஒருவனே என்று செம்மையாக உயிர் உணர்வதே சிவரூபம் ஆகும்.

எவ்வடிவுகளும் தானும் என்ற பகுதிக்கு சிவம் சத்தி நாதம் விந்து சதாசிவம் மகேசுவரன் உருத்திரன் மால் அயன் என்ற "நவம்தரு பேதம் ஏகநாதனே நடிப்பன் என்பர்" (சித்தியார் 164) என்ற சிவஞான சித்தியார்த் திருவிருத்தத்தின் அடிப்படையிலும் பொருள் கொள்ளுவர்.

எழிற்பரை என்பது கருணை நிறைந்த பராசத்தியைக் குறித்து நின்றது. உயிர்களை உய்விப்பதற்காக அவற்றைப் பிறப்பு இறப்புட் செலுத்தி வினையைக் கழிப்பது இறைவனின் திருவருள் ஆதலால் "அருளது சத்தியாகும் அரன் தனக்கு" (சித்தியார் 239) எனப் பெரியோர் உரைப்பர்.

தோற்றமில் காலம் தொட்டே உயிர்களைப் பற்றிக் கொண்டிருக்கும் ஆணவ மலம் நீங்குதற் பொருட்டே இறைவன் ஐந் தொழில் இயற்றுகிறான். ஆதலால் கவ்விய மலத்து ஆன்மாவைக் கருதியே ஒடுக்கி ஆக்கி பவ்வம் மீண்டு அகலப்பண்ணி என்று உரைத்தார் ஆசிரியர்.

ஐந்தொழிலும் இயற்றுவானும் உயிர்களுக்கு வீடுபேறு தருவானும் சிவபெருமான் ஒருவனே என்ற தெளிவும் அப்பெருமானின் வடிவம் தடையிலா ஞானமாகிய திருவருள் ஆற்றல் என்று ஐயமும் திரிபும் இன்றிக் காண்டல் சிவரூபம் எனப்படும் சிவவடிவமாகும்.

**4 பரைஉயிரில் யான் எனது ஒன்று அறநின்றது அடியாம்**
**பார்ப்பிடம் எங்கும் சிவமாய்த் தோன்றல் அதுமுகமாம்**
**உரை இறந்த சுகம் அதுவே முடியாகும் என்று இவ்**
**உண்மையினை மிகத் தெளிந்து பொருள்வேறு ஒன்று இன்றித்**

தரைமுதலில் போகாது நிலையினில் நில்லாது
தற்பரையில் நின்று அழுந்தாது அற்புதத்தின் ஆகும்
தெரிவு அரிய பரமானந்தத்தில் சேர்தல்
சிவன் உண்மைத் தரிசனமாய்ச் செப்பும் நூலே.

யான் எனது என்னும் அகப்பற்றும், புறப்பற்றும் அறவே நீங்குமாறு உயிரில் திருவருள் பதிதல் சிவபெருமானது திருவடி ஆகும். பார்க்கும் இடம் எங்கும் அசைவனவும் நின்றனவுமாகிய பொருள்கள் எல்லாம் சிவபெருமானாகவே தோன்றுதல் அவனது திருமுகம் ஆகும். இதன் விளைவாகச் சொல்லுக்கு அடங்காமல் தோன்றும் பேரின்பமே அப்பெருமானது திருமுடியாகும். இவ்வாறு அறிந்து உண்மை தெளிந்து இறைவனைத் தவிர வேறு பொருள் இல்லை என்பதை உணர்ந்து மண் முதலாகிய தத்துவங்களைச் சேர்ந்து பிறவியுட்படாமலும் தன் முனைப்பாகிய செருக்கினில் அழுந்தாமலும் இவ்வாறு அறிதற்குத் துணையாக நின்ற திருவருளை உணர்ந்து அதனோடு அமையாது அதற்கு அப்பாலும் சென்று அதனால் விளைகின்ற தெரிதற்கரிய பேரின்பத்தில் திளைத்திருத்தல் சிவதரிசனம் ஆகும் என்று சிவாகமங்கள் கூறும்.

''யான் எனது என்று அற்ற இடமே திருவடியா
மோன பரானந்தம் முடியாக — ஞானம்
திருவுருவா இச்சை செயலறிவு கண்ணா
அருளதுவே செங்கை யல்ரா — இருநிலமே
சந்நிதியா நிற்கும் தனிச்சுடரே!''

என்று கந்தர் கலிவெண்பாவில் குமரகுருபர முனிவர் அருளியுள்ளது இங்கு நினைவு கூருதற்குரியது. ''பார்க்கும் இடம் எங்கும் ஒரு நீக்கமற நிறைகின்ற பரிபூரணானந்தமே'' என்ற தாயுமானவர் வாக்கும் இதனை உணர்த்தும்.

சிவப் பேரின்பம் இத்தகையது என்று சொல்லால் உணர்த்த இயலாது என்பதனைத் திருஉந்தியார்,

''இங்ஙன் இருந்ததென்று எவ்வண்ணம் சொல்லுகேன்
அங்ஙன் இருந்தது என்று உந்தீபற
அறியும் அறிவு அது அன்று உந்தீபற

என்று அருளிச் செய்கிறது.

தரை முதலில் போகாது என்பது தத்துவ வயப்படாது என்று பொருள் தரும். ஏழாம் பாட்டில் மண் முதல் என்று சொல்லப்பட்ட கருத்து இங்குத் தரை முதல் என்று சொல்லப்பட்டது.

திருவருள் வழியே சென்று சிவத்தினை அடைதல் வேண்டும் என்பதை வலியுறுத்துவதற்காக "தற்பரையில் நின்று அழுந்தாது அற்புதத்தின் ஆகும் தெரிவு அரிய பரமானந்தத்தில் சேர்தல்" என்று விதந்து கூறினர்.

5. எப்பொருள் வந்து உற்றிடினும் அப்பொருளைப் பார்த்து அங்கு
எய்தும் உயிர்தனைக் கண்டு இங்கு அவ்வுயிர்க்கு மேலாம்
ஒப்பில் அருள் கண்டு சிவத்து உண்மை கண்டு இங்கு
உற்றது எல்லாம் அதனாலே பற்றி நோக்கித்
தப்பினைச் செய்வதும் அதுவே நினைப்பும் அதுதானே
தரும் உணர்வும் பொசிப்பும் அதுதானே ஆகும்
எப்பொருளும் அசைவு இல்லை என அந்தப் பொருளோடு
இசைவதுவே சிவயோகம் எனும் இறைவன் மொழியே.

உலகியல் பொருள்கள் எதனோடு பொருந்த நேரிடினும் அப் பொருள் அறிவற்றதாயும் சடமாயும் அழிந்து போகிற தன்மையுடைய தனை என்றும் அறிந்து அதன் உண்மையை உணர்ந்து உயிரின் உண்மையான நிலைமை தனக்கென ஒன்று இன்றித் தன்னிலும் மேலான திருவருளின் துணை கொண்டு செயல்படுவதே என்பதை அறிந்து, அவ் அருளின் வழியாக சிவ பரம்பொருளின் உண்மையை உணர்ந்து அதனுள் அடங்கி, மறப்பும் நினைப்பும் அறிவிக்க அறியும் ஆன்மாவும் வினை நுகர்வும் சிவமே யாகும் என்பதையும் உணர்ந்து அவனன்றி ஓர் அணுவும் அசையாது என்பதையும் தெளிந்து சிவத்தோடு பொருந்து வதே சிவயோகம் என்று இறைவன் மொழியாகிய ஆகமங்கள் கூறு கின்றன,

தப்பு என்பது அதன் பின்னர்க் கூறப்படுகின்ற நினைப்பு என்ற சொல்லுக்கு மறுதலைப் பொருளை உணர்த்துதால் இங்கு அது மறப்பு என்று பொருள் கொள்ளப்பட்டது. பொசிப்பு என்பது நுகர்வு என்ற பொருளைத் தரும்.

6. பாதகங்கள் செய்திடினும் கொலை களவு கள்ளுப்
பயின்றிடினும் நெறியல்லா நெறி பயிற்றிவரினும்
சாதிநெறி தப்பிடினும் தவறுகள் வந்திடினும்
தனக்கு என ஓர்செயல் அற்றுத் தான் அதுவாய் நிற்கில்
நாதன் அவன் உடல்உயிராய் உண்டு உறங்கி நடந்து
நாளு போகங்களையும் தான் ஆகச் செய்து
பேதம் அற நின்று இவனைத் தானாக்கி விடுவன்
பெருகுசிவ போகம் எனப் பேசும் நெறிஇதுவே.

சிவ யோகத்தில் பொருந்தியவர்கள் இவ்வுலகில் வாழும் காலத்துத் தவறுகள் செய்திடினும் கொலை களவு கள்ளுண்ணல் போன்ற வற்றைச் செய்யினும் அறநெறி சாராத நெறியில் ஒழுகினும், குலத் துக்கு ஒவ்வாத குற்றங்கள் செய்யினும் அல்லது குற்றம் இழைக்காமலே பழிவந்து சேர்ந்தாலும், அவர்கள் ஏகனாகி இறை பணி நிற்பவர்கள் ஆகையால் இறைவன் அவர்கள் செயலை எல்லாம் தானே ஏற்றுக் கொண்டு அவர்களையும் தானாகச் செய்வன். இதுவே சிவபோகம் என்று கூறப்படும்.

பாதகம் செய்திடலுக்குச் சண்டேச நாயனாரையும், கொலைக்குக் கோட்புலி நாயனார் வரலாற்றையும், நெறியல்லா நெறி என்பதற்கு மூர்க்க நாயனாரையும் இவ்வாறே பொருந்தும் அடியார் வரலாறுகளைப் பொருத்திக் காண்க.

சிவஞான சித்தியாரில்,

"இவன் உலகில் இதம் அகிதம் செய்த எல்லாம்
இதம்அகிதம் இவனுக்குச் செய்தார் பால் இயையும்
அவன் இவனாய் நின்றமுறை ஏகன் ஆகி
அரன்பணியில் நின்றிடவும் அகலும் குற்றம்
சிவனும்இவன் செய்திஎலாம் என்செய்தி என்றும்
செய்தது எனக்கு இவனுக்குச் செய்தது என்றும்
பவம்அகல உடனாகி நின்றுகொள்வன் பரிவால்
பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கி விடுமே."

எனக் கூறப்பட்ட திருப்பாடல் இருக்கருத்தை வலியுறுத்தும்.

உ
சிவமயம்

# சங்கற்ப நிராகரணம்

மெய்கண்ட நூல்கள் பதினான்கினுள் இறுதியில் வைத்து எண்ணப் படுவது சங்கற்ப நிராகரணம். ஆசிரியர் உமாபதி சிவம் அருளிச் செய்த எட்டு நூல்களுள் இதுவும் ஒன்று என்பர்.

சங்கற்பம் என்பது கொள்கை விளக்கம். நிராகரணம் என்பது கொள்கை மறுப்பு. இந்நூலுள் ஒன்பது மதங்களின் கொள்கைகள் அவ்வச் சமயத்தாரால் கூறப்பட்டு அதற்கு அடுத்த படியில் உள்ள சமயத்தாரால் முறையே மறுக்கப்படுகின்றன. இறுதியில் சைவ வாதி நிராகரணத்துடன் நூல் நிறைவு பெறுகிறது.

சிவஞான சித்தியாரின் பரபக்கம் பதினான்கு புறச் சமயங்களை மறுத்து எழுதப் பெற்று அதனைத் தொடர்ந்து வரும் சுபக்கம் சைவ சித்தாந்தக் கொள்கையின் உண்மையைத் தெளிவுற விளக்கிக் காட்டுகிறது. சங்கற்ப நிராகரணத்துள் முதலில் கூறப்பட்டுள்ள மாயா வாதியின் கருத்து ஒன்றே புறச் சமயத்தைச் சார்ந்ததாகும். மற்றைய எட்டு மதங்களும் அகச் சமயங்களும் அவற்றின் உட் பிரிவுகளும் ஆகும்.

பாயிரத்துள் வருகின்ற ''ஏழஞ்சு இரு நூறு எடுத்த ஆயிரம் வாழும் நற் சகனம் மருவா நிற்ப'' என்ற பகுதி இந்நூல் எழுதப் பெற்ற காலம் சக ஆண்டு 1235 என்று தெளிவு படுத்துகிறது. அதிலிருந்து இந்நூலின் அரங்கேற்றம் கி பி. 1313 என்பது புலனாகிறது. இந்தச் செய்தியின் அடிப்படையிலேயே மெய்கண்ட சாத்திரங்களின் காலமும் கணிக்கப்படுகிறது.

இந்நூலின் அமைப்பு முறை மிகவும் பாராட்டுதற்குரியது. முதலில் கூறப்பட்ட மதக் கொள்கையில் ஏற்புடையவற்றை ஏற்றுக் கொண்டு ஏற்கத் தகாதனவற்றை மறுத்து அதனை அடுத்த மேற்படியில் உள்ள மதத்தினர் தம் கருத்தை எடுத்துரைப்பதாக அமைந்து இறுதியில் சைவ சித்தாந்தத்தின் செம்பொருளை ''சிவப்பிரகாசச் செழுந்தமிழ் உண்மையை, அருளுடன் ஆய்ந்து கொள்ளத், திருவருள் வினவல் திருந்திடும் அன்றே'' என்று நிறைவு செய்கிறார் ஆசிரியர்.

## காப்பு

**1 திருந்திய அருந்தவம் பொருந்து பல் முனிவர்**
**கமையாக் காதல் அமையாது பழிச்சும்**
**நிகரில் செக்கர்ப் புகர் முகத்து எழுந்த**
**புனிற்று வெண்பிறைத் தனிப்பெருங் கோட்டுத்**

தழைசெவி மஜ்மதப் புழைநெடுந் தடக்கை 5
வாள்தரும் மும்மை நாட்டம் நால்வாய்ப்
பாசம் அங்குசம் தேசுறும் எயிறுஒண்
கனியிவை தாங்கும் புனித நாற்கரத்து
அங்கதம் கடகம் பொங்கிழை யாரம்
நிறைமணிச் சுடிகைக் கறையணல் கண்செவி 10
கொண்டதிண் பெரும் பண்டிக் குறுந்தாள்
களிறுதன இருகழல் கருத்தா்
வெளிறுஉறு துயரம் வீட்டினம் பெரிதே.

செப்பமாகிய அருந்தவம் புரிந்த பல முனிவர்கள், நிரம்பாத அன்புடன் ஒழியாது வழிபடும் ஒப்பற்ற செவ்வானம் போன்ற புள்ளியையுடைய திருமுகத்தில் பிள்ளை வெண்பிறை போல ஒற்றைக் கொம்பும் தழைந்த காதுகளிரண்டும் பொழிகின்ற மும்மதமும், உள்துளை உடைய நீண்ட துதிக்கையும், ஒளி பொருந்திய முக்கண்ணும், தொங்குகிற திருவாயும், ஒரு கையில் பாசமும், ஒரு கையில் அங்குசமும், மற்றொரு கையில் ஒடித்தெடுத்த கொம்பும், இன்னொரு கையில் கனியும் தாங்கிய திருக்கரங்களையும் அணி தரித்த தோளும் கடகமும் முத்து மாலையும் அணிந்த திருத்தோள்களும் மணியுடைய பாம்பினைத் திருஅரையில் கச்சாகக் கட்டிய திருவயிற்றையும் குறிய திருவடிகளையும் உடைய ஓங்கார வடிவமாகிய யானைமுகத்து விநாயகப் பெருமானது இரு திருவடி மலர்களையும் நினைந்து வணங்கி அறியாமையினால் உண்டாகிய துன்பத்தை அறவே ஒழித்தனம்.

கமையா — நிரம்பாத, புகர்முகம் — யானையின் முகத்தில் தோன்றும் வெண்புள்ளிகள் புகர் எனப்படும். மும்மை நாட்டம் — மூன்று கண்கள். அவ்வை கதிரவன், திங்கள், நெருப்பு. நால்வாய் — தொங்குகின்ற வாய், சுடிகை—நாகப் பாம்பின் தலையிலே விளங்குகின்ற மணி. பண்டி — வயிறு. கருதா — கருதி.

## பாயிரம்

2 பெரும்கடல் உதவும் கருங்கடு வாங்கிக்
கந்தரத்து அமைத்த அந்தமில் கடவுள்
பாலரை உணர்த்தும் மேலவர் போலக்
கேட்போர் அளவைக் கோட்படு பொருளால்
அருளிய கலைகள் அலகில அவை 5
பலபல சமயப் பான்மைத்து அன்றே
அஃதால் அந்நூல் தன்மை உன்னிய
மாந்தர் இதுவே பொருள்என்று அதன்கிலே

அறைதலின் வேற்றுஓர் பனுவல் ஏற்றோர்க்கு
இசையா மாறுபாடு கூறுவர் அதனால் 10
புறச்சம யங்கள் சிறப்பு இலஆகி
அருளில் மாந்தரை வெருள்உற மயக்கி
அலகைத் தேரின் நிலையில் தீரும்
ஈங்கு இவை நிற்க நீங்காச் சமயம்
மூவிரு தகுதி மேவிய தாமும் 15
ஒன்றோடுஒன்று சென்றுஉறும் நிலையில்
ஆறுமாறா வீறுடைத்து இவற்றுள்
எவ்வம் இல்லாச் சைவநற் சமயத்து
அலகில் ஆகமம் நிலவுதல் உள அவை
கனகம் இரணியம் காஞ்சனம் ஈழம் 20
தனம்நிதி ஆடகம் தமனியம் என்றுஇப்
பலபெயர் பயப்பதோர் பொருளே போலப்
பதிபசு பாச விதிமுறை கிளக்கும்
வாய்ந்த நூல்கள் ஆய்ந்தனர் ஆகி
ஆசான் ஆகி வீசிய சமத்துடன் 25
ஏழ்அஞ்சு இருநூறு எடுத்த ஆயிரம்
வாழும்நல் சகனம் மருவா நிற்பப்
பொற்பொது மலிந்த அற்புதன் ஆனி
ஆறாம் விழவில் பொன்தேர் ஆலயத்து
ஏரு எண்மர் நிரையில் இருப்ப 30
மயங்கு வாத மாயா வாதி
முயங்கிட ஒருதலை முதுவெதிர் மணிசேர்
பெண்ணை சூழ்ந்த வெண்ணெய்அம் பதிதிகழ்
மெய்கண் டவன் அருள் கைகண் டவர்களில்
ஒருவர் ஒருதலை மருவி இருப்ப 35
வஞ்சப் பிறவிக்கு அஞ்சி வந்து ஒருவன்
எது இறை அருள்என இதுஎனும் மாயா
வாதியை அயலினர் மறுதலைத்து அருள்தர
மற்றவர் அயலினர் அவர்உரை மறுத்துச்
சொற்றர அயலரில் அவரும் தொலைவுற்று 40
இன்னே எழுவரும் முன்னே கழியுழி
ஆங்குஅயல் இருந்த அருளினர் அழகுஇது
நீங்கள் சங்கற்பம் நிராகரித் தமைஎன
மற்றவர் உரைத்த சொற்றரு பொருள்கொடு
வாதம் செற்பை விதண்டையும் ஏதுவும் 45

**ஓது நால்வகை உவமையும் திகழ்தர**
**அருள்சேர் மாந்தர் வெருள் சேராமல்**
**தர்க்கமும் விடையமும் கற்க**
**நற்கவி மாந்தர் நகநவிற் றுவனே.**

பெருங்கடலிலே தோன்றிய கொடிய நஞ்சினை வாங்கித் தம் கழுத்திலே தரித்துக் கொண்ட அழிவற்ற தன்மையுடைய சிவபெருமான். தம் குழந்தைகளுக்குக் கல்வி புகட்டும் பெற்றோர்களைப் போல அவரவர் அறிவுக்குத் தகுந்தபடி அளித்தருளிய நூற்கள் கணக்கிலடங்காதன அவை கேட்பவர்களின் அறிவு வளர்ச்சிக்கு ஏற்ப அமைந்தன. ஆதலால் தம்முள் வேறு பட்டுப் பலப்பல சமயங்களை உணர்த்துகின்ற நூற்களாக அமைந்தன. அந்தந்த நூல்களைக் கற்றறிந்த மாந்தர் அதுவே பொருள் என்று கொண்டு மற்றைய நூல்களை ஏற்பதற்கு இசையாது அவற்றைப் பொருந்தாதன என்று மறுப்பார்கள்.

ஒருவருக்கொருவர் மாறுபடச் சொல்வதனுல் சிறப்பு அற்றன வாகிய புறச் சமயங்கள் திருவருளுக்கு ஆட்படாத மாந்தர்களை அச்சுறுத்தியும் மயக்கியும் கானல் நீர்போல் அவர்களை அலைக்கழிக்கும். இவை தவிர அகச்சமங்கள் எனப்படும் சைவம் பாசுபதம் மாவிரதம் காளாமுகம் வாமம் வைரவம் ஆகிய ஆறும் ஒன்றேடு ஒன்று மாறுபட்டும் தம்மில் தனித்தனி உயர்ந்தும் வழங்குகின்றன.

இவற்றுள் குற்றமற்ற சைவசமயத்தில் எண்ணிறந்த ஆகமங்கள் வழங்குகின்றன அவை பலவாயினும் அவற்றுள் கூறப்படும் பொருள் முடிவு ஒன்றே. பொன் என்ற ஒரு பொருளைக் குறிப்பதற்கு கனகம், இரணியம், காஞ்சனம், ஈழம், தனம், நிதி, ஆடகம், தமனியம் என்று பல சொற்களைப் பயன் படுத்துவது போன்றது இது. எந்தப் பெயரில் ஆகமம் வழங்கினுலும் ஆகமங்கள் அனைத்தும் பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள்களின் இயல்பையே உணர்த்தும். ஆகமங்களைக் கற்றுணர்ந்த பெரியோர்கள் பலர் ஆசிரியத் தன்மை பெற்று வீற்றிருந்தனர்.

தில்லைப் பதியில் பொன்னம்பலத்தில் திருக்கூத்து இயற்றும் அம்பலவாணப் பெருமானின் ஆனித் திருவிழாவில் ஆறும் திருநாளில் சக ஆண்டு ஆயிரத்து இருநூற்று முப்பத்து ஐந்தில் திருத்தேர் மண்டபத்தில் ஒவ்வொரு சமயத்தைச் சார்ந்த ஆசிரியன்மார் எண்மர் வீற்றிருந்தனர்.

ஒரு புறம் முன்னேடு பின் முரணுகத் தன் தத்துவங்களைக் கூறும் மாயாவாதி ஒருவன் இருந்தனன். மற்றெரு புறம், முதிர்ந்த மூங்கில்கள் முத்துக்கள் சிதறப் பாய்கின்ற பெண்ணை ஆறு சூழ்ந்த திருவெண்ணெய் நல்லூரிலே அவதரித்தருளிய மெய்கண்ட தேவ நாயனுரின் திருவருள் கைவரப் பெற்ற பெரியார் ஒருவர் அமர்ந்திருந்தார். அப்போது ஒருவர்

கொடிய பிறவிப் பிணிக்கு அஞ்சி நல்லாறு எது இறைவன் திருவருள் எத்தகையது என வினவ, முதலில் அங்கிருந்த மாயாவாதி தன் நூலின் வழி நின்று அதுவே பொருள் என்று எடுத்துரைத்தனன். அவன் அருகே இருந்த மற்றொரு சமயவாதி அவன் கொள்கையை மறுத்துத் தம் சமயக் கொள்கையை எடுத்துக் கூறி அதுவே பொருள் என்றார். மற்றொரு வராலே அவரும் மறுக்கப்பட்டார். இவ்வாறு ஒருவரை ஒருவர் மறுத்து எண்மரும் ஒதுக்கப்பட்டார்கள்.

மெய்கண்ட தேவரின் அருள் பெற்ற ஆசிரியர் ''நீங்கள் ஒருவரை ஒருவர் மறுத்த தன்மை நன்று. இனி நான் நீங்கள் கூறிய பொருள்களை வாதம் செற்பை விதண்டை ஏது நால்வகை உவமைகள் ஆகியவற்றைப் பயன்படுத்தித் திருவருளுக்கு வழிகாட்டுவதாகவும், மலைவு என்னும் அச்சத்தைத் தீர்ப்பதாகவும், மாறுபட்ட பொருள்களையும் உண்மைப் பொருள்களையும் ஒருங்கே உணர்த்துவதாகவும் கவி வல்ல புலவர்கள் இவனும் ஓர் நூல் செய்தனனே என்று நகைக்கத் தக்கதாகவும் ஓர் நூல் இயற்ற முற்பட்டேன் என்று அருளினார்.

இப்பாயிரம் ஆசிரியர் உமாபதி சிவத்தினால் இயற்றப் பெற்று நூல் முகத்து அமைக்கப்பட்டது. இதில் காலம், களம், கேட்போர் ஆகிய பாயிரத்துக்கு விதிக்கப்பட்ட இலக்கணங்கள் பொருந்தி உள்ளமையைக் காணலாம் எல்லா அருள் நூல்களும் சமயங்களும் சிவபெருமானால் அருளப் பெற்றவை என்பது சைவ சித்தாந்தத்தின் கொள்கை. அருளியவன் இறைவனே யானால் அவற்றுக்குள்ளே கருத்து வேறுபாடுகளும் முரண்பாடுகளும் தோன்றுவதேன் என்ற வினா எழுவது இயல்பு. அதற்கு ஆசிரியர் விடை கூறுகிறார். தந்தையும் தாயும் தங்கள் குழந்தைகளுக்கு அறிவு புகட்ட முற்படும் போது அக் குழந்தைகளின் அறிவு வளர்ச்சி நிலைக்கு ஏற்பவே கற்பிப்பார்கள் எனவே கல்வி என்பது கற்றுக் கொடுப்பவரின் தகுதிக்கு ஏற்றதாக இல்லாமல் கற்றுக் கொளபவர்களின் தகுதிக்கு ஏற்றதாகவே அமைய வேண்டும். அவ்வாறே இறைவனும் உயிர்களின் பக்குவ நிலைக்கு ஏற்பப் படிமுறையிலே அமைந்த சமயங்களையும், சமய நூல்களையும் அருளிச் செய்தான் என விளக்குகிறார். ''தர்க்கமிடும் தொன்னூல் பரசமயம் தோறும் அது அதுவே நன்னூல் எனத் தெரிந்து நாட்டுவித்து'' எனக் கந்தர் கலிவெண்பாவில் குமரகுருபர முனிவரும், ''ஆறு சமயத்து அவரவரைத் தேற்றும் தகையன, தேறிய தொண்டரைச் செந்நெறிக்கே ஏற்றும் தகையன'' எனத் திரு இன்னம்பர்த் திருப்பதிகத்தில் திருநாவுக்கரசு நாயனாரும் அருளியுள்ளமை இங்கு நினையத் தக்கன.

இவற்றுள் புறச் சமயங்கள் கானல் நீர் போன்றவை என்று கூறி ஒதுக்கினார். அச்ச சமயங்கள் ஆறனுள் சைவ சமயமே உயர்ந்தது, குற்ற மற்றது எனக் கூறிய ஆசிரியர், அதிலும் பல ஆகமங்கள் உளளதற்கு

விளக்கம் கூறுகிறார். பொன் ஒன்றே கனகம் இரணியம் முதலிய பெயர்களிட்டு வழங்கப்படுவது போல, ஆகமங்கள் பல ஆனாலும் அவை யாவும் பதி, பசு, பாசம், என்னும் முப்பொருள் உண்மையை உரைப்பதனால் ஒரே தன்மை வாய்ந்தனவே என்று அமைதி கூறினார்.

காலமும் களமும் கூறுவாராகி, தில்லையில் சகஆண்டு 1235-ல் ஆனித் திருவிழாவில் ஆறும் திருநாளில் தேர் மண்டபத்தில் இந்நூல் தோன்றும் களம் அமைந்தது என்றார் மாயாவதி உட்பட எண்மரும் மெய்கண்ட சந்தானத்துள் வந்த அருளாசிரியர் ஒருவருமாக இந்த அவை அமைந்தது என்றார்.

வாழ்க்கையில் உண்மை உணர்ந்து உய்வு தேட விழைந்தான் ஒருவன் வினவ ஒவ்வொருவராகத் தத்தம் சமயக் கருத்துக்களை எடுத்துரைத்தமையும் இறுதியில் மெய்கண்ட சந்தானத்து ஆசிரியர் சைவ சித்தாந்தத் தேனமுது புகட்டியமையையும் கூறினார். அவையடக்கமாகத் தாம் எழுதலுற்ற இந்நூல் நற்கவிப் புலவர்களுக்கு நகைப்பினை விளைவிக்கும் என்று குறிப்பிட்டார்.

கடு — நஞ்சு. அலகைத்தேர் — பேய்த்தேர், கானல் நீர், கனகம் முதலிய எட்டுப் பெயர்களும் பொன்னின் வகைகளைக் குறித்தன. முதுவெதிர்மணி — முதிர்ந்த மூங்கிலில் விளைந்த முத்து, சங்கற்பம் — — கொள்கையை எடுத்துரைப்பது. நிராகரித்தமை மறுத்தமை வாதம் — தருக்க முறையில் வினவி விளக்குவது. செற்பம் பிறர் கொள்கையை மறுத்துத் தன் கொள்கையை நிலை நாட்டுவது. விதண்டை — தன் கொள்கையைச் சொல்லாமல் பிறர் கொள்கையை மறுப்பது. ஏது — இயல்பு, காரியம், அனுபலப்தி என மூன்று (சிவஞான சித்தியார் சுபக்கம் 16) உவமை நான்கு வகைப்படும் — வினை, பயன், மெய், உரு என்பன அவை. (தொல் உவமை இயல்)

## நூல்

### மாயாவாதி சங்கற்பம்

**3** நவிற்றிய நிரையில் அவித்தையினேன் உரை
நித்தன் அறிவன் சுத்தன் அகண்டிதன்
நிருவிகற்பன் நிர்த்தத்துவன் நிரஞ்சனன்
சொல்வகை எவ்வையும் தொடராத் தூய்மணி
வரம்பு இல் வேதச் சிரம்தரு பரம் பொருள் 5
சத்தாய் எவையும் தானாய் அவித்தை
தொத்தாது உயர்ந்த தொல்சுடர் மூவா
இன்ன தன்மையன் ஏகன் அநேகன்
கன்னல் பெரும் சுவை தன்னில் பிறவாப்
பெற்றியின் இருந்து பொற்பணி இயல்பினில் 10

வான்வளி அனல்நீர் மண்மருந்து அன்ன
மானதாது ஆறுஐங் கோசத்
தொகுதி யாக்கைப் பகுதியது ஒருபுடை
சுத்தி வெள்ளி ஒத்தென மித்தையில்
தான்எனல் ஆகும் தன்மைத்து உலூதையில் 15

சில்நூல் தகையின் வேற்றுமை மரீஇயது
என்னப் பன்மையது எனில்இலை பழம்பூத்
தோல்நார் வயிரம் தருத்தரும் தொன்மையில்
வான்நாரம் திரை நுரைதரு வாய்மையில்
கூடும் அசித்தைச் சித்து உதவாது எனில் 20

நெல்பதர் பலாலத்தில் பரம் தரும் இது
தன்இயல்பு என்றும் விளையாட்டு என்றும்
முன்உள மறைகள் மொழிதலின ஒருநூல்
பன்மணி நிலையும் பசுப்பால் எனவும்
பலஅகல் நீரில் அலர்கதிர் எனவும் 25

கூவல்ஆழி குளம்சிறு குழிகால்
வாவி யாவையும் வருபுனல் எனவும்
அவ்அவற்று அடங்கி ஆடியுள் நிழல்எனத்
தோன்றி யாக்கைநல் காந்தத்து இரும்பும்
கனவில் தீங்கும் கங்குலில் கயிறும் 30

புனலில் தோன்றும் பேய்த்தேர்ச் செய்தியும்
அன்னதும் பின்னர் நன்னிறப் பளிங்கு எனப்
பதிளுற் கரணத்து ஒரு மூன்று அவத்தை
நாளும் நாளும் நயந்து உறும் இருபயன்
தன்னில் சாராத் தொன்மைத் தன்மை 35

தற்பண நிழல்கண் குற்றிபாய்ந்து அற்றே
இவ்வியல் பந்தப் பவ்வம் அது அகல
விண் முதல் தந்த கொண்மூப் படலத்து
இருள் அற உதித்த கால்தக விவேகம்
தன்னில் தோன்றிச் சாதகம் அனைத்தையும் 40

மன் அகப் பிரிப்பும் மடிஇழை வாங்கலும்
போல ஞாலம் பொய் அறக் கழீஇத்
தானே தானுய்த் தன்னில் தன்னைத்
தானே கண்டு தன்நலம் உற்று
வசையில் தத்துவ மசிபதத் தெளிவால் 45

அகமே பிரமம் ஆயினன் என அறிந்து
அசலன் ஆகி நற்சலசல மதியெனத்
கண்டிடும் உடலம் விண்டுஅகல் கடத்து
மங்குல் அதுஉடைடதர எங்குமாம் தகைத்தே
இவ்வகை உணர்ந்து செய்தொழில் அருத 50

மடவோர் தாமும் கடனு இயற்றும்
கன்ம காண்டத் தொன்மைப் புரிவால்
தோற்றிய வித்தை மேற்கடை அரணியில்
எழுந்துஎரி அவற்றை விழுங்கியது என்னத்
தன் ஒழிந்து உள்ள தானுய் ஒழியும் 55

அந்நிலை அன்றி அழிவறு முத்தி
ஏயாது என்றுதன் இயல்பை
மாயா வாதி வகுத்து உரைத்தனனே

முன் கூறப்பட்ட கொள்கையும் மறுப்பும் என்ற வரிசையில் முதலாவதாக மாயா வாதி தன் கருத்தை எடுத்துரைத்தான். அவித்தை என்று ஒன்றை ஏற்றுக் கொண்ட எமது கொள்கை இது: பிரமப் பொருள் நித்தமானது. அறிவே வடிவானது. தூய்மையானது பகுக்கப் படாதது. மாறுபாடற்றது. தத்துவங்களைக் கடந்தது. ஒளி வடிவானது. சொல்லால் உரைக்க முடியாத தூய மணி போன்றது. வரம்பற்ற வேதங்களின் முடிவிலே விளங்குகின்ற பரம்பொருள் என்றும் உள்ள பொருள். உலகத்தில் உள்ள எப்பொருளும் தானுக விளங்குவது. அவித்தை என்னும் அறியாமையால் பற்றப்படாது உயர்ந்த தொன்மையான ஒளி. என்றும் இளமையோடிருப்பது. இத்தகைய தன்மை உடைய ஒரே பரம் பொருளே பல்வேறு உயிர்களாகக் காட்சி அளிக்கிறது. அப்படிக் காட்சி யளிக்கும் காலத்துக் கரும்பின் இனிப்புச் சுவையைக் கரும்பே அறியாதது போலத் தனது இயல்பைத் தானே அறியாதிருக்கும். பொன் ஒன்றே .பல்வேறு வகைப்பட்ட அணிகலன்களாகி, வெவ்வேறு பெயரால் அழைக்கப்படுவது போல அப்பரம்பொருளே வானம், காற்று, தீ, நீர், மண், மருந்து உணவு இவற்றாலான தாதுக்கள் ஆறு ஆகவும், ஐந்து கோசங்கள் கொண்ட உடம்பாகவும், காட்சியளிக்கும். சிப்பி மயக்க அறிவினுல் வெள்ளி போன்று தோன்றுவதைப் போல பரம்பொருள் உலகப் பொருள்களாய்த் தோன்றும். அப்படியாயின் இரண்டும் வேறு வேருகப் புலப்படுவது எதனுல் எனக் கேட்பின் சிலந்திப் பூச்சியின் உடலின் தோன்றும் மெல்லிய இழை. அப்பூச்சியிலிருந்து வேறு பட்டுத் தோன்று வதைப் போன்றது இது. சிலந்திப் பூச்சியிலிருந்து தோன்றும் நூல் ஒரே தன்மையாக இருக்க உலகத்துப் பொருட்கள் பல வேறு வடிவாகக்

காட்சி தருவானேன் என வினவில் ஒருமரத்தில் இலை, பழம், பூ மரத்தின் தோடு, நார், மரத் தண்டின் நடுவிலிருக்கும் வைரம் இவற்றைப் போலவும், நீர் நிலையில் அலை, திரை, நீர்த் துளி, நீர்க் குமிழி ஆகியவை தோன்றி ஒடுங்குவதைப் போலவும் உலகத்துப் பொருள்களும் பல வகைப் பட்டுத் தோன்றி அழியும் என்று கூறப்படும்.

மேற் கூறப்பட்டவை எல்லாம் அறிவற்ற பொருள்களிலிருந்து தோன்றிய அறிவற்ற பொருள்கள். அறிவுடைப் பொருளான பரம் பொருளிலிருந்து அறிவற்ற பொருட்கள் எவ்வாறு தோன்றும் என்ற வினவிற்கு உண்ணத் தகுந்த நெல் பயனற்ற பதரையும், வைக்கோலையும் தருவது போல அறிவுடைய பிரமப் பொருள் அறிவற்ற உலகாய் வேறு பட்டு நிற்கும் என்று விடை தருவர்

மாறுதலற்ற பிரமம் இவ்வாறு மாறுபாடுகளைக் கொள்வானேன்? எனின் அது பிரமத்தின் இயல்பு என்றும் அது பிரமத்தின் விளையாட்டு என்றும் கூறுவர். இவ்வாறு கூறுவதற்கு ஆதாரம் என்ன என்று கேட்டால் தொன்மையான வேதங்கள் அவ்வாறு சொல்கின்றன என்பர். உலகத்துப் பொருள்கள் பல்வேறுவகையாக வரையறைக்கு உட்பட்டு இருப்பது போலப் பிரமப் பொருளும் வரையறைக்கு உட்படுமோ என்ற கேள்விக்கு, பல நிறம் கொண்ட மணிகள் ஒரே நூலில் கோக்கப்பட்டிருந்தால் அம்மணிகளின் வழியாகக் காணப்படும் நூலின் நிறம் வேறுபடினும் உண்மையில் நூலின் நிறம் வேறுபாடு அடைவதில்லை. பல வேறு நிறங்களுடைய பசுக்களில் சுரந்த பால் ஒரு தன்மையாகவே இருக்கிறது நீர் நிரம்பிய பல கலங்களிலும் எதிரொளிக்கும் ஞாயிற்றின் நிழல், பாத்திரத்திற்கு ஏற்ப வேறுபடுவதில்லை. ஒன்றாகவே இருக்கும். கடல், குளம், கிணறு, பள்ளங்கள், வாய்க்கால் இவை எல்லாம் வெவ்வேறு வகைப்பட்டு இருந்தாலும் அவற்றில் உள்ள தண்ணீர் ஒரே தன்மையாக இருக்கும் என்பர்.

பிரமப் பொருளே இவ்வாறு பல வகை உயிர்களிடத்தும் தோன்றுமாயின் அது கட்டுக்குட் பட்டதாகாதோ என்ற கேள்விக்கு கண்ணாடியில் தோன்றும் நிழல் அதில் தோய்வு அறத் தோன்றி நின்று விலகுவது போல, பிரமமும் உடலில் தோன்றுமேனும் அதிலே தோய்வு அற்று இருக்கும் என்பர். உடலிலே தோயாத நிலையில் உடல் எவ்வாறு செயல் படுகிறது எனக் கேட்பின் காந்தம் தோய்வு அற்று நிற்கின்ற நிலையில் இரும்பு செயல் படுவது போல என விடை தருவர்.

உடலில் நிற்கும் அறிவு இன்பத் துன்பவங்களுக்கு ஆட்படுவானேன் என்றால், கனவிலே கண்ட நிகழ்ச்சியினால் விளைந்த அச்சம் விழிப்பு வந்த வுடனே நீங்குவதைப் போலவும், இரவில் வளைந்து கிடக்கும் கயிற்றினைக் கண்டு பாம்பு என அஞ்சி விடிந்த பிறகு அது கயிறே எனத் தெளிவது போலவும், நீர் வேட்கை கொண்ட ஒருவன்

தூரத்தே தெரிகின்ற கானல் நீரைத் தண்ணீர் என நினைந்து அருகில் வந்து காணும் போது உண்மை தெளிவது போலவும், பிரமப் பொருள் உடம்போடு கூடி நின்று இன்பத் துன்பங்களை நுகர்ந்து வந்தாலும் நல்லாசிரியனிடத்து வேதாந்தப் பயிற்சி பெற்று உண்மையை உணரும் போது இத் தோற்றரவுகள் எல்லாம் மாறி உண்மையை அறிவான் என்பர்.

உடலோடு கூடிய உயிர் பதின்மூன்கு கரணங்களைக் கொண்டும், மூன்று அவத்தைகளுக்குட்பட்டும், நாள்தோறும் இன்பம் துன்பம் ஆகிய இரண்டையும் அனுபவித்தும் வருவது எவ்வாறு எனின், உண்மையில் இந்த மாற்றங்கள் எல்லாம் சீவான்மாவைத் தாக்குவதில்லை. ஒருவனது நிழல் கண்ணாடியில் தோன்றும் போது நிழலைக் கோல் கொண்டு தாக்கினால் அவனுக்கு எந்தத் துன்பமும் விளையாது. அது போலவே பரமான்மாவுக்கும் மாற்றம் இல்லை என்பர்.

இத்தகைய இயல்புடைய மாயா வாதைகள் எவ்வாறு நீங்கும் எனில், வான் ஆகிய முதற் காரணத்தில் தோன்றிய மேகக் கூட்டம் அதிலேயே தோன்றிய காற்று வீசும் போது விலகி ஞாயிற்றின் ஒளி விளங்குவது போல அதிலிருந்தே விவேகம் வெளிப்பட்டுத் தன் இயல்பான ஞானம் விளங்கித் தோன்றும். புல் வேய்ந்த குடிசை பிரிக்கப் பட்டுக் கழிகளும் அகற்றப் பட்டால் குடிசை என்று ஒரு பொருள் இல்லாது போவது போலவும் ஊடும் பாவுமாய்ச் சேர்ந்திருக்கிற நூல் இழைகள் ஒன்றொன்றாக நீக்கப் பட்டால் துணி என்ற பொருள் இல்லாது போவது போலவும் ஒவ்வொரு தத்துவமாக இது நானன்று இது நானன்று என்று கழிக்குமிடத்துச் சீவான்மா என ஒரு பொருளே இல்லாது போகும்

தாமே பிரமம் என்பதை மீண்டும் உணர்ந்து, தானாகித் தன்னிலே தன்னைக் கண்டு தன் இன்பத்தைத் தானே நுகர்ந்து வரும்.

இந்த நிலை எய்தும் போது வேதத்துள் கூறப்பட்ட மகா வாக்கியம் எனப்படும் தத் துவம் அசி என்ற சொற்றொடரின் பொருள் தெளிவாகும். அந்தத் தெளிவால் அகம் பிரமம் என்ற அறிவு உண்டாகும். அப்போது நிலவு அசைவற்று இருந்தும் நீரில் தோன்றும் நிலவின் நிழல் அசைவது போலவே அதுவரை தான் நுகர்ந்த துன்பங்கள் உடலைப் பற்றினவே தவிர, சீவான்மாவைப் பற்றியன அல்ல என்று உணரும். இதுவே சீவன் முத்தி எனப்படும்.

குடம் உடைந்த போது அக்குடத்தினுள் இருந்த ஆகாயம் வெளில் உள்ள பேராகாயத்தோடு மாறுபாடில்லாமல் கலந்தது போல, உடலை விட்டு நீங்கிய சீவான்மா பரமான்மாவோடு இரண்டறக் கலக்கும்.

இவ் உண்மைகளை உணர்ந்து வேதத்தின் முற்பகுதியில் கூறப் பட்ட கரும காண்டத்தில் விதிக்கப்பட்ட கடமைகள் அனைத்தையும் அறிவற்றவர்களும் விடாது செய்துவரின் அவர்களுக்கு அறிவு உதிக்கும். அந்த அறிவு வினைப் பயன்கள் முழுவதையும் அழித்து விடும். எவ்வாறு எனில் அரணிக் கட்டையில் தீக்கடை கோலைச் செருகி முறுக வாங்கிக் கடையும் போது தீப் பொறிகள் பிறக்கும். அப் பொறிகள் உடனே அழிக்கப்படாவிடில் அரணிக் கட்டையும் கடைகோலும் ஒருங்கே எரிந்து சாம்பலாகிப் போவது போலக் கருமங்களும் அழிந்து போகும். இதுவே பர முத்தி என்பதல்லது, உயிர் நிலை பேறு உடையதாக இருக்கும் வீடு பேறு என்பது பொருந்தாது என்று இவ்வாறு தன்னுடைய மதத்தின் கொள்கைகளை மாயாவாதி விரித்துக் கூறினன். எனவே இது மாயா வாதி சங்கற்பம் ஆயிற்று.

அகண்டிதம் — கண்டிக்கப்படாதது, வரையறைக்கு உட் படாதது. தொத்தாது — பற்றுது. தாது - தாதுக்கள் ஆறு, அவை தோல், எலும்பு, நரம்பு, மச்சை, குருதி, சுக்கிலம் கோசம் உறை. கோசங்கள் ஐந்து அன்ன மயம், பிராண மயம், மனோ மயம், விஞ்ஞான மயம் ஆனந்த மயம் என்பன. சுத்தி — சிப்பி, உலூதை — சிலந்திப் பூச்சி, நாரம் — தண்ணீர். பலாலம் — வைக்கோல். கூவல் — கிணறு. ஆடி — கண்ணாடி, பதினாற் கரணம் — மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் அறிவுக் கருவிகள் ஐந்தும், வாக்கு, கால், கை எருவாய், கரு வாய் என்னும் தொழிற் கருவிகள் ஐந்தும், மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்னும் அகக்கருவிகள் நான்கும் ஆகிய பதினான்கு மூன்று அவத்தை — இங்கு நனவு கனவு உறக்கம் என்ற மூன்று நிலைகளைக் குறித்தது தற்பணம் — கண்ணாடி. குற்றி — கட்டை, சாதகம் — மறைக்கும் தத்துவங்கள். தத் துவம் அசிபதம் — மகா வாக்கியங்களுள் ஒன்று. தத் + துவம் + அசி அது நீ ஆகிறாய் என்று பொருள்படும். அகம் பிரமாஸ்மி என்ற மகாவாக்கியத்தை உணர்த்துவது அகம் + பிரமம் + அஸ்மி நான் பிரமம் ஆகின்றேன் என்று பொருள் தரும். அசலன் — அசைவற்றவன். நற்சலம் — நல்ல நீர். சலமதி — நீருள் தோன்றும் நிலவின் நிழல். அகல் கடத்து — அகன்ற குடத்தில், மங்குல் — வான், வெளி. அரணி — தீக்கடை கோல், ஞெலி கோல்.

## மாயாவாதி சங்கற்ப நிராகரணம்

4 உரைதரு பிரமம் ஒன்று எனும் உரைக்கண்
வருபிரமாணம் மறை எனில் அருமறை
ஒன்றுஎன்றது அன்றி இருபொருள் உரைத்தல்
நன்றுஅன்று அபேதம் நாடிய பொருளேல்
பேதமும் அபேதமும் ஓத வேண்டா 5

பேதம் எனினும் அபேதம் எனினும்
பேதா பேதம் எனினும் அமையும் நின்
ஐயம்இல் உரையில் பையவந்து உளதாம்
திகழ்பிரமாண இகழ்வும் உண்டு அன்றிப்
பெத்தம் பேதம் முத்தி அபேதமேல் 10

அனவத் திதமாம் அவைஇரு திறனும்
இனிஅப் பழமொழி இரண்டு அல ஒன்றேல்
அன்றியும் பெத்தம் பேதத்து அறைதலும்
ஒன்றிய முத்தி அபேதத்து உரைத்தலும்
பழுதாம் இத்திறன் பதையாது ஆய்கமற்று 15

எழுதா மறைஎனும் இப்பிர மாணம்
ஆர்உரை தானே ஆயினதேல் உனது
ஏகம் அநேகம் உறும் இயம்பாமல்
சத்தரூபம் தகாது எனில் வானத்து
ஒத்துஒலி உழறும் எனில் வறிது உதியாது 20

அன்றியும் பதமும் பாழியும் அனைத்தும்
இன்றிஓர் ஒலியாய் எழுந்திடும் அதனுக்கு
அறிவுஇலது உருவுஇலது அறியாது அறையாது
அன்றியும் அவ்வகை அகண்டிதம் அதுஇது
என்றுஅது குறிப்பது எவ்வகை யாவும் 25

ஒன்றுஎனும் உரையும் ஒழிந்தன அன்றே
அருமறை பிரம உரைஎனில் அதற்குத்
தந்தம் தாலுமுதல் நவில் பொறி இலது
என்னில்ஓர் உடற்கண் மன்னிய அலகை
அறைந்தற்று என்பது ஆர்சொல் அதுஅமலத் 30

திறம்பெற் றின்றே செய்தோர் பெயரால்
சுயம்பு என்றுஉலகு இயம்பும் என்று அறிஇனித்
தன்கீழ்த் தலைவரைத் தான்தொழுது உரைக்கும்
சொற்கேள் புரவலன் ஏவல் அமைச்சரை
அடியேம் மற்றுஎம் குடிமுழுது ஆள்மின் என்று 35

ஏத்தி இறைஞ்சிக் காப்பர்கள் என்று ஆங்கு
ஈசன் நாம்செயப் பேசினன் அன்றி
இனையவை பிறரில் கனவிலும் இல்லை
தன்னைத் துதிக்கும் சொல்நலம் தானும்அத்
துறை அறி வாணர்க்கு அறைவது ஒன்று அன்றியும் 40

தனக்குத் தானே தன்நலம் பகராது
அசத்துக்கு உரையாது ஆர்க்குஉரை உயிர்க்கு எனில்
உரைபிர மாணம் இறைபிர மேயம்
நீ பிரமாதா நின் பிரமிதி என
நால்வகை உளதுஉனது ஏகம் நன்று அன்றே 45

நற்பிர மாணம் நிற்பது ஒன்று அன்றால்
அப்பிர மேயமும் அதன் இயல்பு அன்றே
கன்னற் சுவையில் அன்னியம் இலதால்
இனிமை தோன்றாத் தன்மைத்து என்றனை
அறிவிற்கு உவமை அசத்தாம் கட்டி 50

பிறிவித்து ஒட்டினும் பேறுஅது உறாதே
தற்பர விரிவு பொற்பணி தகும் எனில்
செய்வோர் இன்றிச் செய்வினை இன்மையில்
பொன்பணி ஆகை தன்பணி அன்றே
செய்வோர் போலாச் செயப்படு பொருள்முதல் 55

செய்வோர் ஏயாச் செய்யவும் படுமே
சுத்தி வெள்ளியில் தோன்றிற்று ஆயினும்
சத்துஉலகு ஏதும் தாரா தரும்எனில்
உலகம் மித்தை என்று ஓராது உரைத்தனை
நிலவும் நின்மரபு நினைந்திலை யாம்கொல் 60

விவகா ரத்தில் வேண்டுதும் உலகம்
பரமார்த் தத்தில் பகராம் என்னில்
பரத்து உளதேல் இவையும் பரமார்த்தம்
பரத்துஇலதேல் ஒழி முன்பகர் மாற்றம்
அதன்முதல் இதுஎன உதவுக அன்றியும் 65

விவரிக்கும் கால் திகழ் பரமார்த்த
நிலைஅது தெரியில் இதுநீ நீயேல்
தெரியாது ஆயின் அஃதும் தெரியாது
உரையார் அளவையும் ஒழிந்தனை அன்றே
அளவை காண்டல் கருதல் உரைஎன 70

உளது அவை மூன்றின் மொழிவழி நுழையின்
நின்பிரமேயம் என்பது என்ஆம்கொல்
பொற்பிதிர் பிதிர்ந்தும் பொன்னே யாம்நின்
தற்பரம் அசித்தைத் தருமாறு என்எனச்
சிலம்பி நூல்தரு நலம்போல் தோன்றும் 75

என்றனை அதுவும் தன்தொழில் அன்றியும்
ஒன்று அதன் இயல்பு உலகு ஓர்இயல் அன்றுஎனப்
பலம்இலை பழம்பூப் பாதவம் தரும்நீர்
திரைநுரை திவலை சிலதரும் இவைபோல்
தானே பலவாம் எனநீ சாற்றினை 80

சத்துஅசத் தாகவும் சத்தினில் அசத்தின்
கொத்துஉள தாகவும் கூறினர் இலரால்
வித்துஇலை கனிநனி விழுதுஆல் தருநெறி
சத்துஅலது ஒன்று தான்தர வேண்டும்
நெல்பதர் பலாலத்திற்கு உபாதானம் என் 85

காரணம் இன்றிக் காரியம் பிறவா
பாரிடை ஒருபடம் பண்ணவும் படுமே
அந்தம்இல் பிரமம் அவித்தை காரணம்எனத்
தந்தனை அவித்தை தான் எய்துறுதல்
தன்இயல்பு என்னில் வன்னிதன் வெம்மையில் 90

சத்தினது இயல்பும் சத்தே அசத்துஎனில்
வைத்ததன் இயல்பு எனும் வழக்குஒழி அன்றியும்
இருள்பொதி விளக்குஎன வரும் இருவினக்கில்
கருமை பயந்த பெருகுஒளி தகும்எனில்
தன்இயல்பு அன்று அதன் உபாதி வசத்தால் 95

மன்னியது அன்றி மைதான் தனில் மாயாது
ஒன்று ஆன சுத்தன் அன்றும் அன்றே
ஆங்குஒரு காலத்து ஓங்கியது ஆயின்
அந்தம்இல் அவித்தை வந்து அணைவதற்கு ஓர்
ஏது வேண்டும் புயல்இயல்பு எனில்வீடு 100

ஓத வேண்டா ஒழிந்தோரினும் உறும்
களங்கம் அது அறஉறும் அவித்தைதற் கவித்தல்
விளங்கிய பிரம விளையாட்டு ஆயின்
அவித்தை என்பது ஒன்று அன்னியம் தன்னில்
உதிக்கும் என்றமுன் உரையும் மறந்தனை 105

நுண்நூற் குடம்பை நுந்துழி போல்உட்
படுநெறி அதனால் விடுநெறி இல்தால்
தலைமையும் அறிவும் இலது என் அவித்தையை
விடுத்து எடுத்து ஆனரும் வேற்றோர் அன்றே
ஒளிகொள் தாமிரம் குளிகைபெற்று ஆங்குஅதன் 110

அவித்தையை வித்தை தவிர்க்கும் என்றுஉரைக்கில்
நித்தன் அறிவன் சுத்தன் என்று உரைத்த
வித்தகம்என் நீ வித்தையும் வேறு ஒன்று
எம்மனோரில் ஒருவன் நின் இறை
அம்ம சைவந்தவன் நீ அன்றே 115

பன்மணி பசுநற் பாத்திரம் எனவும்
நன்னூல் பால்நீர் நற்கதிர் எனவும்
உடலையும் உணர்வையும் உவமித் தனையேல்
தடமணி சரடொடு தாம் கூடலவே
உணர்வு உணர்வு ஒழியின உலகு உணர்வுறின் நின் 120

பாலும் பசுவுஞ் சாலும் சாலக்
கலம்பல அன்றிச் சலம்பல இலதுஎனக்
காணுநர் இன்றி வீண்நீ விளம்பினை
ஆடியுள் நிழல்போல் கூடுதல் கூறில்
தன்நிழல் கொண்டு தற்பணம் சலிக்கில் 125

மன்நிழல் கொண்டு உடல் வந்து அகன்றிடுமே
மன்அயக் காந்தம் என உடல் பிரம
சந்நிதி அளவில் சலித்திடும் ஆயின்
அகண்டிதம் சன்னிதி அல்துஇலது எவையும்
நடந்திடவேண்டும் கிடந்திடப் பெருவே 130

காந்தத்து இரும்பு காட்டுநர்ப் பெறில்அயம்
சேர்ந்திடும் நீக்கும்செயல் அதற்கு இலதே
கனத்துயர் கயிற்று அரவு எஞ்சில தொடுத்தனை
கனவின் பயனும் நனவின் பயனும்
வினையின் பயன் அவை பொய்என் வேண்டா 135

உடல் மாருட்டக் கடன் அது கருதுக்
உற்ற புற்றும் மற்றுஅதில் கயிறும்
உடலும் கூடமுச் சடம்என அறிதி
அறிவு கயிறு என்று அறியாது அன்றே
அச்சம் அது அடைதல் கொச்சமை உடைத்தே 140

இன்னும் அக்கனவில் இருள் உறு கயிற்றில்
பின்னும் நின் பிரமம் பிரமித் திடுமே
துன்னிய வினையில் செம்மலர்ப் பளிங்கு என
தானும் தகைமை ஆகுல் மலர்என
ஒருபயன் அன்றிப் பலபயன் மரீஇயது 145

இருவினை தருபயன் என நனி வேண்டில்
ஆண்ட வித்தையும் அவித்தை கொடு ஆக்கையும்
ஈண்டு இருவினையும் இயம்பினை பரத்தைக்
கள்வரைப் பிணிக்கும் காவலர் என முயல்
தொல்வினைத் தொடக்கில் தோன்றுஉடற் சிறையிட்டு 150

இருவினை ஊட்டும் அருள்உறும் எம்மான்
அருவினை உடல் கண் அவத்தைகள் உரைத்தனை
ஆர்உறுபவர் பரம் அகண்டிதம் அடங்காது
ஓர்விலது உடல்சடம் உறுநெறி யாது எனில்
மன்னிய கரண மாருட்டத்தின் 155

பன்னினம் என்னில் இவையோ பரமோ
முதலியது ஆயின் இவை பிறழ்வு எய்தாது
இவை எனில் உனது மொழி பழுது உளதே
உடல்படு பிரமம் உறுமேல் சாளரத்து
இடத்தகும் உறுவிரல் நுதி அளி எறி துயர் 160

அங்குலிதானே அருந்திடில் உடல்கண்
தங்கிய அறிவு தனித்துஉறும் அன்றே
தற்பண நிழல்கண் குற்றிபாய்ந்து அற்றால்
நற்கணில் துயரம் நணுகாத் தகைத்து எனில்
நின்மொழி விரோதமும் காட்சி விரோதத் 165

தன்மையும் உறும்அவை தவறுஇல ஆகா
யாம்உடைப் பதிவகை யாவரும் பலகலை
சொல்லுதல் எளிது அரிதுஅத் தொழில் புரிவுஎனப்
புல்லிய பழமொழி புதுக்கினை அன்றே
அகண்டிதம் எனநீ பகர்ந்தமை தனக்குப் 170

பந்தம் இது எனத் தந்தமை கருதில்
வானில் நடக்கும் காலினைப் பிடித்துப்
பருவிலங்கு இட்ட ஒருவன் நீ அன்றே
பந்தம் அதுஅகல முந்து விவேகம்
வான்வளி எனத் தனில் தானே தோன்றின் 175

முன்புஉளதாயின் மயங்காது இலது எனில்
பின்புஉளது ஆகாது இலது உளது எனில்வெளி
மலரது தரும்அனல் மரக்கண் இன்று ஆகித்
தருவது தகும்எனில் தானே தோன்று
விறகின் உதித்த கனல்தகும் ஆயின் 180

அவித்தையின் உதித்த வித்தை அம்மரத்து
உதித்த விவேகம் வித்தை என்று உரைத்த
வெந்தழல் அனைய விவேகம் அது உதித்த
இந்தனம் அனைய இறையில் அன்றுஅற்றே
இற்பட்ப் பிரிப்பின் மெய்ப்படும் எவற்றையும் 185

இதுஅன்று இதுஅன்று எனக்கழி காலை
அதுவே தானே ஆயினது என்றனை
வித்தை முன்னர் அவித்தையும் அவித்தைமுன்
வித்தையும் நில்லா வியன்ஒளி இருள்என
இருள்அல ஒளிக்கும் ஒளியல இருட்கும் 190

ஒருகாலத்தும் ஒருபயன் இலதால்
இரண்டையும் நுகரும் முரண்தரு விழிஎன
வித்தையும் அவித்தையும் உய்த்தது ஒன்று உளதே
தானே தானும் ஆனால் பயன்என்
தன்னில் தன்னைத் தானே காணில் 195

கண்ணில் கண்ணைக் காணவும் படுமே
தன்நலம் அதனைத் தானே நுகரும்
என்னில் முன்நலம் எய்தாதது இருந்ததுஎன்
கட்டிபோல் எனக் கதறினை இன்பம்வந்து
ஒட்டிடும் வித்தை உடைய ஆயிடினே 200

தத்துவ மசிஎன வைத்த முப்பதத்திற்கு
ஒன்றே பொருள் என்று அன்றே பகர்வது
நீபுலி யாயினை என்று ஆங்கு உரைரில்
ஆயினை என்றதும் ஆகு உவமைத்தால்
நோயா யினம்எனல் ஆயாய் என்றால் 205

அகமே பிரமம் ஆயினது என்றால்
சகமே அறியத் தான்வேறு அன்றே
உண்மையில் சலம்இலம் உடற்சலம் சலம் உறும்
வெண்மதி போல விளங்கினம் என்றனை
அசலன் ஆகிச் சஞ்சல சலத்துச் 210

சலனம் மேவினம் எனமதி காண
வேண்டும் அது அன்றிக் காண்பவர் பிறரேல்
ஈண்டுஉனது ஏகம் என் செய்தது இயம்புக
உடல்விடக் கடத்துள் படுவெளிபோல் எனில்
விட்டுஎன் பெறஉடல் பட்டுஎன் படமற்று 215

இகல்அற ஒருவன் இவ்வகை தெளிய
அகிலமும் முத்தி அடைந்திட வேண்டும்
அறிந்தோர் முத்தி அடைந்தோர் ஆயின்
பிறிந்தோர் உயிர்பல பேதத்து அன்றே
கன்ம காண்டம் காரணம் ஆக 220

மன்னும் விவேகம் என்னில் அவித்தைக்கு
ஏது காரணம் ஓதினை இல்லை
இதற்குக் காரணம் விதித்தல் வேண்டின்றே
அரணியில் உதித்த கனல்அவை கவர்வுஎன
விரதத்து உதித்த விவேகம் அது அழித்தல் 225

வருந்தி யாயினும் திருந்திய வேத
நீதி எல்லாம் நீத்துப் போதம் ஒன்று
அறியார் தாமும் இகழ் அவ்வழி நடத்தல்
பொறியோ போத நெறியோ இதுபவம்
நீங்கிடும் நெறிதரு பாங்கினைப் பழித்தல் 230

நன்றி கொன்றல் அன்றே அன்றியும்
ஞால நீதியும் நான்மறை நீதியும்
பாலர் உன்மத்தர் பசாசரில் என்வும்
உறங்கி ஞேன்கை வெறும் பாக்கு என்வும்
தானே தவிராது ஆனால் புரியாது 235

ஒழிந்திடில் நிரயத்து அழுந்துதல் திடமே
உய்த்தோன் அன்றி முத்தி உரைத்தல்
பித்தோ பிரமம் செத்தோ பெறுவது
உடலையும் நீயே சடம் எனச் சாற்றினை
வையினும் வாழ்த்தினும் கொய்யினும் கொளுத்தினும் 240

வணங்கினும் உதைப்பினும் பிணங்குதல் செய்யாப்
பிரமத் தன்மை பெறுவது ஏக் காலம்
இருக்கும் நாள்சில எண்ணில் நூல் கதறித்
தருக்கம் பேசித் தலைப்பறி உற்றுக்
கண்டோர் ஈந்த பிண்டம் உண்டு அலறிப் 245

பல்நோய் யாக்கை தன்நோய் உற்றுஉடல்
விடவரும் என்று நடுநடு நடுங்கி
விட்டோர் தெய்வத் தொட்டின்று அன்றியும்
யானே எவரும் ஆனேன் என்றலின்
அவ்வவர் சீறி அவ்வவர் வாழ்நாள் 250

**செவ்விதில் நிரயம் சேர்த்துவர் அதனால்**
**மாயா வாதப் பேயா உனக்குத்**
**தேவரில் ஒருவர் உண்டாக**
**மேவரும் நரகம் விடுதலோ அரிதே.**

பிரம்மம் ஒன்றே உள்ள பொருள் என்று நீ கூறினாய். அவ்வாறு கூறுவதற்கு ஆதாரம் எது? நான்மறைகள் தாம் அதற்குப் பிரமாணம் என்றால், அவை பொருள் ஒன்றே என்று சொல்லாமல் பரமான்மா, சீவான்மா என்று சொல்லுவதால் நீ கொண்ட கொள்கைக்கு மாறு படும். அவ்வாறு அன்று, வேதங்கள் இரண்டு பொருள்கள் உண்டு எனக் கூறினாலும் அவை இரண்டற்ற தன்மை உடையன என்பதனால் பேதம் அபேதம் பேதாபேதம் என்பதெல்லாம் சொல் அளவிலே அன்றி பிரமப் பொருள் ஒன்றே உளது என்பது தான் வேதக் கருத்து என்று உரைத்தால் நீ அடிப்படை நூலாகக் கொண்ட வேதம் உன்னாலேயே இகழப்பட்டதாகும்.

அப்படிக் கொள்ளக் கூடாது, உலகியல் நிலையில் இரண்டாக இருக்கும் என்று தான் வேதங்கள் கூறுகின்றன என்று நீ மறுத்துரைத் தால் உலகியலில் இரண்டு முத்தியில் ஒன்று. மீண்டும் உலகியலில் இரண்டு முத்தி நிலையில் ஒன்று என்று வரம்பின்றி ஓடும். எனவே இதுவும் பொருந்தாத கொள்கையே. அதனால் வேத நூல் முரண்பாடு உடையது என்பதும் பெறப்படும்.

இனி அப் பழைய வேதம் இரண்டைச் சுட்டவில்லை ஒன்றையே சுட்டிற்று என்று முத்தி நிலையில் அபேதம் என்று நீ உரைப்பினும் அதுவும் பழுதாகும். இவ்வாறு நான் கூறியவற்றைப் பதைப்பின்றி ஆராய்ந்து பார்ப்பாயாக.

வேதம் எழுதா மறை என்று கூறினாய். இந்தக் கொள்கைக்கு எது அடிப்படை? வேதம் தானே தோன்றிற்று என்றால் நீ கொண்ட பிரமப் பொருள் ஒன்றே உள் பொருள் என்பது மறுக்கப்பட்டு, பிரமப் பொருள் ஒன்று வேதம் ஒன்று என்று ஆகி உன் கொள்கையே மறுக்கப் படும். ஒருவரால் சொல்லப்படாமல் சொல் தோன்றுவதில்லை என்பவர்களை, நீ விண்ணிலே ஒருவரால் ஒலிக்கப்படாமல் தானே ஒலி தோன்றுவதில்லையோ என்று கூறி மறுக்கிறாய். வானத்தில் கூட காற்றின்றி ஒலி எழாது. அதுவும் அல்லாமல் அந்த ஒலி சொல்லாகவும் சொற்றொடராகவும் எவ்வாறு அமையும்? ஏனெனில் ஒலிக்கு அறிவு மில்லை. எனவே அறிவிப்பதுமில்லை. மேலும் வரையறைக்கு உட்படாத பிரமப் பொருளை வேதங்கள் அது இது என்று சுட்டிக் கூறுவது எவ்வாறு பொருந்தும்? அப்படிக் கூறுகின்ற மறை உன் ஒரு பொருட் கொள்கையை மறுப்பதாயிற்று.

அரிய வேதங்கள் பிரமத்தாலே அருளிச் செய்யப்பட்டன என்று கூற நீ முற்பட்டால், நீ கொள்ளும் பிரமம் எங்கும் நிறைந்தது. வடிவ மற்றது, எனவே அதற்கு நாக்கு பல் முதலிய உறுப்புக்கள் இல்லை. அது எவ்வாறு சொற்களை உச்சரிக்க முடியும்? வடிவமற்ற பேய் ஒரு மனித உடலைப் பற்றிக் கொண்டு வருங்காலத்தில் நடக்க இருப்பன பற்றிக் கூறுவதைக் கண்டதில்லையா? அது போலத்தான் இதுவும் என்று நீ கூறினுல் அப்படிப் பற்றப்பட்டவர்கள் யார் என்று நீ இனம் காட்ட வேண்டாவா? அப்படி இனம் காட்டும் போதும் அது ஓர் உயிரின் வாயிற் பிறந்த சொல், எனவே பசு வாக்கியம் ஆவதன்றி இறைவன் சொல்லாகாது.

வேதங்கள் சுயம்பு என்று கூறப்படுவதற்கான காரணத்தை நான் கூறுகிறேன். அருவாய் நின்ற இறைவன் தன் அளவிறந்த கருணையினுல் உருவாகி வந்து வேதங்களை அருளினன் என்பது தான் அதற்குப் பொருள். ஆசிரியரின் பெயரால் நூலும் வழங்கப்படுவது போல சுயம்புவால் அருளிச் செய்யப்பட்ட வேதத்தையும் உலகம் சுயம்பு என்று அழைத்தது.

இக் கூற்றை மறுத்து, வேதங்களில் பல் வேறு தெய்வங்களின் வணக்கம் கூறப்பட்டுள்ளதே அப்படியானுல் பரம்பொருள் தனக்குக் கீழ்ப்பட்ட தெய்வங்களை வணங்குமா என்று நீ கேட்டால், குடிகள் தமக்குற்ற சிறு சிறு குறைகளை அரசனைக் கண்டே முறையிடுவதில்லை. அமைச்சரையும் பிற அதிகாரிகளையும் கண்டு முறையிடுவர். அவ்வாறே சிறுமை உடைய உயிர்கள் தம்மினும் சற்றே மேம்பட்ட தெய்வங்களை வழிபடுவதே வேதத்தில் கூறப்பட்டது இதுவன்றி ஒப்பற்ற பரம் பொருள் சிறு தெய்வங்களை வணங்குவது ஒரு பொழுதும் இல்லை.

பரம் பொருளைத் துதிக்கும் வேதப் பகுதிகள் பக்குவம் உடைய உயிர்களுக்காக அருளப்பட்டன. இறைவன் தனது நலத்தைத் தானே பாராட்ட மாட்டான். சடப்பொருளுக்குத் தன் பெருமையை உணர்த்த மாட்டான். எனவே அவன் உரைத்த வேதம் உயிர்களின் நன்மைக்கே என அறிக.

அவன் உரைத்த நூல் பிரமாணம். இறைவன் பிரமேயம். உயிராகிய நீ பிரமாதா. உன் அறிவு பிரமிதி. இவ்வாறு நான்கு பொருள் கூறப்பட்டதால் உன்னுடைய ஒரு பொருட் கொள்கை மறுக்கப்பட்டது. வேதம் ஒன்று தான் உள்ளது என்பதும் பொருத்த மற்றது. வேதத்தால் உணர்த்தப்படும் பிரமப் பொருள் ஒன்று தான் உள் பொருள் என்பதும் பொருத்தமற்றது.

கரும்பின் சுவையைக் கரும்பே உணராதது போல பிரமப் பொருளும் தன்னுடைய இன்பத்தைத் தான் அறிவதில்லை என்று

கூறினாய். அக் கரும்பினில் விளைந்த வெல்லக் கட்டியை கரும்போடு கூட்டி வைத்தாலும் கரும்பிலிருந்து பிரித்து வைத்தாலும் கரும்புக்குப் பேறும் இல்லை. இழப்பும் இல்லை. அறிவற்ற பொருள்களை அறிவே வடிவமான பரம் பொருளுக்கு உவமையாகச் சொல்லுவது பொருத்த மற்றது.

உயர்ந்த பிரமப் பொருள் பல்வேறுபட்ட உலகப் பொருள்களாக ஆனதற்கு உவமையாகப் பொன்னே பல அணிகலன்களாக வடிவெடுத் தமையைக் கூறினாய். அப்பொன்னைப் பல வகை அணிகலன்களாகச் செய்வதற்கு வல்லவன் ஒருவன் வேண்டும். ஏனெனில் உலகில் செய்பவன் ஒருவன் இல்லாமல் செய் தொழில் ஏதுமில்லை. எனவே உன் கூற்றுப்படிப் பிரமப் பொருள் பல் வேறு வகைப்பட்ட உலகத்துப் பொருட்களாக வடிவெடுத்ததற்கும் இன்னொருவன் செயலாண்மை வேண்டும் என்று ஆகும். அவ்வாறு இல்லை. எல்லாவற்றையும் செய்தது பிரமமே என்றால் . செய்யப்பட்ட பொருள் செய்தவனைப் போல இருப்பதில்லை ஆதலால் பிரமம் அல்லாத ஒரு பொருள் உலகத்தின் தோற்றத்திற்குக் காரணமாதல் வேண்டும்.

சிப்பி வெள்ளி போலத் தோன்றுவது போல உலகமும் தோன்று கிறது என்று கொண்டால், அறிவுடைய பிரமம் அறிவற்ற உலகத்திற்குக் காரணம் ஆகாது. அவ்வாறு கொண்டால் உலகு பொய்த் தோற்றம் என்பதும் பிரமமே உலகாயிற்று என்பதும் மாறு கோளாய் முடியும்.

பிரமமே உலகாயிற்று என்றால் பிரமத்தைப் போலவே உலகும் உள்பொருள் ஆதல் வேண்டும். பிரமத்தைப் போலவே உலகும் அறிவுடைப் பொருளும் ஆதல் வேண்டும். இல்லையெனில் நீ கொண்ட கொள்கை தவறானது ஆகும்.

விவகார நிலையில் உலகம் உள்ளது என்று கொள்ளுவோம். பரமார்த்திக நிலையில் உலகம் இல்லை என்று கொள்ளுவோம் எனில் பிரமத்திலிருந்து தோன்றிய உலகும் பரமார்த்திகத்திலும் உள்ளதே என்று கொள்ள வேண்டும். பரமார்த்திகத்தில் இல்லை என்றால் நீ முன் கூறிய கொள்கையை மாற்றிக் கொள்க. அல்லாமலும் உலகிற்கு முதற் காரணம் எது என்ற கேள்விக்கும் விடை தருக. விவகார நிலையில் உனக்கு அறியாமை உளது. அந்த அறியாமை எதிலிருந்து வந்தது என்பதையும் நீ கூறவேண்டும். அறியாமையும் பிரமத்திலிருந்தே வந்தது என்று கூறின் அறிவுடைய பொருள் அறியாமையை எவ்வாறு தரும்? இவ்வாறு கூறினால் பிரமப் பொருள் அறிவே வடிவானது என்னும் கருத்துக்கு முரண்பாடு நேரிடும்.

உன்னுடைய அறிவு, காட்சி கருதல் உரை என்னும் மூன்று அளவைகளால் உண்டாகிறது. பிரமப் பொருளுக்கும் இம் மூன்று அளவைகளும் தேவை எனில் பிரமம் வாக்குக்தும் மனத்துக்கும் எட்டாத பொருள் என்ற கொள்கை முறியடிக்கப்படும்.

பொன் பல அணிகலன்களாகச் செய்யப் படுவது போலப் பிரமமும் உலகத்துப் பொருள்களாக மாறுகிறது என்றாய், பொன்னை அணிகலன் ஆக்கும் போது அதன் மாற்றுக் குறைவதில்லை. ஆனால் பிரமம் அறிவுடைப் பொருளாய் இருக்க, உலகத்துப் பொருள்கள் அறிவற்றதாக இருப்பானேன்? இந்த கேள்விக்கு விடையளிக்கும் போது அறிவுள்ள சிலந்திப் பூச்சியில் இருந்து அறிவற்ற நூல் தோன்றுவது போல என்று விடையளித்தாய். சிலந்தி நூல் ஒரே தன்மையாய் இருக்கும். உலகத்துப் பொருட்கள் பலவகைப் பட்டனவாய் உள்ளன. அன்றியும் சிலந்தி நூலைத் தோற்றுவிக்குமேயன்றி, அதனை ஒடுக்காது.

இக்கேள்விகளுக்கு விடையளிக்க நீ ஒரு மரத்தில் தோன்றிய கனி இலை பூ முதலியன போலவும் நீரில் தோன்றிய அலை, நுரை, திவலை போலவும் தானே பல வாயிற்று என்றாய். அறிவற்ற மரத்திலிருந்து இலை, பூ. முதலிய அறிவற்ற பொருள்களும் அறிவற்ற நீரிலிருந்து அலை, நுரை முதலிய அறிவற்ற பொருள்களும் தோன்றுதல் பொருந்தும். ஆனால் அறிவுடைய பிரமத்திலிருந்து அறிவற்ற சடப் பொருள்கள் தோன்றுவதற்கு இவை எப்படி எடுத்துக்காட்டாகும்? அறிவு அறியாமை ஆகும் என்றும் அறிவிலிருந்து அறியாமை கொத்தாகத் தோன்றும் என்றும் முரண்பட்ட கருத்துக்களை உன்னைத் தவிர வேறு எவரும் கூறார்.

நுட்பமாகிய விதையிலிருந்து மரம், கிளை, இலை முதலியன தோன்றுகின்றன. காரணம் நுட்பமாயிருக்க அதிலிருந்து விரிந்த காரியங்கள் பருமையாய் இருக்கும் என்பதே பொருத்தமானது. அதுவுமல்லாமல் காரணத்திற்கும் காரியத்திற்கும் ஒப்புமை வேண்டும். ஒன்றிலிருந்து ஒன்று மாறுபடும் என்பது பொருந்தாது. அறிவற்ற வித்து அறிவற்ற மரம், கிளை, இலை ஆகியனவாக விரிந்தது. நீ கூறிய நெல், பதர், வைக்கோல் ஆகியவற்றிற்கு முதற் காரணம் வித்து அல்லவா? காரணம் இன்றிக் காரியம் பிறவாது, காரணத்தை ஒத்தே காரியமும் இருக்கும். அவ்வாறு இல்லை யெனில் பஞ்சிலிருந்து தோன்றும் துணி மண்ணிலிருந்தும் நெய்யப்படலாம் என்ற பொருத்தமற்ற கொள்கை தோன்றும்.

எல்லையற்ற பிரமம், அவித்தையோடு கூடிய போது இந்த உலகம் தோன்றிற்று என்று நீ கூறுகிறாய். அறிவே வடிவாகிய பிரமம் அறிவற்ற அவித்தையோடு கூடுவதற்கு என்ன காரணம்? அவ்வாறு கூடுவது அதன்

இயல்பு என்று நீ பதிலிறுத்தால், இயல்பு பொருளை விட்டு ஒரு போதும் நீங்குவதில்லை. நெருப்புக்கு வெம்மை இயல்பு. நெருப்பை விட்டு வெம்மை ஒரு போதும் நீங்குவதில்லை அல்லவா? சத்துப் பொருளாகிய பிரமம் சத்தையே தரும். அசத்தைத் தராது. அறிவுடைய பிரமத்திலிருந்து அறிவற்ற உலகம் தோன்றும் என்பது ஒளியிலிருந்து இருள் தோன்றும் என்பது போன்ற முரண்பட்ட வாதமாகும்.

அவித்தை என்பது இருள் பொதிந்த விளக்கு என்ற உவமை பொருந்தாது என நீ மறுத்து விளக்கு எரிந்த பிறகு அதன் தீ கரிய நிறம் கொண்ட மை ஒன்றினைத் தோற்றுவிக்கிறதே அது போலக் கொள்ள வேண்டும் என்று கூறுகிறாய். மை ஒளியில் தோன்றுவதுமன்று. ஒளியில் ஒடுங்குவதும் அன்று. எனவே அந்த உவமை பொருந்தாது.

அறிவே வடிவான பிரமப் பொருள் தூய்மையானது. அதனோடு அறிவற்ற தூய்மையற்ற அவித்தை வந்து கூடுமாயின் அதற்கு ஒரு காரணம் வேண்டும். ஒரு காலத்து வந்து உரிய காலம் முடிந்த பின் வான வெளியை விட்டு நீங்கிப் போகும் கரிய மேகம் போன்றது அவித்தை, அது போல இதுவும் இயற்கை என்றாய். அவ்வாறாயின், வீட்டு நிலை என்ற ஒன்றைப் பேச இயலாது. மாயையால் பற்றப்பட்ட சீவான்மாக்கள் சென்று முத்தி நிலையில் கலப்பதற்குரிய பிரமப் பொருளே அவித்தையால் மறைக்கப்படும் எனில் சீவான்மாக்களுக்கு வீடுபேறு என்பது எவ்வாறு கைகூடும்? வீடுபேறு பெற்றவர்களையும் அவித்தை பற்றுமன்றோ?

மயக்கத்தைத் தரும் அவித்தையோடு கூடுவது பிரமத்திற்கு விளையாட்டு என்றாய். அவ்வாறாயின் பிரமம் ஒரு பொருள். அது விளையாடுதற்குத் துணையாகிய அவித்தை மற்றொரு பொருள் எனப்பட்டு உனது ஒரு பொருட் கொள்கை மறுக்கப்படும்.

சில வகைச் சிலந்திப் பூச்சிகள் தம் உடம்பிலிருந்து தோன்றும் நூலினால் தம்மைச் சுற்றி ஒரு கூட்டினைச் செய்து அதற்குள் புகுந்து பின்னர் அதிலிருந்து வெளியேற இயலாது இறந்த தன்மை போல, பிரமம் மாயையோடு சேர்ந்ததன் விளைவாக உடலுக்குள் வந்து புகுந்து பின் வெளியேற இயலாது தன்னுடைய முற்றறிவையும், வரம்பில்லா ஆற்றலையும் இழந்தது என்று ஆகும். கூட்டுக்குள் புகுந்த பூச்சியை விடுவிப்பதற்கு வேறு ஒரு பரம்பொருள் வேண்டும் என்று ஆகும். அப்படியானால் தனக்கு உவமை இல்லாதது என்று நீ கூறிய பிரமப் பொருள் தன் இலக்கணத்தை இழந்துவிடும்.

பிரமத்தினிடத்தில் உண்டான உடல் தொடர்பு செம்பில் தோன்றிய களிம்பைப் போன்றது. களிம்பு செம்பில் தோன்றியே செம்பை மறைப்பது போலவே பிரமத்தில் தோன்றி பிரமத்தை

மறைத்தது. களிம்போடு கூடிய செம்பு இரச குளிகையால் தீண்டப்படும் போது அதன் களிம்பு நீங்கிச் செம்பொன் ஆவது போல, உண்மை அறிவு பிறக்குமிடத்து மாயையின் கட்டுக்கள் ஒழிந்து பிரமம் விளங்கித் தோன்றும் என்று நீ கூறுகிருய். அப்படியாயின் முன்பு நீ கூறிய பிரமம் நித்தப் பொருள் என்பதும், அறிவே வடிவானது என்பதும், தூய்மை யானது என்பதும், என்ன ஆயிற்று? செம்பில் படிந்த களிம்பை நீக்கிய இரச குளிகை அதனின்றும் வேறுபட்டது போல, மாயையால் மூட்டப் பட்ட பிரமத்தை உடல் தொடர்பினின்றும் நீக்கிய அறிவும் அதனின் வேருயது என்பது பெறப்படும். நீ கூறிய பிரமப் பொருள் பாசத்தால் கட்டப்பட்ட எம்மைப் போன்ற ஒருவன் ஆதல் வேண்டும். தளையால் கட்டப்பட்ட உயிரைத் தளையால் ஒருபோதும் கட்டப்படாத இறைவனே விடுவிப்பான் என்பது எம் கொள்கை. ஆதலின் நீயும் சைவத்தோடு தொடர்புடையவன் ஆகின்ருய்.

பல நிறமுடைய மணிகள் ஒரே நூலில் கோக்கப்பட்டது போல உடல்கள் பலவாயினும் அவற்றுள் நிறைந்த பிரமம் ஒன்றே. பசுக்களின் நிறங்கள் பலவாயினும் அவை சுரந்த பால் ஒரே தன்மையாய் இருக்கும். நீருடைய பாத்திரங்கள் பல திறப்பட்டன ஆயினும் அவற்றுள் தோன்றும் கதிரவனின் நிழல் ஓர் இயல்பினதே. நீர் நிலைகள் கிணறு கேணி குளம் என்று பல பெயரைப் பெற்றிருந்தாலும் அவற்றுள் நிரம்பி இருக்கும் நீர் ஒரே தன்மை உடையது என்று உடல்களுக்கும் பிரமத்திற்கும் பல உவமைகளைக் காட்டினுய். மணிகள் தாம் உடல்கள் அவற்றைக் கோத்த சரடுதான் பிரமம் என்ருல் இவற்றைக் கோத்தவன் யார்? உடலோடு பிரமத்தைக் கூட்டியது யார்? பசுக்கள் உடல்கள். அவற்றின் பால் பிரமம் என்ருய். பசுக்களுக்கு அறிவுண்டு. பால் அறிவற்ற பொருள். அப்படியாளுல் நீ கூறும் பிரமம் அறிவற்ற பொருளாகவும் இருக்குமா? கலங்கள் பலவாகவும் அதில் தோன்றும் கதிரவனின் நிழல்கள் ஒன்ருகவும் இருப்பது போல என்ருய். இரண்டையும் ஒரு சேரக் கண்டவன் வேறு ஒருவனுக இருத்தல் வேண்டு மல்லவா? அவன் யார்? நீர் நிலைகள் பலவாகவும் நீர் ஒரு தன்மை யாகவும் இருக்கும் என்று சொன்ன உவமையில் அதனைக் கண்டுணர்த்த மூன்ருமவர் யார்? எனவே உனது உவமைகள் பொருத்தமற்றவை.

கண்ணுடியில் நிழல் தோன்றுவது போல உடலில் பிரமத்தின் நிழல் தோன்றும் என்ருய். கண்ணுடி தன்னுள் தோன்றும் நிழலால் இயங்குமாயின் உடம்புகளும் பிறத்து இறந்து வரும் என்று கூறக்கூடும்.

காந்தம் இரும்பை அசைப்பது போல் பிரமம் உலகத்துப் பொருள்களை ஆட்டுவிக்கும் என்ருய். காந்தம் அதன் அருகில் சென்ற இரும்பினையே அசைக்கும் இயல்புடையது. நீ கூறும் பிரமப்

பொருளோ எல்லாவிடத்தும் நிறைந்திருப்பதால் அதன் சந்நிதியில் அறிவுடைப் பொருள் அறிவு இல் பொருள் ஆகிய அனைத்தும் ஒரு தன்மையவாய்ச் செயல் படுதல் வேண்டும். அவ்வாறு செயல் படுவதை யாரும் கண்டதில்லை. இரும்பின் முன் காந்தத்தைக் கொண்டு வருவான் ஒருவன் வேண்டும். அப்படி ஒருவன் உளன் எனக் கொண்டால் நீ கூறும் பிரமப் பொருளினும் ஆற்றல் உடையவன் ஒருவன் உளன் என்று ஆகும். காந்தம் இரும்பைத் தன்னை நோக்கி இழுக்குமே தவிரத் தன்னை விட்டு நீக்காது. ஆனால் உலகமோ தோற்றமும் ஒடுக்கமும் மற்றும் பல செயல்களையும் கொண்டிருத்தலால் நீ கூறிய உவமை பொருந்தாது.

கனாக் கண்டு அஞ்சி விழித்தலும், மங்கிய வெளிச்சத்திலே கயிற்றைப் பாம்பாகக் காணுதலும் என்று மேலும் இரண்டு உவமைகள் கூறினாய். கனவிலே விளைவதும் நனவிலே விளைவதும் இரண்டும் வினையிலே விளைவதே ஆகும் கனவில் சூக்கும உடலும் நனவில் தூல உடலும் மாறி மாறிச் செயல்படுகின்ற இயல்பினால் இவை நேருகின்றன. இவற்றைப் பொய் எனத் தள்ளுதல் தகாது. இரவில் கண்ட கயிற்றைப் பாம்பு எனக் கண்டு மயங்கியது உடலா அன்றி அவ்வுடலை இயக்கும் பிரமமா? பிரமம் தான் அஞ்சிற்று என்பாயாயின் அது முதன்மை உடையது முற்றறிவுடையது என்பது கொச்சை வாதம் அல்லவா? ஒரு முறை கனவில் அஞ்சியும் ஒரு முறை கயிற்றைப் பாம்பு என மருண்டும் தெளிந்த பின்னர் மீண்டும் அப்பிரமம் அதே நிலை உறும் போது அஞ்சியும் மருண்டும் வரும் எனக் கூறினால், நீ கூறும் பிரமத்தின் பெருமைக்கு இழுக்கன்றோ?

சிவந்த நிறமுடைய பூவோடு சேர்ந்த போது வெண்ணிறப் பளிங்கு செம்மை நிறத்தைக் காட்டினாலும் தன் உண்மைத் தன்மையை இழக்காது. அது போல உடலோடு கூடியிருக்கும் பிரமமும் வினைப் பயனால் இன்பத் துன்பங்கள் அடையினும் மாறுதல் அடைவதில்லை என்று உரைத்தாய். ஆனால் உலகத்து உயிர்கள் பயிவேறு வகைப்பட்ட வினைப் பயன்களை நுகருகின்றனவே அது எதனால்? அறத்தின் விளைவும் மறத்தின் விளைவும் பல வகைப் படும் ஆதலால் அவற்றை நுகரும் உடல்களோடு கூடிய பிரமமும் பல வகையினவாய் இருக்கும் எனில் அதனையும் விஞ்சிய அறிவு வேறு உண்டு எனில், அறியாமையோடு கூடிய உடல்கள் பல உளவென்றும் பல்வகைப்பட்ட அறம் பாவம் என்பன உளவென்றும் ஆகி உன் ஒரு பொருட் கொள்கை மறுக்கப்படும். அது மட்டும் அல்லாமல், பிறர் பொருளைக் கவர்ந்த கள்வரைக் கட்டி வந்து ஒறுக்கும் அரசனைப் போல நீ கூறுகிற பிரமத்தையும் அது மறம் இழைக்குமாயின் பிணித்து உடலாகிய சிறையில் அடைத்து முறை செய்யும் ஒருவன் எங்களால் வணங்கப்படும் சிவபெருமானே என்று உணர்வாயாக.

வினையோடு பொருந்திய உடலில் நனவு கனவு உறக்கம் என்ற மூன்று நிலைகள் உண்டு எனக் கூறினாய். அந்த அவத்தை நிலைகளை அநுபவிப்பது யார்? பரம்பொருள் எங்கும் நிறைந்தது ஆதலால் அது உடலின் அளவுக்குள் அடங்கிற்று என்றல் பொருந்தாது உடம்பு தான் துன்புறும் என்றால், அது சடப் பொருள் எனவே அறிவற்றது உட் கருவிகள் கூடுவதாலும் பிரிவதாலும் ஏற்படுகிற மயக்கமே இன்பத் துன்பங்களுக்குக் காரணம் என்று நீ விடையிறுத்தால் முதன்மை பெற்றது அகக் கருவிகளா அன்றிப் பிரமமா? பிரமம் முதன்மை உடையது எனில் அகக் கருவிகளினால் உயிர் பிறழ்வு எய்த மாட்டாது. அகக் கருவிகளாகிய இவையே முதன்மை பெறும் எனில் நீ முற்கூறிய மொழி பழுதுபட்டது ஆகும்.

இத்துன்பத்தை அனுபவிப்பது பிரமமே என்றால் அதன் ஒரு பகுதி துன்புறும் மற்றைப் பகுதி துன்புறாது என்பது பொருந்தாது. ஒருவன் சாளரத்தின் வழியாகத் தனது ஒரு விரலின் நுனியை வெளியே நீட்ட அதில் ஒரு தேனீ கொட்டுமானால் அந்தத் துன்பத்தை விரல் நுனி மட்டும் அனுபவிக்குமானால், உடலில் தங்கிய பிரமப் பகுதி மட்டிலுமே உடலின் துன்பத்தை அனுபவிக்கும் என்று கூறுவது பொருத்தமாகலாம்

கண்ணாடியின் நிழலில் தோன்றும் கண்ணில் தடியால் குத்தும் போது கண்ணுக்குத் துயரம் விளைவதில்லை. அது போலவே உடலுக்குத் துயரம் ஏற்படும் போது உடலை இடமாகக் கொண்ட பிரமத்திற்குத் துன்பம் உண்டாகாது என்று கூறினாய். அவ்வாறு கூறியது உன் முந்திய மொழிக்கு மாறுபாடாகும் இன்பத் துன்பங்கள் அறிவினால் துய்க்கப் படுவன ஆதலால் காட்சி அளவைக்கும் மாறுபட்டதாகும். எனவே உன் கூற்று தவறுடையது ஆகும். சொல்லுதல் எளிது. சொல்லிய வண்ணம் செய்தல் அரிது என்னும் பழமொழிக்கு நீ இலக்காகிறாய். வரம்புக்கு உட்பட்டது அன்று என்று நீயே கூறிய பிரமப் பொருள் ஓர் உடலில் அடங்கி நின்று இன்பத் துன்பங்களை நுகரும் என நீ சொல்லுவது, வானத்தில் இயங்குகின்ற காற்றைக் கயிற்றால் கட்டி விட்டேன் என்று கூறுவதற்கு ஒப்பாகும்.

பிரமப் பொருள் உடலில் கட்டுண்டு கிடக்கும் நிலையில், வானத்தில் தோன்றிய மேகத்தை வானத்திலேயே தோன்றிய காற்று விலக்குவது போல அப்பிரமத்திலிருந்தே வெவிப்படுகிற விவேகம் அந்தக் கட்டினை விலக்கும் என்றாய். தன்னில் தானே தோன்றிய அந்த அறிவு முன்பே உள்ளதா? முன்பே உள்ளதாயின் மயங்க வேண்டாம். முன்பு இல்லை எனில் பின்பு அத்தகைய ஞானம் உண்டாகாது. முன்பு இல்லாத ஒன்று பின்பு தோன்றும் எனல் ஆகாயத்திலே தாமரை மலர் பூக்கும் என்பது போன்ற பொருந்தாக் கொள்கையாகும். அவ்வாறு

இல்லை, மரத்துக்குள்ளே அடங்கியிருக்கிற நெருப்பு பின்னர் வெளிப் பட்ட தன்மை போலக் கொள்ள வேண்டும் என்று நீ கூறினுல், மரத்திலிருந்து தீ தோன்ற வேண்டுமாயின் அதனைக் கடைபவன் ஒருவன் வேண்டும் அத் தீ தானே தோன்றிற்று என்றல் பொருந்தாது. கட்டு நிலையில் தோன்றிய ஞானம் விறகில் தோன்றிய தீக்குச் சமம் என்ருல் அது தோன்றியது சடத்திலிருந்து என்று ஆகி பிரமத்திலிருந்து ஞானம் தோன்றவில்லை என்று முரண்பாடாய் முடியும்.

வைக்கோல் வேய்ந்த வீட்டைப் பிரித்தெறிந்த பின் அது இல்லாமல் போகும் என்றும், துணியை இழை இழையாகப் பிரித்தால் துணி என்ற பொருள் இல்லாமல் போகும் என்றும் உவமைகள் கூறி உயிர் எனப்பட்ட சீவான்மா ஒவ்வொரு பொருளாக இது நான் அன்று' இது நான் அன்று என்று கழித்தபின் எஞ்சுவது, பிரமப் பொருளே என்ருய். அறியாமையின் முன் அறிவும் அறிவின் முன் அறியாமையும் நிற்க மாட்டா. எனவே ஒளியால் இருளுக்கும் இருளால் ஒளிக்கும் ஒரு காலத்திலும் எவ்விதப் பயனும் இல்லை. அவ்விரண்டையும் நுகரும் ஆற்றலும், அவ்விரண்டிற்கும் வேருன இயல்பும் உடைய கண்ணே இருளையும் ஒளியையும் அறிந்து அனுபவிக்கும். எனவே உயிர் என்ற தனிப் பொருள் இருளைச் சார்ந்து இருளாகவும் ஒளியைச் சார்ந்து ஒளியாகவும் இருக்கும் என்பதனை அறிவாயாக.

பிரமப் பொருளே மயக்கத்துக்கு உட்பட்டுச் சீவான்மா ஆயிற்று, மயக்கத்திலிருந்து விடுபட்டு மீண்டும் பிரமமே ஆயிற்று என்று கூறினுய். அவ்வாறு எனில் இம்மாற்றங்களினுல் பிரமத்திற்கு என்ன பயன்?

பிரமமாகிய தான் தன் வடிவத்தையே காணும் என்ருய். கண்ணும் வேறு எந்தப் பொருளின் துணையும் இல்லாது கண்ணையே காணும் என்பது போல உன் கூற்று அமைந்துள்ளது. தன் இன்பத்தைப் பிரமம் தானே துய்க்கும் என்றும் கூறினுய். அப்படியானுல் பிரமம் தன் இன்பத்தைத் தானே துய்ப்பதை இது வரை தடுத்து நின்றது எது?

நீ முன்பே கரும்புக்கு அதன் சுவை தெரியாது என்று ஏதோ கூறினுய். இப்போது கூறுவது அதற்கு முரண் அல்லவா? நீ என்ற உயிர்ப் பொருள் இதுவரை கட்டுண்டு இருந்து இப்போது அறியாமை நீங்கியதால் பரம்பொருளோடு கூடி அதன் பேரின்பதை நுகர்கிருய் என்பது தானே அதன் பொருள்.

தத்துவமசி என்பது வேதத்தில் உள்ள ஒரு மகா வாக்கியம். அதன் உண்மையான பொருள் பிரமப் பொருள் ஒன்றே உள்பொருள்; உயிர் என்ற தனித்த பொருள் இல்லை என்று கூறினுய். அது மூன்று சொற்களைக் கொண்ட ஒரு சொற்ருெடர். தத் - அது. த்வம்—நீ. அசி—ஆகின்ருய்.

அது நீ ஆகின்றாய் என்பது அது ஒரு பொருள், நீ மற்றொரு பொருள் என்பதை உணர்த்தவில்லையா? போரின்போது நீ புலி ஆயினை என்றால் நீயும் புலியும் ஒரே பொருள் என்று பொருள் தரும்? இந்த இடத்தில் ஆதல் என்பது உவம உருபு ஆகி, நீ புலியினைப் போன்று போரிட்டாய் என்றே பொருள் தரும் அதிலிருந்து நீ வேறு புலி வேறு என்பது தெளிவாகப் புலப்படுகிறது அல்லவா? ஒருவன் நான் நோயாகக் கிடந்தேன் என்று சொன்னால் அவன் நோயிலிருந்து வேறுபட்டவன் அல்லன் என்று கூறலாகுமா? நோய் வேறு என்பது தான் உண்மை. அகம் பிரம்மாஸ்மி என்ற சொற்றொடர் நான் பிரமம் ஆகிறேன் என்று பொருள் தந்து நான் வேறு பிரமம் வேறு என்பதைத்தானே உணர்த்தும்?

நீரில் அசைந்து கொண்டிருக்கும் நிலவின் நிழலைப் பார்த்த ஒருவன். உண்மையை உணரும் போது அசைவது நிலவு அன்று; நீரே என்று உணர்வான். அவ்வாறே சீவான்மாவும் தன் கட்டுக்களை ஒவ்வொன்றாக நீக்கிய பின் ஞானம் உண்டாவதனால் மாறுபாடுகளுக்கு உட்படுவது பிரமம் அன்று என்று உணர்வான் என்றாய். நிலவு பிரமப் பொருளாயும் நீர் மாயையும் ஆனால் இரண்டையும் அவற்றின் வேறாக் நின்று காண்பவன் ஒருவன் வேண்டும். அப்படியாயின் உன் ஒரு பொருட் கொள்கை என்னவாயிற்று?

குடத்துக்குள்ளிருந்த ஆகாயம் குடம் உடைந்த போது வெளியில் உள்ள பேராகாயத்தோடு சேர்ந்து ஒன்றாய் ஆவது பரமுத்தி என்று கூறினாய். அப்படியானால் ஒரு சீவான்மா முத்தியடைந்த போதே எல்லா சீவான்மாக்களும் முத்தியடைய வேண்டும் என்பதே உன் கொள்கைக்குப் பொருத்தமாய் இருக்க வேண்டும், ஏனெனில் உன் கொள்கைப்படி பரமான்மாவே சீவான்மா ஆகிறது. இவ்வாறு கூறுவதை மறுத்து ஒவ்வொரு சீவான்மாவும் அது அது ஞானம் பெற்றே முத்தியடைய வேண்டும் என்று நீ கூறுவாயானால் உயிர்கள் பல என்பதை நீ உடன்பட்டு, உன் ஏகான்ம வாதக் கொள்கை மறுக்கப்படும்.

பிரம ஞானம் கைவரப் பெறுதவர்கள் வேதத்தில் விதிக்கப்பட்ட கரும காண்டக் கிரியைகளைத் தவறாது செய்து வந்தால் ஞானம் உதிக்கும் என்றாய். அப்படியானால் உயிர்களுக்கு அறியாமை இருக்கிறது என்பதை நீ ஒத்துக் கொண்டாய். அந்த அறியாமை எங்கிருந்தது வந்தது? என் உயிரைப் பற்றிற்று என்பதற்கு நீ காரணம் சொல்ல வேண்டும். அதனை நீ கூறவில்லை.

அரணிக் கட்டையில் தோன்றிய தீ அந்தக் கட்டையையே அழிப்பது போல் கரும காண்டத்தின் வாயிலாக வந்த ஞானம் அக் கரும காண்டத்தையே அழிக்கும் என்றாய். அதனால் தான் போலும் அற

ஒழுக்கத்தை யெல்லாம் கைவிட்டுப் பிரம்ம ஞானம் பெறுத போது பெற்றேம் என்று தருக்கி ஒழுக்கத்தைக் கைவிட்டு அறியாமையினுலோ ஊழ் வலியினுலோ நீ தருக்கித் திரிகிருய்?

ஒப்பற்ற மனிதப் பிறப்பு வாய்ந்த போது அற நூல்கள் சொன்ன வண்ணம் விதித்தன செய்தும், விலக்கியன ஒழித்தும் வாழ்தல் வேண்டும். அவ்வாறு செய்யாது இருத்தல் செய்ந் நன்றி கொன்ற குற்றம் ஆகும்.

உலகத்து நீதியும், வேதங்களில் சொல்லப்பட்ட நீதியும் ஞானம் முற்றியவர்களுக்கு ஒரு பொருட்டாய்த் தோன்ரு. ஆதலால் அவர்கள் குழந்தைகளைப் போலவும், பித்தர்கள் போலவும், பேய் பிடியுண்டவர்கள் போலவும், உறங்கியவன் கைப்பொருள் தானுக நழுவியது போலவும் ஒழுகுவார்கள் என்ருல் அந்த நிலை வாய்ப்பது எப்போது? தானுக அத்தகைய நிலைகள் கை கூட வேண்டுமே யன்றி முயன்று செய்வது பயன் தராது. ஆனுல் நான் அந்நிலையை எய்திவிட்டேன் என்று கருதிக் கொண்டு அற வழி ஒழுகுதலைக் கை விடுவது நரகத்திலேயே செலுத்தும். வழிகாட்டுவான் ஒருவன் இன்றி முத்தி நிலை கிடைக்கும் என்பது பித்தர் சொல். செத்த பிறகே பிரமப் பொருள் கிட்டும் என்பதும் அத்தகையதே.

உடம்பைச் சடம் என்று கூறினுய். வைதாலும், வாழ்த்தினுலும், வெட்டினுலும், கொளுத்தினுலும், வணங்கினுலும், உதைத்தாலும், அதற்கு ஒன்றும் இல்லை. ஆயினும் யாவற்றையும் ஒரு தன்மையாகக் கருதும் மெய்யறிவு எக்காலம் உதிக்கும்?

வாழும் நாட்களோ மிகச் சில. அதற்குள் பல நூல்களைக் கற்று பிறரோடு வாது செய்து தலையை மொட்டை அடித்துக் கொண்டு பிறரிடம் இரந்து உண்டு திரிதல் என்ன பயனைத் தரும்? நீயோ, நானே எல்லாத் தெய்வங்களும் ஆனேன் என்று கூறி வருகிறவன். நீ நோய்க்கு இரையாகி மூத்து உயிர் பிரியும் காலத்து அஞ்சி நடுநடுங்கி அலறினுலும் உன்னுல் பழிக்கப்பட்ட தெய்வங்கள் உன்னை நரகத்தில் ஆழ்த்தும். எனவே மாயா வாதம் பேசும் பேயனே, உனக்கு எந்நாளும் சுவர்க்க இன்பமே கிட்டாது.

அநவத்திதம் — வரம்பற்றது. சப்தரூபம் — ஒலி வடிவம். அகண்டிதம் – பகுக்கப்படாதது தந்தம் – பல். தாலு — நாக்கு. அலகை — பேய். சுயம்பு — தானே தோன்றியது. பிரமாணம்—அறியப் படுகின்ற பொருள். பிரமாதா—அறிகின்ற பொருள். பிரமிதி – அறியும் கருவி. சுத்தி — சிப்பி. சிலம்பி — சிலந்தி. பாதவம் — மரம். பலாலம் — வைக்கோல். படம் — துணி. நுந்துழி — குளவி. சைவந்தவன் – சைவத்தோடு தொடர்புடையவன். சாளரம்—பலகணி. அங்குலி — விரல். தர்ப்பணம் — கண்ணுடி. நிரயம் — நரகம்.

*ஐக்கியவாதி சங்கற்பம்*

5 அரிதேர்ந்து உணராப் பெரியோன் உரைத்த
பதிபசு பாசம் விதிமுறை கிளக்கில்
ஈசன் ஏகன் எண்ணிலி பசுக்கள்
பாசம் இருவகைப் பரிசினது உலகத்
தாயவன் உயிர்க்கு மாயையின் அருளால் 5

இருவினைத் தகையின் உருவினைத் தருமால்
கருமுகில் அடர இரிதரு கதிர்போன்று
அறிவாம் உயிரில் பிரியாது ஏயும்
ஈட்டும் இருபயன் ஊட்டிடும் நியதி
ஒருபோது இருபயன் நுகர்வுற மருவுதல் 10

இன்மை யாதல் முன்னிய காலைச்
சத்தி நிபாதம் உற்றுஇறை அருளால்
உருவுகொடு உலகு தெரிவுற மருவி
மாசுறும் தூசு தேசுற விளக்கும்
தன்மையில் உணர்த்தும் புன்மைகள் நீங்கி 15

நீரும் நீரும் சேரும் தகைமையில்
அறிவினோடு அறிவு செறிவுறப் பொருந்தி
ஒன்று ஆம் என்பதை உலகோர்
நன்றும் முத்தி எனாவிற் றின்றே

*திருமாலாலும் தேடி அறியப்படாத சிவபெருமானால் அருளப் பட்ட முப்பொருள் உண்மைகளை முறையாகச் சொல்ல முற்பட்டால் : இறைவன் ஒருவனே. பசுக்களாகிய உயிர்கள் எண்ணற்றவை. பாசம் எனப்படும் தளைகள் இரண்டு வகைகளை உடையது, அவை மாயை, கன்மம் என்பன. உலகத்துக்குத் தாயும் தந்தையும் ஆகிய சிவபெருமான் தனது திருவருளால் உயிர்களுக்கு மாயையிலிருந்து அவ்வுயிர்களின் நல்வினை தீவினைகளுக்கு ஈடாகப் பல வகைப்பட்ட உடல்களைத் தருவான்.*

*வானில் கருமேகங்கள் சூழ்வதனால் கதிரவன் மறைக்கப்படுவது போன்று இவ் உயிர்கள் அறிவுடையனவாய் இருந்தும் அவை ஈட்டிய வினைப் பகுதியின் தொகுதியால் உயிர்களின் அறிவு குன்றும். வினைப் பயன்களின் நுகர்வுகளை விருப்பு வெறுப்பு அற்று ஒரு தன்மையாகக் காணும் நிலைக்கு உயிர் உயர்ந்த போது இறைவனின் திருவருள் உயிரில் பதிதலாகிய சத்திநிபாதம் நிகழும். அப்போது இறைவன் தன் திரு வருளே திருமேனியாகக் கொண்டு எழுந்தருளுவான். துணியில் படிந்த அழுக்கை வெளுத்து நீக்குவது போல் உயிரில் படிந்த அழுக்கு விலகும் வண்ணம் ஞானத்தை உணர்த்துவான். அப்போது உயிரைப் பற்றி*

யிருந்த மாயையும் கன்மமும் விலகும். இவ்வாறு நாய்மைப்படுத்தப் பட்ட உயிரும் இறைவனும் நீரும் நீரும் கலந்தது போலச் சிவ ஞானத்தோடு ஆன்ம ஞானமும் செறிவுற்றுக் கலந்து ஒன்றாகும் இதுவே இன்பம் விளைவிக்கும் முத்தி நிலை என்று பெரியோர் கூறுவார்கள்.

பரிசு இயல்பு, வகை. ஏயும் — பொருந்தும். முன்னிய காலை — நேரும் போது. தூசு — உடை, துணி, தேசு — ஒளி.

## ஐக்கியவாதி சங்கற்ப நிராகரணம்

**6** முத்தி என்பதை எவனோ சுத்த
அறிவு எனில் பாசம் செறியா மாயை
உருஇரு வினையால் வரும் இரு வினையும்
உருவால் அன்றி மருவாது இவற்றின்
மூந்தியது ஏதோ வந்து அணைவதற்கு ஓர் 5

ஏது வேண்டும் தான் இயல்பு என்னில்
வீடு உற்றவரினும் கூடக் கூடும்
ஈங்குஇவை நிற்க நீங்காக் கருவிகள்
கொண்டு அறிவு அறியக் கண்டதும் அன்றி
மருவிய உருவு துயில் பெறும் காலைச் 10

சிறுபொறித் தறுகண் கறைஅணல் சுடிகைத்
துத்திக் கடுவுள் துணைஎயிற்று உரகக்
கொத்துஅயல் கிடப்பினும் குவைதரு நவமணி
ஒருபால் துதையினும் பெருகு ஆர்வத்தினோடு
அச்சமும் அணுகாக் கொச்சைமை என்னோ 15

கருவி யாவும் பிரிவுறு நிலையேல்
பொறிபுலன் ஆதி குறைவற நிறைந்து
காட்சியது அளிக்கும் மூட்சியின் முன்னைக்
கொடுத்து ஓர் ஆழி விடுத்தவன் நாடிக்
கொள்வோர்க் காணாது உள்கி மீண்டுழித் 20

தந்தவன் கண்டாங்கு அந்தமில் அதனைத்
தருக வென்னும் பெருமதி பிறங்கும் அது
அறிவிலாமை என்றனை அது மலமாகக்
குறிகொளாளர் அறைகுவர் அன்றே
அறிவிற்கு அறிவு செறியவேண் டின்றே 52

உண்மையில் இருமையும் ஒளியே எனில் ஒரு
தன்மை யாகமுன் சாற்றினர் இலரே

முன்பு நன்றுடன் ஒன்றிய காலை
இன்பம் எய்துதற்கு இலது உயிர் ஆதலின்
நீயலை பொருத மாயா வாதி 30
ஆயினை அமையும் அருள்நிலை கேண்மதி.

முத்தி நிலை என்பது என்ன? அதைப் பற்றி இப்போது பேச வேண்டாம். முதலில் நீ கூறிய கட்டு நிலை பற்றிய விளக்கம் பொருத்த மானதுதானா என்பதைக் காணலாம். உயிர் அறிவாக இருக்கும் என்றால் அதனை மாயையும் கன்மமும் இடையில் வந்து பற்றுவானேன்? மாயை யின் விளைவாகிய உடல் வினையால் வரும் என்றனை. வடிவம் இல்லாத ஒரு பொருள் இருவினையும் ஆற்றுதல் இயலாது. அவ்வாறாயின் மாயை முந்தியதா? கன்மம் முந்தியதா? இந்தக் கேள்விகளுக்கு விடை கூறுதல் வேண்டும். இரண்டில் எது முந்தி வந்தது என்று சொன்னாலும் அது ஏன் வந்து பொருந்திற்று என்பதற்குக் காரணம் கூறியாக வேண்டும். கன்மமும் மாயையும் உயிரைப் பொருந்துவது இயல்பு என்று கூறினால் வீடுபேறு அடைந்தவர்களையும் அத்தளைகள் பொருந்தும் எனல் வேண்டும்.

உயிர் அறிவுடைய பொருள் என்றாய். ஆயினும் கருவிகளோடு கூடிய போதே உயிரால் அறிய முடிகிறது என்பதையும், கருவிகளிலிருந்து நீங்கிய போது உயிர் அறிவற்று இருப்பதையும் கண் கூடாகக் காண்கிறோம். ஒருவன் தூங்கும் போது, உடம்பில் சிறு புள்ளிகளும், கருத்த கழுத்தும், படமும், உள் துளை உள்ள பற்களும், நஞ்சும் கொண்ட பாம்புக் கூட்டம் பக்கத்திலே கிடந்தாலும், மற்றொரு புறம் நவமணிகள் குவிந்து கிடந்தாலும் பாம்புக் கூட்டத்தால் அச்சமும், குவிந்த நவமணிகளில் ஆர்வமும் இல்லாது அவன் உறங்குகிறானே, அது ஏன்? கருவிகள் நீங்கிய நிலையில் அவன் அவ்வாறு அறிவற்றுக் கிடக்கிறான்.

ஒருவன் நனவு நிலையிலேயே மற்றொருவனிடம் தன் மோதிரத் தைக் கழற்றிக் கொடுத்து அதனை விற்று வா என்று வேண்டுகிறான். விற்கச் சென்றவன் பல நாள் பலரையும் நாடி முயன்றும் வாங்குவார் இல்லாமையால் மோதிரத்தை உடையவனிடமே மீண்டும் கொடுத்து விடுகிறான். சில நாள் கழிந்த பிறகு மோதிரத்தை மீண்டும் பெற்றுக் கொண்டதை மறந்து நான் கொடுத்த மோதிரத்தைத் தா என்று கேட்கிறான். விழித்திருக்கும் போது கொடுத்து விழித்திருக்கும் போதே மீளவும் பெற்றுக் கொண்டது எவ்வாறு அவனுக்கு மறந்து போயிற்று? அதுவும் மாயையில் விளைந்த அறியாமை என்றால் அது பொருத்தமற்றது. இந்த மறதிக்குக் காரணமாக உயிரைப் பற்றி நிற்கிற மலம் என்ற ஒன்று உண்டு என்பதனைப் பெரியோர் கூறுகிறார்கள்.

இறைவனும் ஞான வடிவினன், உயிரும் ஞானமே வடிவானது என்றால் ஒன்றோடு ஒன்று செறிதல் வேண்டும் என்ற தேவை இல்லை. உயிரும் இறைவனும் ஒரு தன்மையவாய் இருக்கும் என்பதை மிகச்சிலரே ஏற்றுக்கொள்வர். மேலும் நீ கூறிய மாயை கன்மம் ஆகிய இரு தளைகளும் உயிரை வந்து பற்றுவதற்கு முன் உயிர் முத்தியின்பத்தைத் துய்த்துக் கொண்டிருந்தது என்பதும் யாராலும் ஏற்றுக் கொள்ளப் படவில்லை. நீயும் மாயாவாதியோடு ஒருவனாகின்றாய். முத்தியின்பத்தைப் பற்றி நான் கூறுகிறேன் கேட்பாயாக

இந்த ஐக்கியவாதியின் கொள்கையை மறுக்கின்ற பாடாண வாதியின் மறுப்பில் தொடக்கத்தில் முத்திநிலை பற்றி இப்போது பேச வேண்டாம் என்று குறிப்பிட்டது நினைவு கூர்தற்குரியது. ஏனெனில் ஐக்கியவாதியின் முத்திநிலைக் கொள்கை இதை அடுத்துவரும் பாடாண வாதியின் சங்கற்பத்தில் கூறப்படுகிறது அதற்காகவே ஆசிரியர் 'அருள்நிலை கேண்மதி' அதாவது முத்தி நிலையைப்பற்றி நான் கூறுகிறேன் கேட்பாயாக என்று கூறி இப் பகுதியை நிறைவு செய்தார்.

கறையணல் — கரிய கழுத்து. துத்தி — படம். கடு — நஞ்சு உரகம் - பாம்பு, கொச்சைமை - அறியாமை அலைபொரு மாயாவாதி- மறுக்ககபட்ட மாயாவாதி.

## பாடாணவாதி சங்கற்பம்

7 **மூல மலத்தால் சாலும் மாயை**
**கருமத்து அளவில் தரும் உரு இறைவன்**
**செறிந்துஇரு பயனும் நுகர்ந்திடும் உயிர்கள்**
**இருள்உரு மலத்தில் பருவரல் படுதலின்**
**இடைஇரு நோக்கும் தடைபட் டோரில்** 5
**துயர்உறும் அதனால் செயிர்உறு துன்பம்**
**கொத்தை மாந்தர் உய்த்துஉறும் துயில் போல்**
**காட்சி என்னக் காணாத் துயர்**
**காட்சியை முத்தி எனவகுத் தனரே**

தோற்றமில் காலத்திலேயே உயிரைப் பற்றிக் கொண்டிருக்கும் ஆணவ மலம், மூலமலம் எனப்படும். இதனால் உண்டாகிய துன்பத் தைப் போக்குவதற்கு இறைவன் மாயையை உயிருடன் கூட்டுவான். உயிரின் வினைக்கேற்ற உடலையும் இறைவன் தருவான். அந்த உடலில் பொருந்தி உயிர் இருவினைப் பயன்களையும் நுகரும். அப்போது ஆணவ மலச் சேர்க்கையால் உயிர் துன்புறும். காணும் தன்மையுடைய கண்களைப் படலம் மறைத்தாற் போல ஆணவம் உயிரின் அறிவை மறைக்கும். இதனால் மீண்டும் மீண்டும் பிறந்தும் இறந்தும் துன்புறும்.

இது கட்டு நிலை ஆகும். உறக்கத்தில் அழுந்திக் கிடக்கிற போது உயிர்கள் துன்பம் அற்று இருப்பது போல, முத்தி நிலையிலும் உயிர் எதனையும் அறியாது இன்பத் துன்பங்களும் இல்லாது இருக்கும். இத்தகைய உயர் நிலையையே முத்தி நிலை என்று முன்னோர் வகுத்தனர்.

மூல மலம் – ஆணவ மலம். உரு — உடல். பருவரல் — துன்பம் கொத்தை — குருடு, இங்கு அறியாமை. பாடாணம் – கல். பாடாண வாதி – முத்தி நிலையில் உயிர் இன்பமோ துன்பமோ எதுவும் இல்லாமல் கல்லைப் போலக் கிடக்கும் என்ற கொள்கை உடையவன்.

*பாடாணவாதி சங்கற்ப நிராகரணம்*

8 வகுத்துஉரை பெருகத் தொகுத்திடும் முத்தி
நன்று நன்று இருள் ஒன்றிய மலத்து ஆம்
உளத்திற்கு உறுபொறி செறிபுலன் நுகர்தல்
விளக்கின் திகழும் மேன்மையது அன்றே
கருவிகள் அகல்வுழி மருவிய துயரமும் 5

நன்றுஎனல் ஆகும் துன்றிய படலத்து
இடைதடைப் பட்ட சுடர்விழி மாந்தர்
படலம் நீங்குதல் கடன் ஆதலினே
காட்சி என்னக் காணாத் துயர
காட்சியை முத்தி என வகுத்து உரைக்கில் 10

கரணா பாவம் மரணம் கருமரம்
ஏய்ந்தவர் முத்தி சேர்ந்தவர் அன்றே
இனைய கதிக்குஓர் முனைவரும் வேண்டா
தனிதரு துயரம் எனும் இது திடனே
பாடா ணத்தில் கூடா முத்தி 15

பல சொற்களால் வகுத்தும் தொகுத்தும் நீ கூறிய முத்திநிலை மிக நன்று! ஆணவத்தோடு கூடிய உயிர்களுக்குக் கருவி கரணங்களின் வாயிலாக வரும் நுகர்ச்சி விளக்கொளியில் காணும் காட்சியினைப் போன்றது. இது சகலநிலை எனப்படுவது, உயிர் கருவி கரணங்களை விட்டு அகலுமானால் அப்பொழுது அது மீண்டும் கேவல நிலைக்குத் திரும்பி ஆணவ மலத்தால் முற்றிலும் மறைக்கப்பட்டுவிடும். நீ கூறுகிற வீடுபேற்று நிலையிலும் இதுவே பேசப்படுகிறது. ஏனெனில் அதிலும் உயிர் கல் போல அறிவற்றுக் கிடக்கிறது என்றாய். அது மட்டிலு மல்லாமல் இறந்தவர்களும், நிறைவடையாத கருவும், மரங்களும் கூட உன் கருத்துப்படி முத்தி பெற்றவனாக வேண்டும். இத்தகைய முத்தியை உணர்த்துவதற்கு ஓர் ஆசிரியனும் தேவையில்லை. உயிர் தனித்துக் கிடக்கும் என்ற உனது முத்தி துயரமே யன்றி வீடுபேறு அன்று.

இப் பகுதியின் இரண்டாவது வரியில் நன்று நன்று என்று கூறியது இகழ்ச்சுக்குறிப்புடன் கூறப்பட்டதாகும். நீ கூறியது நன்றல்ல என்பது கருத்து.

கரணாபாவம் — கரணம் + அபாவம் – கரணங்களிலிருந்து நீங்கி நிற்றல். முனிவர் ஞான ஆசிரியர். பாடாணம் - கல்.

## பேதவாதி சங்கற்பம்

9 ஈசனது அருளால் பாசத் தொகுதி
செறிவுறு செம்பில் கறையுறு களிம்பு
குளிகை தாக்க ஒளிபெற்று ஆங்கு
நித்த சுத்த முத்தர் ஆக
வைத்தனர் உலகில் மறைவல் லோரே. 5

உயிர்களைப் பற்றியுள்ள பாசங்களின் தொகுதி இறைவன் அருளால் நீங்கும் அது எவ்வாறு எனில் செம்பில் கலந்துள்ள மாசு ஆகிய களிம்பு இரச குளிகையால் நீக்கப்பட்ட போது, செம்பு பொன் ஆனற் போல. இவ்வாறு உயிர்களைப் பற்றிய தளைகள் யாவும் நீங்கிய உடன் இவ்வுயிர் என்றென்றும் தூய்மை உடையதாகி வீடுபேறு அடைந்து நிலைபெறும் என்று மறை வல்லவர்கள் கூறியுள்ளனர்.

## பேதவாதி சங்கற்ப நிராகரணம்

10 மறைகள் ஆகமத் துறைகள்மற்று எவையும்
நாசமில் பதிபசு பாசம்என்று உரைத்தல்
அயர்த்துஓர் குளிகைச் சயத்தால் தாமிரக்
காளித நாசம் பாசத்து ஏய்த்தல்
கூடாது அன்றியும் குளிகை சீருணம் 5

நீடாது அழித்த நிலைஇலை ஆதலின்
பேத வாதம் ஓதுதல் பிழையே
இன்னும் இன்உயிர் ஏமம் குளிகை
தன்னில் அன்னியம் தருவது திடமே
வீடுஇத் திறத்தினில் கூடக் கூடா. 10

மறைகளும் ஆகமங்களும் மற்றும் உள்ள அருள் நூல்களும் பதி பசு பாசம் ஆகிய மூன்றும் என்றும் நிலைத்த பொருள்கள் என்று கூறுகின்றன. அவ்வாறு கூறுவதை மறந்து இரசகுளிகையைக் கொண்டு செம்பில் உண்டாகிய களிம்பு முற்றிலும் அழிதல் போலப் பாசங்கள் முற்றிலும் அழியும் என்று கூறுவது அருள் நூல்களின் கருத்துக்கு நேர் மாறானது. இரசகுளிகை செம்பைப் பொன்னாக மாற்றிற்று என்றால் செம்பு என்கிற பொருள் ஒழிந்து பொன்னாகிய புதிய பொருள் ஒன்று

அங்கே தோன்றுகிறது என்றுகும். அவ்வாறு உயிரும் இல்லாமல் போய் அதனின்றும் மாறுபட்ட ஒரு பொருள் தோன்றிற்று என்று ஆகும். இவ்வாறு கூறுவதும் பிழையே ஆகும், மேலும் செம்பு வேறு இரசகுளிகை வேறு என்பதனால் இவை இரண்டும் நமக்குள் அந்நியமானவை என்பதும் தெளிவு. அந்நியப் பொருள் ஒன்று உயிரைச் சார்ந்து அதற்கு முத்தி நிலையைத் தரும் என்று கூறும் பேதவாதம் பிழையுடையதே.

## சிவசமவாதி சங்கற்பம்

**11** **பாசமும் பசுவும் ஈசனும் என்றுஇம்**
**மூவகை உணர்வு தாம் முதன்மையவாய்ப்**
**பாச ஐம்புலன் தேசுற உணர்த்தப்**
**பசுத்தனி ஞானம் பொசித்திடும் அன்றே**
**இளைய ஞானம் பிரிவுற எரியாச்** **5**
**செந்தழல் தகுநெறி அந்தம் இல் உயிரும்**
**அறிவாய் ஒன்றும் அறியாது அன்றே**
**இவ்வாறு ஒழுகும் ஏனைய உயிர்க்கு**
**முன்னேன் தனது முதிர்ஒளி ஞானம்**
**அறியாப் பச்சைச் சிறுபுழுக் கவர்ந்த** **10**
**வண்டுஎன உயிரைக் கொண்டிடும் உயிர்அது**
**தன்னை நோக்கித் தான்அது வாகி**
**ஐவகைத் தொழிலும் மெய்வகை உணர்வும்**
**பிரியா வாறு பெற்றுத்**
**திரியாப் பெரியோர் திரட்சிசேர்ந் திடுமே.**

பதி பசு பாசம் எனப்படும் முப்பொருள்களுக்கும் அவ்வவற்றுக் குரிய அறிவுகள் தோற்றமில் காலம் தொட்டே உள்ளன. இவை முறையே பதி ஞானம் பசு ஞானம் பாச ஞானம் என்பன. பாச ஞானம் என்பது உலகத்துப் பொருள்களைப் பற்றிய அறிவு அது உயிரினிடத்தே நிகழும். பசு ஞானம் என்பது உயிர் கருவிகளின் வாயிலாகத் தெளிவுற அறிந்த பொருள்களை நுகர்ந்திடும் தனி அறிவாகும். இது சகல நிலையில் நிகழ்வது. கேவல நிலையில் பாச ஞானம் நீங்கப் பசு ஞானம் எரியாத நெருப்புப் போலச் செந்தழலாகக் கிடக்கும். அந்நிலையில் உயிர்கள் எதனையும் அறியாதிருக்கும். கேவலத்திலும் சகலத்திலும் மாறி மாறி உழலும் உயிருக்கு, இறைவன் தன்னுடைய ஞானமாகிய பதி ஞானத்தை வழங்கியருளுவான். ஒன்றுமறியாது கிடக்கும் பச்சை நிறமுடைய சிறு புழுவைக் குளவி ஒன்று எடுத்துச் செல்வது போல இறைவனும் உயிரை எடுத்துக் கொள்வான். அந்தப் புழு அந்தக் குளவியையே நினைத்துக் கொண்டிருந்து சில நாட்களில் குளவியின்

வடிவத்தோடே கூட்டை விட்டு வெளியேறுவது போல உயிரும் சிவ பெருமானையே நினைந்திருந்து சிவபெருமான் திருவடிகளைப் பெற்று அவன் ஆற்றும் ஐந்தொழில்களையும் தானும் ஆற்ற வல்லதாகி அவனுடைய மெய்யறிவைத் தானும் கைவரப் பெற்று. இதற்கு முன் இவ்வாறே வீட்டு நிலை எய்திய பெரியோர்களின் கூட்டத்தை விட்டு அகலாதிருக்கும்.

*சிவசமவாதி சங்கற்ப நிராகரணம்*

12 சேர்ந்த மும்மை வாய்ந்த ஞானமும்
ஒருகால் அன்றித் திரிவுற நிற்கில்
ஒண் பொருள் காணும் பண்பினுக்கு ஒருகால்
பரிதியும் மதியும் எரிதரு விளக்கும்
வேண்டல் இன்றே காண்தகு காலை 5

ஒன்றுஒன்று ஆகநின்று அறிவுறும் எனில்
அன்னியம் அறியா மன்உயிர் பொறிபுலன்
தானே அறியா தலைவர்க்கு உலகினை
ஆனு அறிவால் அறியவேண் டின்றே
கொழும் தழல் தகுமேல் அழுந்திடும் அவ்வினையில் 10

திரியாத் தலைவன் தெரியாத் தன்மைவந்து
எய்தல் ஆகா மெய்யுறு பொருட்கு
முன்னர்க் கீடம் தன்என எடுத்த
வேட்டுவன் இயல்பு கூட்டல் பெருதே
வண்டுஇறும்பு எடா உட்கொண்டு அது தனக்கு 15

மந்திர வாதம் தந்ததும் இலதே
எடுத்திடும் அதனால் அடுத்தது என்று அறையில்
கருமயிர்க் குட்டி இருசிறைப் பறவை
ஆயினது எடுத்த தாயர் சாற்றிலரே
பிறவிப் பேதத் துறை இவை கிடக்க 20

ஏயும் இத்திறன் ஆயும் காலை
யோகத் தகுதி ஆகத் தகுமே
ஞானம் இன்மை என்று ஓதுவது எவன்எனில்
உயிரும் உணர்வும் பயிலுதல் இன்றி
வேட்டுவன் உருவம் மென்புழு உணர்வு 25

கூட்டுத லால்உருக் கூடுத லானும்
முத்தியில் இறையில் பற்றுதல் இன்றித்
தன்னுரு அணைந்த பின் அதன் நினைவு
மாறுத லானும் ஊறுடைத்து அன்றே
ஈசன்து இயல்பு அருள்எய்து உயிர்இயற்றல் 30

பேசுதல் தவறுஎனப் பெருமறை அறைய
ஐந்தொழில் உயிரும் தந்திடல் தகுமே
ஆவதுஎன் முன்னாள் நாவலர் பெருமான்
பண்டுஒரு முதலை உண்ட மைந்தனை
வரவழைத்தனன் என்றாய் பிழைப்பு இலதுஅதூஉந் 35

தந்திட வேண்டும் என்றனர் அன்றே
இன்னவை கிடக்க முன்னவன் தன்மை
எய்தினர் எல்லாச் செய்தியும் செய்வர்
இரும்புஎரி எய்தித் தரும்செயல் தகவுஎனில்
பொருள்நிலை கிடக்க ஒரு திட்டாந்தப் 40

பேறே ஆயின் சீருக் கதுவிய
புனல்ஒரு புடைசேர் கனல்தகும் ஆயினும்
வேறுஒரு பொருளை நீறுஆக் கிலதே
நெருப்புஎனும் இதனின் உருத்தனி காட்டுக
அங்கியும் ஒன்றைத் தங்கி நின்று அல்லது 45

தன்தொழில் நடத்தாது என்றுஅறி இனிநீ
இரும்பு அனல் செய்தி தரும்பரிசு உள்தே
அதுஎன் ஓர் அலகை பொதித்தும் காலை
அதன் செயல் அனைத்தும் இவன் செயல் ஆமால்
அவன் இவன் ஆகில் இவன் அவன் செய்திக்கு 50

என் அவை என்னில் பின்னுறு செயலும்
அதன் செயல் அன்றி இவன்செயல் ஆகில்
இவன் செயல் பேயின்தன்செயல் ஆகி
இருந்த வாஎனத் தெரிந்திடவேண்டும்
தெரியாது ஆயின் புரியில் கடும் கனல் 55

எரிந்தது என்னும் இதுதகும் அன்றியும்
அவன்இவன் ஆகில் இவன் அவன் செய்தி
என்று செய்வான் ஒன்றிய மதத்தாய்
எல்லாம் அறிதல் செல்லாது உயிர்கள்
சிற்றறிவு எனும் இச் சொல் தவறு ஆகும் 60

என்பது என் அலகை தன்பதம் அடைந்தோர்
கொண்ட வாறு கண்டனம் என்னில்
மூங்கை அந்தர் உற்றுஓங்கிய குணம்குறி
செய்ததென் இன்னும் பவ்வம் உற்று அழுந்தினும்
காழி கொள்ளாது ஆழியில் அலைபுனல் 65

அதனால் கருத்து முதல்உளது ஆக
வேண்டும் அன்றே ஈண்டு இனி அமையும்
எல்லாம் எனும்இச் சொல்லால் படும்பொருள்
அனைத்தும் தாக்காத் தனிப்பரத்து உற்றவர்க்கு
எவ்வகை உணர்வு செய்வதென செப்புக 70

ஒன்றின் ஒன்றும் ஒன்றுது உலகில்
நின்ற போது உயிர் நேராம் அன்றே
முத்தி உற்ற நற்றவர் அவையிடைச்
சேர்வர் என்றனை சார்தரு முத்தி
சாலோக் கியமோ சாயுச்சியம் எனில் 75

பந்தம் உற்ற கந்துஅல கழித்த
அறிவினோடு அறிவு பிரியாப் பெற்றி
வேண்டும் என்றதற்கு ஈண்டுஇவர் இவ்வாறு
இருப்பர் என்பதற்கு உருத்தான் வேண்டும்
அண்ணலது அருளில் நண்ணினர் இருப்பினும் 80

சீவன் முத்தர்என்று ஓதினர் அகன்று
நீங்கியும் உருவம் நீங்காது ஆயின்
ஓங்கிய முத்தி யாவது என் உரைக்க
செடிஉடல் அணுகாக் குடிலை கொடுக்கும் என்று
ஓதினை நீயே பேதாய் பகட்டுஉரல் 85

ஒளிர்சினை முச்சித் தளிர்எனும் இதுதகும்
இச்சா ரூபம் நச்சினர் எனில்
மும்மலத்து ஏதும் இன்மையது அன்றே
இதுவளர் முத்திப் பதமென இயம்புவர்
ஈங்கு இவை நிற்க 90

பதி பசு பாசம் என்ற மூன்றனுக்கும் மூவகை ஞானங்கள் உள. அவை மூன்றும் ஒருங்கு நின்ற போதே பசுவாகிய உயிர் ஒன்றை அறியும் என்று உரைத்தாய். அதனை நுணுகிப் பார்த்தால், சூரியனும் வெண்ணிலவும் சுடர்விடும் விளக்கும் ஆகிய மூன்றின் துணைகொண்டே கண் ஒரு பொருளைக் காணுதல் கூடும் என்று கூறுவதைப் போன்று உள்ளது உனது வாதம். உண்மையில் இம் மூன்றில் ஏதாவது ஒன்றின் துணையைக் கொண்டே கண்ணால் பொருளைக் காண இயலும் என்பது கண்கூடு. பதி ஞானம், பசு ஞானம், பாச ஞானம் எனும் மூன்றும் தனித்தனியே நின்று பொருள்களை அறிதல் கூடும் என்பதும் பொருந்துமாறு இல்லை. ஏனெனில் அறிவற்ற பொருள்கள் ஆகிய பாசக் கூட்டம் உயிர்களை விட்டு வேறாக நிற்றலின் உயிர்களின் அறிவாகிய பசுஞானம் கருவிகளின் துணைகொண்டல்லது அவற்றை அறியமாட்டா.

நிலைபெற்ற உயிரின் துணையின்றி ஐம்பொறிகளும் அவற்றின் வழிவரும் பாச ஞானத்தை விளங்கிக்கொள்ள மாட்டா. ஏனெனில் ஐம்பொறிகள் அறிவற்றவை. முற்றறிவுடைய இறைவனுக்கோ புதிதாக ஒன்றை அறிய வேண்டுவதும் இல்லை. ஒவ்வொன்றாகச் சுட்டியறிய வேண்டுவதும் இல்லை. கருவிகள் அனைத்தும் நீங்கிய நிலையில் உயிர் எரியாத தணல் போன்று கிடக்கும் எனக் கூறினாய். தன்னைவிட்டு ஒருபோதும் நீங்காத இறைவனை அந்த நிலையிலும் உயிர் அறிவதில்லையே அதற்குக் காரணம் யாது?

உயிரும் இறைவனும் கூடி இருக்கும் முத்தி நிலைக்கு ஒன்றும் அறியாத புழுவைக் குளவி ஒன்று தூக்கிச் சென்று தன்வடிவாக்கின தன்மையைக் கூறினாய். இந்த உவமை பொருத்தமானது அன்று. இறைவன் உயிருக்கு மந்திர உபதேசம் வழங்குவது போலக் குளவி புழுவுக்கு உபதேசிப்பதில்லை. அறிவற்ற புழுவுக்கு வீடுபேற்றில் வேட்கை கொண்ட உயிரையும், உபதேசம் வழங்கி ஆட்கொள்ளும் இறைவனுக்குக் குளவியையும் எவ்வாறு உவமை கூற முடியும்?

குளவி புழுவைத் தீண்டி எடுத்ததே அதற்கு உபதேசம் ஆயிற்று என்று நீ கூறுவாயாகில், கம்பளிப் பூச்சி தன் வாயினால் நூற்ற நூலால் கூடு கட்டி, அதற்குள் சிலநாள் இருந்து பின்னர், பெரிய இறகுகளோடு கூடிய பறவையாய் மாறியதற்கு அதன் தாயின் உபதேசமே காரணம் என்று கூற வேண்டும். அப்படி யாரும் சொல்லுவதில்லை. இவையெல்லாம் பிறப்பின் வேறுபாடே தவிர வேறு அல்ல. பிறப்பின் வேறுபாடு வினைப்பயனுக்கு ஈடாக வாய்த்ததே அன்றி வீடு பேற்று நிலைக்கு ஒப்புமை ஆகாது. ஏனெனில், புழு குளவியானது போல, உயிர் சிவ வடிவம் பெற்றது என்னில் அது ஒரே வடிவாய சாரூப நிலையைக் குறிக்குமே யன்றி, சாயுச்சிய நிலையைக் குறிக்காது. யோகத்தின் பயன் சாரூபம் என்றும் ஞானத்தின் பயன் சாயுச்சியம் என்றும் பெரியோரால் கூறப்படுவதால் இது வீடுபேற்று நிலைக்கு ஒப்பாகாது. இந்த உவமை, குளவியின் வடிவைப் புழு அடைகிறது என்பதால் இந்தப் புழு இன்னொரு குளவியாகிறது என்பதேயன்றி வேறன்று. மேலும் புழு குளவியாகும் வரை அதனை நினைத்திருந்து பின்னர் மறந்து விடுதல் போல வீட்டு நிலையில் உயிர் இறைவனை மறந்திருக்கும் என்றாகித் தவறாய் முடியும். முத்தி நிலையில் சிவ பரம் பொருளோடு கூடி அதனையே நுகர்ந்து இன்புறும் என்பதற்கும் இந்த உவமை பொருந்தாது. புழு தன் உருமாறிக் குளவியானவுடன் அதன் உணர்வும் மாறுதல் அடையும். உயிரின் உணர்வு முத்தி நிலையிலும் மாறுபடாது. ஆகையினாலே இந்த உவமை பொருத்தமற்றது என்பது புலனாகும்.

இறைவனுடைய பேராற்றலை அவனுடைய அருளைப் பெற்ற உயிரும் பெறும் என்று கூறுவது பெருந்தவறு என்று மறைகள் எல்லாம் எடுத்து முழங்கவும் அதனை மறந்து விட்டு முத்தி பெற்ற உயிர் ஐந் தொழிலும் ஆற்றும் வல்லமை பெறுகிறது என்று நீ கூறுவது பெரும் பிழை. முன்னொரு காலத்தில் சுந்தர மூர்த்தி நாயனார் முதலையுண்ட பாலனை மீட்டும் படைத்துத் தரவில்லையா? குளமும் இல்லை. நீரும் இல்லை. முதலையும் இல்லை. ஆயினும் குளத்தைத் தோற்றுவித்து நீரால் நிரப்பி முதலையை வரவழைத்து அதனால் விழுங்கப்பட்ட பாலனை உரிய வளர்ச்சியோடு சுந்தர மூர்த்தி நாயனார் மீட்டுத் தந்த வரலாறு அருளாளர்கள் ஐந்தொழிலும் ஆற்றுவார்கள் என்பதற்குச் சான்றாகும் என்று கூறுகிறாய். அந்த வரலாற்றில் பிழை இல்லை. ஆனால் நீ அதனைப் புரிந்து கொண்டது தான் பிழையானது நாவலர் பெருமான் ''கரைக்கால் முதலையைப் பிள்ளை தரச் சொல்லு காலனையே'' என்று இறைவனை வேண்டினார். அவ்வேண்டுகோளை ஏற்று இறைவன் தான் பிள்ளையை மீட்டு அளித்தனனே தவிர, நம்பி ஆரூரரே அழைத்தார் என்று வரலாறு கூறவில்லை.

முத்தி நிலை எய்தியவர்கள் இறைவனின் தன்மையை எய்தி அவன் செய்யும் ஐந்தொழிலையும் தாமே செய்வர் என்பதற்கு, நெருப்பைச் சேர்ந்த இரும்பும் நெருப்பின் தன்மையை அடைந்து பிற பொருள்களைச் சுடுவது போல என்று உவமை கூறுகிறாய் அது சரியான எடுத்துக் காட்டு ஆயின். நெருப்போடு சேர்ந்து அதன் வெப்பத்தைப் பெற்றுக் கொதிக்கின்ற நீர் வேறு எந்தப் பொருளையும் சுட்டுச் சாம்பல் ஆக்குவதை யாரும் கண்டதில்லையே? நெருப்பைப் பற்றித் தான் பேச்சே தவிர நெருப்போடு சேர்ந்த பொருளைப் பற்றி நான் பேசவில்லை என்று நீ மறுப்பாய் ஆயின், நெருப்பு என்ற ஒரு தனிப் பொருளை எங்கேனும் கண்டதுண்டா? தீ என்பது ஏதாவது ஒரு பொருளைப் பற்றிக் கொண்டு தான் தன் செயலைச் செய்யுமே தவிர அது தனித்து நின்று இயங்க வல்லது அன்று. இந்த உண்மையை உணர்ந்து கொள்.

இரும்பும் தீயைச் சார்ந்து வெப்பத்தைப் பெறுமே யன்றி மற்றொரு பொருளை எரிப்பதுண்டோ? அங்ஙனம் இருக்க அதனை ஓர் எடுத்துக் காட்டாகக் கொள்வது எப்படி?

பேயால் பிடியுண்டவன் பேய் செய்த செயல்களை எல்லாம் செய்வது போல. அருள் பெற்ற உயிர்கள் இறைவனுடைய செயல்களைச் செய்யும் என்று நீ கூறுகிறாய். இந்த உவமையும் பொருத்தம் அற்றதே. உயிரை இடம் கொண்டு இறைவன் தன் செயல்களை ஆற்றுவதற்கு ஒரு காரணமும் இல்லை. அன்றியும் பேய் பிடித்தவன் அப்பேய் தன்னை விட்டு நீங்கிய பிறகு செய்கிற செயல்கள் எல்லாம் அவன் செயல்களே யன்றிப் பேயின் செயல்கள் ஆகமாட்டா. இதிலிருந்து பேயின் செயல் வேறு

பிடியுண்டவன் செயல் வேறு என்பதனைத் தெரிந்து கொள்கிறோம். அது போலவே இறைவன் செயல்கள் வேறு வீடு பேறு பெற்ற உயிர்களின் செயல்கள் வேறு என்பதனை நாம் புரிந்து கொள்ள வேண்டும். வைக்கோற் புல் எரிந்தது என்று நாம் சொல்லும் போது எரிக்கும் தன்மை வைக்கோலுக்கு உண்டு என்று நாம் கொள்வதில்லை. எரிக்கும் தன்மை நெருப்புக்கே உண்டு. அதனால் வைக்கோற் புல் எரிபட்டது என்று நாம் அறிந்து கொள்கிறோம். அவ்வாறே உயிரில் கலந்து நிற்கும் இறைவனின் செயல் இறைவனுக்கே உரிமை உடையது அல்லாமல் உயிர்க்கு உரியது அன்று.

இறைவன் முற்றறிவினன் என்பதும் உயிர்கள் சிற்றறிவுடையன என்பதும் அருள் நூல்களுள் வலியுறுத்திக் கூறப்பட்டுள்ளன. உயிரும் இறைவனைப் போல முற்றறிவு பெறும் எனும் கொள்கை தவறானது.

நீ கூறிய பேயும், பேயால் பிடியுண்டவனும் என்ற உவமை மற்றொரு வகையாலும் மறுக்கப்படும். ஊமையுமாய்க் குருடனுமாய் இருப்பவன் ஒருவனை, அவ்விரு குறைகளுமற்ற பேய் ஒன்று பிடித்துக் கொண்டாலும் அவனால் பேசவும் இயலாது, பார்க்கவும் இயலாது. ஆகவே இறைவனின் செயல் எல்லாம் அவன் அருள் பெற்ற உயிர்க்கும் உண்டு என்று சொல்லுவது பொருந்தாது எல்லையற்ற நீர்ப்பரப்பு உடைய கடலில் நாழியைக் கொண்டு சென்று முகந்தால் அது நாழிதான் கொள்ளுமே யன்றிக் கடல் முழுவதையும் கொள்ளாது. உயிருக்கு உள்ள சிற்றறிவு இறைவன் திருவருளோடு பொருந்தி மேலும் விளக்கம் பெறும் என்பதுதான் பொருந்துமே ஒழிய, உயிரின் சிற்றறிவே முற்றறிவாகி விடும் என்பது பொருந்தாது. எனவே உன் கொள்கையைக் கைவிடுக. எல்லாம் அறியும் என்னும் போது இறைவனை முழுவதுமாக அறியும் தன்மை சிற்றறிவுக்கு இல்லை என்பதனை மறத்தல் கூடாது.

முத்தி நிலையில் உயிரும் சிவமும் ஒன்றாகும் எனல் வேண்டா; சீவன் முத்தனாய் இருக்கும் நிலையிலேயே ஒன்றாகும் என்று கூறுவாய் ஆயின், அந்த நிலையிலும் உயிர் இறைவனை ஒத்திருக்கவில்லை. எனவே உயிரும் இறைவனும் என்றைக்கும் ஒரு தன்மையை உடையனவாக இருப்பன வல்ல.

முத்தி பெற்றவர் தம் போல் முத்தி பெற்ற பெருமக்களுடன் கூடி இருப்பர் என்று கூறினாய். அப்படிக் கூடியிருக்கும் நிலை சாலோக நிலை என்று கூறப்படுமே தவிர அதனை சாயுச்சிய நிலை என்று கூற இயலாது. பரமுத்தியாகிய சாயுச்சியத்தில் கட்டுக்களை விட்டு நீங்கி உயிர் இறைவனோடு பிரிப்பின்றி இருக்கும் என்று கூறப்படும் இலக்கணத்திற்கு இது மாறுபடும். வீடு பெற்றோர் அனைவரும் கூடி ஒருங்கே இருப்பர் எனக் கூறினால் அவர்களுக்கு உடல் உண்டு என்று ஆகும். அண்ணலின்

அருளால் அவர்கள் உடல்களை நண்ணியிருப்பினும் அவரைச் சீவன் முத்தர் என்றே கூறுதல் வேண்டும். அவ்வுடலோடு கூடிய முத்தியும் உயர்ந்த முத்தி என்று கூறுவதற்கில்லை. அவர்களின் உடல் அசுத்த மாயையினால் ஆனதன்று சுத்த மாயையால் ஆனது என்று நீ கூறினாய். இது எவ்வாறு இருக்கிறது என்னில் வேப்ப மரத்தில் அடி மரம் தான் கசக்கும் உச்சியில் உள்ள தளிர் கைக்காது என்பது போல் உள்ளது. அவ்வீடு பேற்றை அடைந்தவர்கள் தங்கள் விருப்பத்தினால் உடலை விரும்பி ஏற்றுக் கொண்டனர் என்றால் அவர்களுக்கு மும்மலங்களில் ஒன்றேனும் அகன்றதில்லை என்று ஆகும். எனவே நீ கூறும் முத்தி பத முத்தியே அன்றிப் பரமுத்தி ஆகாது.

மும்மை வாய்ந்த ஞானம் — பதிஞானம், பசுஞானம், பாச ஞானம் என மூன்று திறப்பட்ட ஞானம். ஒருகால் — ஒரு நேரத்தில், கீடம் — புழு. வேட்டுவன் — குளவி. இறும்பு — கம்பளிப்பூச்சி. கரு மயிர்க் குட்டி என்றதும் அது. நாவலர் பெருமான் — சுந்தர மூர்த்தி நாயனார். சீறுக்கதுவி — பொங்கி எழுகின்ற. அலகை — பேய். மூங்கை — ஊமை. அந்தர் — அந்தகர், குருடர். பவ்வம் — கடல். செடி உடல் - குறை உடைய உடம்பு. குடிலை — தூயமாயை, பகட்டுரல் — பெரிய உரல் போன்ற அடி மரம். முச்சி — உச்சி.

## சங்கிராந்தவாதி சங்கற்பம்

13 நீங்காது ஒளிர் உயிர் 90
விளக்கு என நிற்கும் அளப்புறும் அறிவின்று
இறைவற்கு ஏதும் அறிய வேண்டின்றே
மன்னும ஆன்ம சந்நிதி அளவில்
காந்த பசாசத்து ஏய்ப்ப வாய்ந்த
உயிர் உடல் இயக்கும் செயலுறு பூட்டைப் 95
பலவகை உறுப்பும் இலகிய தொழில் போல்
ஐம்பொறி புலன்கள் இன்புறும் அன்றே
இனைய வாயிலின் நிகழ்தரு பயன் அவை
அந்தக் கரணம் முந்தி உணர்ந்திடும்
இவை அகல்வுழி ஐம்பொறி புலன் நிகழாது 100
உயிர் நீங்கிடில் உடல் செயல் இலது அன்றே
இவ்வகை வினையின் செவ்விதின் நடத்தும்
பழமலம் நீங்க நிகழும் காலை
ஏற்றோர் முகஒளி தோற்றும் கலன் எனத்
தலைவனது அருள் உயிர் நிலவிடும் நிலவக் 105
காட்டத்து அங்கி மாட்டத் தங்கிய
தன்மையும் அளத்துப் புல்லையின் நீப்பும்

**போன்றது வாகித் தோன்றிடும் அதனால்**
**பசுகர ணங்கள் சிவகர ணங்கள்**
**ஆக மாறி அறிவும்** **110**
**ஏகமாம் உயிர் யான்எனது இன்றே**

ஒளிமிக்க விளக்கைப் போல் உயிர் நிலை பெறும். அது அறிவுடைப் பொருள் ஆயினும் பொருள்களை அளந்து அறியும் அறிவு அதற்கு இல்லை. எவ்வாறு எனில் விளக்கு ஒளியைத் தருவது எனினும் அதற்குக் காணும் திறன் இல்லை. அது போல என்க. இறைவனே முற்றறிவுடையவன். எனவே அவனால் அறிய வேண்டுவது ஒன்று இல்லை காந்தத்தின் முன்னாலே இரும்பு அசைவது போல உயிர் நிலை பெற்று நிற்க, அதனோடு பொருந்திய உயிர்வளி (பிராணவாயு) உடலை இயக்கும். நீர் இறைக்கும் ஏற்றத்தின் பல்வேறு அங்கங்களும் ஒன்று கூடித் தொழிற்படுவது போல ஐம்புலன்களும் ஒன்று கூடி உயிர் துய்ப்பதற்கு உதவி புரிகின்றன. இப் புலன்களை ஐம்பொறிகளும் பொருந்தி நடக்கும். இவற்றுக்கு முன்னே உட்கருவிகள் செயல்படுகின்றன. உட்கருவிகளின் உதவியில்லாமல் பொறி புலன்களால் ஆகும் பயன் ஏதுமில்லை. பிராணவாயு நீங்கினால் உடல் செயலற்றுப் போகும். இவ்வாறு உயிரின் முன்னிலையில் உடல் செயல்பட்டு வருகிறது உயிர் உடலினிடத்தே தங்கி வினைப் பயன்களைத் துய்த்து, அதனால் ஆணவ மலம் படிப்படியே தேய இருவினை ஒப்பும் மல பரிபாகமும் சத்தி நிபாதமும் நிகழும் காலத்து இறைவனுடைய திருவருள் உயிரினிடத்துத் தோன்றி விளங்கும். இது எத்தகையது எனில் கண்ணாடியின் முன் நின்று ஒருவன் அதனுள் பார்க்க அக் கண்ணாடிக்குள் அவன் முகம் தோன்றுவது போலாகும். இறைவனது அருள் இவ்வாறு உயிருள் நிலவும். விறகில் தோன்றிய தீ விறகையே அழிப்பது போலவும், உப்பளத்துக்குள்ளே வீசப்பெற்ற புல்லும் வைக்கோலும் தமது இயற்கைத் தன்மையை இழந்து உவராகிப் போவது போன்றும், உயிரின் பசு கரணங்கள் தம் இயல்பான தன்மையில் நீங்கிச் சிவகரணங்கள் ஆகும். உயிரின் அறிவும் முதல்வனின் அறிவோடு கூடி ஒன்றாகும். உயிருக்கு யான் எனது என்ற உணர்வுகளும் முற்றாக நீங்கி விடும்.

பசாசம் — இரும்பு. பூட்டை — ஏற்றம் இறைக்கும் கருவி. பழ மலம் - ஆணவ மலம். கலன் — கண்ணாடி. காட்டம் — விறகு. வை — வைக்கோல்.

## சங்கிராந்த வாதி சங்கற்ப நிராகரணம்

**14** **இன்று உனது உரையின் நன்றி உயிர்ஒளித்**
**தீபம் போலத் தாபம் தரில் இருள்**
**செறியும் தன்மை என் அறிவிலது ஆகின்**

ஒளிஎன உரைத்த தெளிவதற்கு ஏதாம்
சந்நிதி அளவில் மன்னும் செயல் உடல் 5

காந்தம் போல வாய்ந்தது என்ற
தன்மையும் உணராப் புன்மையை அன்றே
உயிர்உடல் இயக்கில் துயில் பெறும் காலைச்
செய்தது என மறுதி எய்து உயிர் பொறி புலன்
நடத்த ஆவியும் சடத்தன ஆயின் 10

பூட்டையில் பூணி கூட்டல் பெருதே
புலன்ஐம் பொறியில் நிலவிடும் என்றனை
அஞ்சும் ஒருகால் துஞ்சாது அறிதற்கு
அழிவுஎன் நற்றரு செழுமலர் இலைபலம்
கனிதருவது போல் இனையவை ஐந்தும் 15

ஒன்றுஒன்று ஆக நின்று அறிவுறும் எனில்
ஒன்றின் பயன்நனி ஒன்று அறியாதால்
இதுவே அல்லது கதும் என இருசெவி
இருகூற்று ஒருகால் தெரியாத் தன்மை வந்து
எய்தும் மறுதியும் மெய்யில் செயலும் 20

தனக்கு இலை ஒருவற்கு எனத்தெளி கிலையே
நோக்கும் முகஒளி நீக்காத் தான்எனக்
கவரும் தன்மை முகுரம் போலக்
கொடுத்தது கோடற்கு அடுத்தது உண்டு அன்றே
காட்டத்து அங்கி கூட்டக் கூடும் 25

இந்தனத்து இயற்கை வெந்தழல் தாங்கா
உப்பளத்து அடுத்த புற்பலா லங்கள்
சடத்த வேனும் கொடுத்தது கொள்ளும்
தன்மை உண்டுஉனக்கு இன்மையது அன்றே
அவம் உறு கருவி சிவமயமாம் எனக் 30

கூறினை தாகம் வேறுஉருக் கவராது
என்பது என் அவை முன் துன்பம் துடைக்கும்
திருவருள் மருவ உரிய என்னில்
அருள் உரு மாயா இருளின தாம்கொல்
சத்தப் பரிச ரூப ரச கந்தம் என்று 35

எத்திறத் தினதுஅருள் இயம்புக அன்றியும்
நிறைந்து நீயாய் நின்றனை யேனும்
மறைந்துஐம் புலனால் வாராய் என்றும்
கரணம் எல்லாம் கடந்தனை என்றும்
மரணம் ஐயைந்தின் அப்புறத்து என்றும் 40

முன்அருள் தலைவர் பன்னினர் எனவும்
இனையவை ஒழிய அறிகுவது எவ்வாறு
எலற சிற்கலிக்கு ஒன்றிய இன்பம்
கூறுதல் தரும்மருள் பேறினை அன்றே
ஏகம் உயிர் அறிவு ஆக மொழிந்தனை 45

இருபொருள் ஒருமை மருவியது இலதே
இவ்வகை கிடக்க மெய்வகை கேண்மதி

வெளிச்சத்தைத் தருகிற விளக்கைப் போல உயிர் விளங்குகிறது என்றாய் அப்படியாயின் அவ்வுயிர்க்கு அறியாமை எப்படி வந்தது? உயிர் விளக்கின் சுடர் போல் இருக்கிறது. சுடர் ஒளி எப்பொருளையும் காணும் தன்மை இல்லாதது. அதுபோலவே உயிரின் அறிவும் என்று நீ கூறினால் அறியாத ஒன்றை அறிவு என்று கொண்டது எவ்வாறு பொருந்தும்? காந்தத்தின் முன்னிலையில் செயல் படுகின்ற இரும்பினைப் போல் உயிர்வளியின் முன்னிலையில் உடல் செயல்படுகிறது என்று நீ உரைத்தாய். அதுவும் பொருளற்ற உவமையே. ஏனெனில் உறங்கும் போதும் பிராண வாயு செயல்படுகின்றது. ஆயினும் உடல் இயக்கம் இழந்து கிடக்கிறதே? அந்நிலையில் உடலைச் செயல் படுத்துகின்ற பிராண வாயு என்ன செய்து கொண்டிருந்தது? பிராண வாயுவே உட் கருவிகளைப் பற்றி ஐம்பொறிகளின் வழியே புலன்களை உணர்ந்து வரும். பிராண வாயு இல்லையெனில் உடல் செயலற்றுப் போகும். உயிர் எச்செயலும் செய்யாது, ஏதும் அறியாது என்று நீ கூறினாய். அவ்வாறு கூறியது உயிரைச் சடப் பொருளாகக் கொண்டதாகும். இதற்கு உவமையாக நீர் இறைக்கும் ஏற்றத்தை எடுத்துரைத்தாய். ஏற்றத்தின் வெவ்வேறு உறுப்புகளாக உட்கரணங்கள் ஐம்பொறிகள் ஆகிய வற்றைக் கொண்டால் அவை யாவும் அறிவற்றன. ஏற்றம் இறைப் பதற்கு அதில் எருதுகளைப் பூட்டுவர். அவை அறிவுடையன. அறிவுடைப் பொருள்கள் செயல்படும் திறன் உடையன. எனவே நீ கூறிய உவமை பொருத்தமற்றது என அறிக. அதுமட்டுமல்லாது ஐம்பொறிகளும் ஒரே நேரத்தில் நுகர்வதை நாம் கண்டதில்லை. ஒரு பொறியால் அறியப் பட்டதை மற்றொரு பொறி அறியாமலும், ஒன்று நுகரும்போது மற்றைய நான்கும் நுகராமலும் இருக்கின்ற தன்மைக்கு என்ன காரணம்? இதிலிருந்தே ஐம்பொறிகள் நுகர்வதில்லை என்பது தெளிவா கிறது அன்றோ? மரத்திலிருந்து மலர் இலை காய் கனி என்பன வெவ்வேறு காலத்தில் தோன்றுவது போல ஐம்பொறிகளும் ஒன்று ஒன்றாக அறியும் எனில் மலரே காய் ஆகிக் கனி ஆவது போல ஒரு பொறி நுகர்ந்ததனை மற்றொரு பொறி நுகராது இருப்பது ஏன்? ஒரே நேரத்தில் இரண்டு பேர் பேசினால் அவ்விருவர் பேச்சும் இரண்டு காதுகளாலும் கேட்கப் படுகின்றன. ஆனால் ஒன்றுதான் பதிகிறது. மற்றொன்று பதியாமல்

போகிறது. அது எதனால்? இவற்றிலிருந்து பொறிகள் வேறு உயிர் வேறு என்பதும் பொறிகளின் வாயிலாக வருவதை உயிரே அறியும் என்பதும் புலனாகிறது. உட்கரணங்களும் உடலும் உயிராலேயே செயல்படுகின்றன என்பதனைத் தெளிக.

கண்ணாடியில் பார்த்தவர்களின் முகம் தான் எதிரொளிக்கும். ஆனால் உயிருக்கோ திருவருளை முற்றிலும் வாங்கிக் கொள்ளும் ஆற்றல் இல்லை. ஏனெனில் உயிர் தளைப்பட்டிருப்பது. அது பக்குவப்படும் அளவும் திருவருளை ஏற்காது. விறகில் பற்றிக்கொண்ட தீ அதனை எரித்து விடுவது போல உயிரைத் திருவருள் அழித்துவிடும் எனில் அது பொருந்துவதில்லை உயிருக்குப் பேரின்பப் பேற்றினை நல்கும் திருவருளுக்கு விறகில் பற்றிய தீ உவமையாகாது உப்பளத்தில் விழுந்த புல்லும் வைக்கோலும் அறிவற்ற பொருள்களே ஆயினும் அவை உப்பளத்தில் உவர்த் தன்மையை அது கொடுத்தது போலவே பெற்றுக் கொள்ளும். அவ்வியல்பு உயிர்களுக்கு இல்லை.

சுத்த மாயையில் தோன்றிப் பசு கரணங்கள் சிவ கரணங்கள் ஆகும் என்று கூறினாய். அவற்றால் அருளுருவை ஏற்றுக் கொள்ள இயலாது. ஏனெனில் இக்கருவிகள் யாவும் இழிவுடையன. இக்கரணங் களும் உயிர்களின் துயரத்தைத் துடைப்பதற்கு இறைவனால் தரப்பட்டவையே. ஆதலால் திருவருளை மருவுவதற்கு உரியனவே என்னில் இறைவனின் அருள் உரு மாயையின் இருளோடு கூடுமோ? கூடாது. ஓசை ஊறு உருவம் சுவை மணம் என்ற இவற்றை நுகர்கின்ற பொறிகள் திருவருளைச் சற்றேனும் எட்ட முடியுமா? கூறுக.

இறைவனது அருள் பெற்ற அருளாளர்கள் அவனை நோக்கிப் ''பார்க்குமிடம் எல்லாம் நிறைந்து எங்கும் நீயே ஆய் நின்றனை எனினும் ஐம்புலனால் காண்பதற்கு எட்டாதவன்'' என்றும், ''கரணங்களை எல்லாம் கடந்து நின்ற கருணைக் கடல் நீயே'' என்றும் ''பற்றுக் கோடாக உள்ள தத்துவங்கள் இருபத்து ஐந்துக்கும் அப்பாற்பட்ட இறைவன்'' என்றும் பலபட இறைவனின் பெருமையை எடுத்துரைத் துள்ளார்கள். இவற்றை உனக்கு எடுத்துக் கூறியும் அதனை நீ புரிந்து கொள்ளுமாறு இல்லை ஆண் தன்மை இல்லாதோன் இன்பச் சுவையை அறிய இயலாதது போல, மருள் கொண்ட உனக்கு இவை விளங்கா. ஆன்மாவே சிவம் ஆகும் என்று சொன்னாய். வேறுவேறு இயல்புகளை உடைய இரண்டு பொருள்கள் ஒன்றாயின என்று சொல்லுவது பொருந்தாது. இது நிற்க, உனக்கு மெய் வகையைக் கூறுவேன். கேட்பாயாக.

இந்தப் பகுதியில் 'நிறைந்து நீயாய் நின்றனேயேனும் மறைந்து ஐம்புலனால் வாராய்' என்பது நக்கீர தேவ நாயனார் அருளிச் செய்த கைலை பாதி காளத்தி பாதி அந்தாதி என்னும் பனுவலிலிருந்து காட்டப்படும் மேற்கோள். இது பதினொன்றாம் திருமுறையில் இடம் பெறுகிறது.

> நிறைந் தெங்கும் நீயேயாய் நின்றாலும் ஒன்றின்
> மறைந்து ஐம்புலன் காணவாராய் — சிறந்த
> கணியாருந் தண்சாரற் காளத்தி ஆள்வாய்
> பணியாயால் என்னும் பரிசு.

அதை அடுத்துக் 'கரணம் எல்லாம் கடந்தனை என்றும்' என ஆசிரியர் கூறுவது மாணிக்கவாசகர் அருளிச் செய்த திருவாசகத்தில், திருக்கோத்தும்பியில் வருகின்ற பாடலிலிருந்து எடுக்கப்பட்ட மேற்கோளாகும்.

> கரணங்கள் எல்லாங் கடந்து நின்ற கறை மிடற்றன்
> சரணங்களே சென்று சார்தலுமே தான் எனக்கு
> மரணம் பிறப்பென்று இவை இரண்டின் மயக்கறுத்த
> கருணைக் கடலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ.

அதை அடுத்து 'ஐயைந்தின் அப்புறத்து என்றும்' என எடுத்துக் காட்டப்பட்ட பகுதி நான்காம் திருமுறையில் திருவாரூர்த் திருப்பதிகத்தில் திருநாவுக்கரசு நாயனார் பாடிய பதிகத்தில் காணப் படுகின்ற திருப்பாடல் ஆகும்.

> பையஞ்சுடர்விடு நாகப் பள்ளி கொள்வான் உள்ளத் தானும்
> கையஞ்சு நான்குடையானைக் கால்விரலால் அடர்த்தானும்
> பொய்யஞ்சி வாய்மைகள் பேசிப் புகழ் புரிந்தார்க்கு அருள்செய்யும்
> ஐயஞ்சினப் புறத்தானும் ஆரூர் அமர்ந்த அம்மானே.

இம் மூன்று அருளாளர் திருவாக்குகளையும் சுட்டிக்காட்டி எடுத்துக் கூறி அவை திருமுறைகளிலே இடம் பெற்றுள்ளன என்பதைத் ''முன்னருள் தலைவர் பன்னினர்'' என்ற சொற்களால் ஆசிரியர் உணர்த்துகிறார்.

பூட்டை — ஏற்றம். பூணி கூட்டல் — ஏற்றத்தில் எருதினைக் கட்டுதல். முகுரம் — கண்ணாடி. இந்தனம் — விறகு. பலாலம் — வைக்கோல். ஆகம் — உடல்.

போகிறது. அது எதனுல்? இவற்றிலிருந்து பொறிகள் வேறு உயிர் வேறு என்பதும் பொறிகளின் வாயிலாக வருவதை உயிரே அறியும் என்பதும் புலனுகிறது. உட்கரணங்களும் உடலும் உயிராலேயே செயல்படுகின்றன என்பதனைத் தெளிக.

கண்ணுடியில் பார்த்தவர்களின் முகம் தான் எதிரொளிக்கும். ஆனுல் உயிருக்கோ திருவருளை முற்றிலும் வாங்கிக் கொள்ளும் ஆற்றல் இல்லை. ஏனெனில் உயிர் தளைப்பட்டிருப்பது. அது பக்குவப்படும் அளவும் திருவருளை ஏற்காது. விறகில் பற்றிக்கொண்ட தீ அதனை எரித்து விடுவது போல உயிரைத் திருவருள் அழித்துவிடும் எனில் அது பொருந்துவதில்லை உயிருக்குப் பேரின்பப் பேற்றினை நல்கும் திருவருளுக்கு விறகில் பற்றிய தீ உவமையாகாது உப்பளத்தில் விழுந்த புல்லும் வைக்கோலும் அறிவற்ற பொருள்களே ஆயினும் அவை உப்பளத்தில் உவர்த் தன்மையை அது கொடுத்தது போலவே பெற்றுக் கொள்ளும். அவ்வியல்பு உயிர்களுக்கு இல்லை.

சுத்த மாயையில் தோன்றிப் பசு கரணங்கள் சிவ கரணங்கள் ஆகும் என்று கூறிஞய். அவற்ருல் அருளுருவை ஏற்றுக் கொள்ள இயலாது. ஏனெனில் இக்கருவிகள் யாவும் இழிவுடையன. இக்கரணங்களும் உயிர்களின் துயரத்தைத் துடைப்பதற்கு இறைவனுல் தரப்பட்டவையே. ஆதலால் திருவருளை மருவுவதற்கு உரியனவே என்னில் இறைவனின் அருள் உரு மாயையின் இருளோடு கூடுமோ? கூடாது. ஓசை ஊறு உருவம் சுவை மணம் என்ற இவற்றை நுகர்கின்ற பொறிகள் திருவருளைச் சற்றேனும் எட்ட முடியுமா? கூறுக.

இறைவனது அருள் பெற்ற அருளாளர்கள் அவனை நோக்கிப் "பார்க்குமிடம் எல்லாம் நிறைந்து எங்கும் நீயே ஆய் நின்றனை எனினும் ஐம்புலனுல் காண்பதற்கு எட்டாதவன்" என்றும், "கரணங்களை எல்லாம் கடந்து நின்ற கருணைக் கடல் நீயே" என்றும் "பற்றுக் கோடாக உள்ள தத்துவங்கள் இருபத்து ஐந்துக்கும் அப்பாற்பட்ட இறைவன்" என்றும் பலபட இறைவனின் பெருமையை எடுத்துரைத்துள்ளார்கள். இவற்றை உனக்கு எடுத்துக் கூறியும் அதனை நீ புரிந்து கொள்ளுமாறு இல்லை ஆண் தன்மை இல்லாதோன் இன்பச் சுவையை அறிய இயலாதது போல, மருள் கொண்ட உனக்கு இவை விளங்கா. ஆன்மாவே சிவம் ஆகும் என்று சொன்னுய். வேறுவேறு இயல்புகளை உடைய இரண்டு பொருள்கள் ஒன்ருயின என்று சொல்லுவது பொருந்தாது. இது நிற்க, உனக்கு மெய் வகையைக் கூறுவேன். கேட்பாயாக.

இந்தப் பகுதியில் 'நிறைந்து நீயாய் நின்றனையேனும் மறைந்து ஐம்புலனால் வாராய்' என்பது நக்கீர தேவ நாயனார் அருளிச் செய்த கைலை பாதி காளத்தி பாதி அந்தாதி என்னும் பனுவலிலிருந்து காட்டப்படும் மேற்கோள். இது பதினொன்றாம் திருமுறையில் இடம் பெறுகிறது.

நிறைந் தெங்கும் நீயேயாய் நின்றாலும் ஒன்றின்
மறைந்து ஐம்புலன் காணவாராய் — சிறந்த
கணியாருந் தண்சாரற் காளத்தி ஆள்வாய்
பணியாயால் என்னும் பரிசு.

அதை அடுத்துக் 'கரணம் எல்லாம் கடந்தனை என்றும்' என ஆசிரியர் கூறுவது மாணிக்கவாசகர் அருளிச் செய்த திருவாசகத்தில், திருக்கோத்தும்பியில் வருகின்ற பாடலிலிருந்து எடுக்கப்பட்ட மேற்கோளாகும்.

கரணங்கள் எல்லாங் கடந்து நின்ற கறை மிடற்றன்
சரணங்களே சென்று சார்தலுமே தான் எனக்கு
மரணம் பிறப்பென்று இவை இரண்டின் மயக்கறுத்த
கருணைக் கடலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ.

அதை அடுத்து 'ஐயைந்தின் அப்புறத்து என்றும்' என எடுத்துக் காட்டப்பட்ட பகுதி நான்காம் திருமுறையில் திருவாரூர்த் திருப்பதிகத்தில் திருநாவுக்கரசு நாயனார் பாடிய பதிகத்தில் காணப் படுகின்ற திருப்பாடல் ஆகும்.

பையஞ்சுடர்விடு நாகப் பள்ளி கொள்வான் உள்ளத் தானும்
கையஞ்சு நான்குடையானைக் கால்விரலால் அடர்த்தானும்
பொய்யஞ்சி வாய்மைகள் பேசிப் புகழ் புரிந்தார்க்கு அருள்செய்யும்
ஐயஞ்சினப் புறத்தானும் ஆரூர் அமர்ந்த அம்மானே.

இம் மூன்று அருளாளர் திருவாக்குகளையும் சுட்டிக்காட்டி எடுத்துக் கூறி அவை திருமுறைகளிலே இடம் பெற்றுள்ளன என்பதைத் ''முன்னருள் தலைவர் பன்னினர்'' என்ற சொற்களால் ஆசிரியர் உணர்த்துகிறார்.

பூட்டை — ஏற்றம். பூணி கூட்டல் — ஏற்றத்தில் எருதினைக் கட்டுதல். முகுரம் — கண்ணாடி. இந்தனம் — விறகு. பலாலம் — வைக்கோல். ஆக்கம் — உடல்.

போகிறது. அது எதனால்? இவற்றிலிருந்து பொறிகள் வேறு உயிர் வேறு என்பதும் பொறிகளின் வாயிலாக வருவதை உயிரே அறியும் என்பதும் புலனாகிறது. உட்கரணங்களும் உடலும் உயிராலேயே செயல்படுகின்றன என்பதனைத் தெளிக.

கண்ணாடியில் பார்த்தவர்களின் முகம் தான் எதிரொளிக்கும். ஆனால் உயிருக்கோ திருவருளை முற்றிலும் வாங்கிக் கொள்ளும் ஆற்றல் இல்லை. ஏனெனில் உயிர் தளைப்பட்டிருப்பது. அது பக்குவப்படும் அளவும் திருவருளை ஏற்காது. விறகில் பற்றிக்கொண்ட தீ அதனை எரித்து விடுவது போல உயிரைத் திருவருள் அழித்துவிடும் எனில் அது பொருந்துவதில்லை உயிருக்குப் பேரின்பப் பேற்றினை நல்கும் திருவருளுக்கு விறகில் பற்றிய தீ உவமையாகாது உப்பளத்தில் விழுந்த புல்லும் வைக்கோலும் அறிவற்ற பொருள்களே ஆயினும் அவை உப்பளத்தில் உவர்த் தன்மையை அது கொடுத்தது போலவே பெற்றுக் கொள்ளும். அவ்வியல்பு உயிர்களுக்கு இல்லை.

சுத்த மாயையில் தோன்றிப் பசு கரணங்கள் சிவ கரணங்கள் ஆகும் என்று கூறினாய். அவற்றால் அருளுருவை ஏற்றுக் கொள்ள இயலாது. ஏனெனில் இக்கருவிகள் யாவும் இழிவுடையன. இக்கரணங் களும் உயிர்களின் துயரத்தைத் துடைப்பதற்கு இறைவனால் தரப்பட்டவையே. ஆதலால் திருவருளை மருவுவதற்கு உரியனவே என்னில் இறைவனின் அருள் உரு மாயையின் இருளோடு கூடுமோ? கூடாது. ஓசை ஊறு உருவம் சுவை மணம் என்ற இவற்றை நுகர்கின்ற பொறிகள் திருவருளைச் சற்றேனும் எட்ட முடியுமா? கூறுக.

இறைவனது அருள் பெற்ற அருளாளர்கள் அவனை நோக்கிப் "பார்க்குமிடம் எல்லாம் நிறைந்து எங்கும் நீயே ஆய் நின்றனை எனினும் ஐம்புலனால் காண்பதற்கு எட்டாதவன்" என்றும், "கரணங்களை எல்லாம் கடந்து நின்ற கருணைக் கடல் நீயே" என்றும் "பற்றுக் கோடாக உள்ள தத்துவங்கள் இருபத்து ஐந்துக்கும் அப்பாற்பட்ட இறைவன்" என்றும் பலபட இறைவனின் பெருமையை எடுத்துரைத் துள்ளார்கள். இவற்றை உனக்கு எடுத்துக் கூறியும் அதனை நீ புரிந்து கொள்ளுமாறு இல்லை ஆண் தன்மை இல்லாதோன் இன்பச் சுவையை அறிய இயலாதது போல, மருள் கொண்ட உனக்கு இவை விளங்கா. ஆன்மாவே சிவம் ஆகும் என்று சொன்னாய். வேறுவேறு இயல்புகளை உடைய இரண்டு பொருள்கள் ஒன்றாயின என்று சொல்லுவது பொருந்தாது. இது நிற்க, உனக்கு மெய் வகையைக் கூறுவேன். கேட்பாயாக.

இந்தப் பகுதியில் 'நிறைந்து நீயாய் நின்றனையேனும் மறைந்து ஐம்புலனல் வாராய்' என்பது நக்கீர தேவ நாயனர் அருளிச் செய்த கைலை பாதி காளத்தி பாதி அந்தாதி என்னும் பனுவலிலிருந்து காட்டப்படும் மேற்கோள். இது பதினொன்றாம் திருமுறையில் இடம் பெறுகிறது.

> நிறைந் தெங்கும் நீயேயாய் நின்றாலும் ஒன்றின்
> மறைந்து ஐம்புலன் காணவாராய் — சிறந்த
> கணியாருந் தண்சாரற் காளத்தி ஆள்வாய்
> பணியாயால் என்னும் பரிசு.

அதை அடுத்துக் 'கரணம் எல்லாம் கடந்தனை என்றும்' என ஆசிரியர் கூறுவது மாணிக்கவாசகர் அருளிச் செய்த திருவாசகத்தில், திருக்கோத்தும்பியில் வருகின்ற பாடலிலிருந்து எடுக்கப்பட்ட மேற்கோளாகும்.

> கரணங்கள் எல்லாங் கடந்து நின்ற கறை மிடற்றன்
> சரணங்களே சென்று சார்தலுமே தான் எனக்கு
> மரணம் பிறப்பென்று இவை இரண்டின் மயக்கறுத்த
> கருணைக் கடலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ.

அதை அடுத்து 'ஐயைந்தின் அப்புறத்து என்றும்' என எடுத்துக் காட்டப்பட்ட பகுதி நான்காம் திருமுறையில் திருவாரூர்த் திருப்பதிகத்தில் திருநாவுக்கரசு நாயனர் பாடிய பதிகத்தில் காணப் படுகின்ற திருப்பாடல் ஆகும்.

> பையஞ்சுடர்விடு நாகப் பள்ளி கொள்வான் உள்ளத் தானும்
> கையஞ்சு நான்குடையானைக் கால்விரலால் அடர்த்தானும்
> பொய்யஞ்சி வாய்மைகள் பேசிப் புகழ் புரிந்தார்க்கு அருள்செய்யும்
> ஐயஞ்சினப் புறத்தானும் ஆரூர் அமர்ந்த அம்மானே.

இம் மூன்று அருளாளர் திருவாக்குகளையும் சுட்டிக்காட்டி எடுத்துக் கூறி அவ்வை திருமுறைகளிலே இடம் பெற்றுள்ளன என்பதைத் ''முன்னருள் தலைவர் பன்னினர்'' என்ற சொற்களால் ஆசிரியர் உணர்த்துகிறார்.

பூட்டை — ஏற்றம். பூணி கூட்டல் — ஏற்றத்தில் எருதினைக் கட்டுதல். முகுரம் — கண்ணாடி. இந்தனம் — விறகு. பலாலம் — வைக்கோல். ஆகம் — உடல்.

ஈசுவர் அவிகாரவாதி சங்கற்பம்

15 பஃறுளைக் கடத்தின் உள்விளக்கு ஏய்ப்ப
அறிவுள் தாகும் உருஉறும் உயிர்கள்
கண்ணால் ஓசையும் கந்தமும் கருத்
ஒண்ணாது என்னும் உணர்வு உடைமையினால்
அவ்வப் புலன்கட்கு அவ்வப் பொறிகள் 5

செவ்விதில் நிறுவிச் சேர்ந்தவை நுகரும்
மூல மலத்தின் பாகம் வந்து உதவுழி
இருள்தரும் இற்புக்கு ஒரு பொருள் கவரத்
தீபம் வேண்டும் ஆனவா போல
மோக மாமலம் போக ஞான 10

விளக்கு அரன் அருளால் துளக்குஅறப் பொருந்தி
நீர்நிழல் அனைய சீர்பெறு கடவுளைச்
சலம் இலன் ஆகிச் சார்ந்தவர்க்கு என்றும்
நலம்மிக நல்கும் நாதனை அணைந்து
பூழி வெம்மை பொருந்தாது உயர்ந்த 15

நீழல் வாழும் நினைவினர் போலத்
திருவடி நீழல் சேர்ந்து
கருவுறு துயரம் களைந்து இருந்திடுமே

பல துளைகள் உள்ள ஒரு குடத்துக்குள்ளே ஏற்றி வைக்கப்பட்ட விளக்கினைப் போன்று ஒன்பது வாயில்கள் உடைய உடம்புக்குள் உயிர் விளங்குகிறது. அது அறிவு உடையது. கண்ணினால் காண முடியுமே தவிர ஓசையைக் கேட்கவும் மணத்தை முகரவும் இயலாது என்ற உணர்வு உயிர்க்கு உண்டு. ஆதலினால் ஐந்து பொறிகளின் வழியே ஐம்புலன்களையும் முறையே நுகர்ந்து வரும். கண்ணுக்குச் சொல்லப் பட்ட இயல்பு மற்றப் பொறிகளுக்கும் பொருந்தும். இவ்வாறு உயிர்கள் நுகர்ந்து வரும் காலத்து ஆணவ மலம் பக்குவப்படும் காலம் வந்து சேரும். இருண்ட ஒரு வீட்டின் உள்ளே சென்று அங்குள்ள ஒரு பொருளை எடுப்பதற்கு விளக்கின் உதவி தேவைப்படுவது போல, ஆணவ மாகிய இருள் மலத்தில் உள்ள உயிர்களுக்கு இறைவனது அருளாகிய ஞான விளக்கு கேடின்றி வந்து பொருந்துகிறது. அப்போது நீர் வேட்கை கொண்டவன் நீர் நிலையினிடத்திலே போய் நீரை உண்டு வேட்கை தணிவதைப் போலவும், வெப்ப மிக்க சாலையில் நடந்து களைத்தவன் ஒருவன் மரத்தின் நிழலில் தங்கி வெப்பத்தைத் தணித்துக் கொள்வது போலவும் இறைவனுடைய கருணையின் கீழ் அடைக்கலம் பெறுவான். வேண்டுதல் வேண்டாமை இலாதவனாகியும், தன்னைச் சார்ந்தவர்களுக்கு மிகுந்த நலன்களை வழங்குபவனாகவும் விளங்குகின்ற

சிவபெருமான், தன்னுடைய திருவடி நிழற் கீழ் வந்து சேர்ந்த உயிர்களுக்கு, இறந்தும் மீண்டும் கருவினுட்பட்டுப் பிறந்தும் வருகின்ற துன்பங்களை மாற்றி இன்பத்தை வழங்கியருளுவான்.

இப்பகுதியில் 'சலமிலனுகிச் சார்ந்தவர்க்கு என்றும் நலமிக நல்கும் நாதனை' என்ற பகுதி நான்காம் திருமுறையில் நமசிவாயத் திருப்பதிகத்தில் திருநாவுக்கரசு நாயனுர் அருளிச் செய்த,

''சலம்இலன் சங்கரன் சார்ந்தவர்க்கு அல்லால்
நலம்இலன் நாள்தொறும் நல்கு வான்நலன்
குலம்இலர் ஆகிலும் குலத்துக்கு ஏற்பதோர்
நலம்மிகக் கொடுப்பது நமச்சி வாயவே.''

என்ற தேவாரத் திருப்பாடலை நினைவூட்டுவதாகும்.

பல்துளைக் கடம் — பல துளைகள் உள்ள குடம். கந்தம் — மணம். துளக்கு — கேடு, பூழி — புழுதி.

### ஈசுவர அவிகாரவாதி சங்கற்ப நிராகரணம்

16 இருந்ததுன் கேள்வி திருந்திடும் உயிர்கள்
அறிவின வாயில் பொறிபுலன் என்னை
மற்றவை பற்றி உற்று அறிந்திடுதலின்
அறிவுஎன வழங்கும் உயிர் என் உரைத்தல்
காணும் கண்ணினன் கைகொடு தடவிப் 5

பூணும் பொருளின் பெயர்பல புகறல்
என்னும் கிளவி தன்னேடு தகுமே
அவ்வவ புலன்கட்கு அவ்வவ பொறிகளைச்
செவ்விதின் நிறுவலின் அறிவுஎனச் செப்பினை
அறிவிலாமை கண்டனம் அணை புலற்குப் 10

பொறிகள் ஏவலின் அறிவோடு பொருந்தில்
கண்டதோர் பொறியால் கொண்டிட வேண்டும்
உதவியது ஒன்ருல் கதும்என இயற்றினர்
உண்டோ என்னில் கண்டனை மேல்நாள்
கடவுளில் கடிமலர் முடுகிய மதனன் 15

அங்கம் அனங்கம் தங்கிடக் கிடந்தது
வையின் திரளில் செய்ய சிறுபொறி
மாட்டி மூட்டியது அன்றே மீட்டும்
தேன்அமர் தவிசில் நான்முகன் உச்சி
அறுத்ததும் கருவி பொறுத்தோ அன்றே 20

ஈசன்து இயல்பு பேசுதல் தவிர்க
காழி மாநகர்க் கவுணியர் கடவுள்
ஞானம் ஆகிய நற்பதி கங்கள்
எழுதுறும் அன்பர்தம் இன்புறு மொழியால்
களிறுஎன அணைந்த கல்மனப் புத்தன் 25

முருட்டுச் சிரம்ஒன்று உருட்டினர் அன்றி
வாய்ந்த வாள்ஒன்று ஏந்தினர் இலரே
என்றதும் ஈர்வாள் கொன்றது என்பது போல்
தனித்துணை அருளால் துணித்தனர் என்ப
ஆதலின் வாயில் அளவினில் அறிதலின் 30

ஏதமில் அறிவுஉயிர்க்கு எய்துதல் இலதே
இருட்கு விளக்கு ஒன்று ஏந்தினர் போல
மருட்கு ஞானம் மன்னுதல் உளதே
என்றனை கருவிகள் யாவும் அசேதனம்
துன்றிய உயிரும் துரியத் தன்மையன் 35

ஆதலின் அந்தர் அனைவரும் கூடித்
தீதுஅற அருநெறி தெரியும் என்றற்றே
நீர்நிழல் அனைய சீர்பெறு கடவுளைச்
சேர்ந்தவர்க்கு இன்பம் வாய்ந்திடும் என்றனை
பாதவம் என்றும் சேதனம் இன்மையின் 40

இளைத்தோர் வம்மின் என்பதும் துன்பம்
விளைத்தோர் தம்வயின் வெறுப்பும் ஒன்று இலதே
பொடித்திடு கொப்புள் வெடித்திடும் பாதம்
வெய்யபூழியின் உள்ளுற அழுங்கி
ஆற்றுதல் இன்றி ஆறுஇயங்கு நர்முன் 45

தோற்றிடும் என்று சொல்லவும் இலதால்
இவ்வகை கடவுட்கு இயம்புதல் தவறே
பாச அஞ்ஞானப் பழிவழி ஒழிக
ஈசனது அருள்வழி இயம்புவன் கேள்மதி!

உன் கருத்து நன்று, அது நிற்க. திருத்தம் பெற முயலும் உயிர்கள். அறிவாக விளங்கும் என்றாய். அவ்வாறு எனில் அவ்வுயிர் அறிந்திடுவதற்குப் பொறிபுலன்களின் உதவி எதனால் வேண்டப் பட்டது? ஒன்றின் துணையால் மட்டிலுமே அறியக்கூடிய உயிரை அறிவு என்று கூறுவது பொருத்தமற்றது அன்றோ? பார்வை உடைய ஒருவன் பொருள்களை நேராகப் பார்த்து இது இன்னது என்று சொல்லுவானே தவிரக் கைகளாலும் விரல்களாலும் தடவிப் பார்த்து அப்பொருள்களை அறியமாட்டான். நீ உயிர் அறிவுடையது என்று கூறியதும் கையால்

தடவிப் பார்த்துப் பொருள்களின் பெயரைச் சொல்பவனைப் பார்வை உடையவன் என்று கூறுவதை ஒத்ததே. அவ்வாறு இல்லை, பொருளின் தன்மைக்கு ஏற்பப் பொறிகள் புலன்கள் ஆகியவற்றின் துணை கொண்டு அறிவது உயிரே ஆதலின் அதனை அறிவு என்று கூறலாம் என்று நீ கூறுவாயானால், அதுவும் தவறுடையதே. ஏனெனில் ஒரே பொறியைக் கொண்டு உயிர் பொருளின் தன்மை முழுவதையும் அறிவதில்லை. ஒவ்வொரு பொறியும் ஒரே பொருளின் இயல்பை உணர்த்திட ஐம் பொறிகளாலும் வந்த அறிவினை உயிர் அறிய முடிகிறதே அன்றித் தனித்த ஒரு பொறியால் உயிர் அறிவதில்லை. ஆதலின் உயிர் அறிவுடையது என்பது பொருந்தாது.

இன்ன செயலுக்கு இன்ன கருவிதான் வேண்டும் என்பது நியதி. அதற்கு மாறாக வேறு ஒன்றைக் கொண்டோ அல்லது கருவி என்ற ஒன்று இல்லாமலோ செயலாற்றிட முடியுமோ என நீ கேட்பின், அவ்வாறு நடைபெறுவது உண்டு. அவ்வாறு செய்ய வல்லவர் அறிவே வடிவானவர் என்பதை அறிவாயாக. முன் ஒரு காலத்தில் யோகத்தில் அமர்ந்திருந்த சிவபெருமானின் மீது மண மிக்க மலர்களைத் தொடுத்த மன்மதனது உடல் எரிந்து சாம்பலானது. வைக்கோல் இட்டுத் தீ மூட்டியதனால் அன்று. தன் திருக்கண் நோக்கினாலேயே மன்மதனை இறைவன் நீறாக்கினான். தாமரைமலரில் வீற்றிருந்த பிரமனின் சிரங்களுள் ஒன்றை இறைவன் அறுத்தது வாளினைக் கையில் ஏந்தி அன்று. இது ஈசனது இயல்பு எனக் கூறி நீ மறுக்கக் கூடும். சீர்காழிப் பதியில் அவதரித்த திருஞான சம்பந்தப் பெருமானது திருப்பதிகங்களை ஏட்டில் எழுதி வந்த அடியார் சம்பந்த சரணாலயர், யானை போல் தம்மை எதிர்த்து வந்த புத்தன் ஒருவனுடைய தலையைத் தானாக இற்று விழுமாறு உருட்டினாரே அன்றிக் கூரிய வாள் கொண்டு அன்று. இவ்வாறு கூறினும் சம்பந்த சரணாலயர் வாளைக் கொண்டு அறுக்க வில்லையே ஆயினும் இறைவன் திருவருளாகிய துணையைக் கொண்டே இந்தச் செயற்கரிய செயலைச் செய்தார் என்று அருளாளர்கள் கூறுவர். ஆதலின் பொறி புலன்களின் வாயிலாகச் சென்று பற்றுவதேயன்றி உயிருக்குக் குற்றமற்ற அறிவு இல்லை என்பது தெளிவு. அறிவிக்க அறியும் தன்மையே உயிரின் அறிவாகும்.

இருளைப் போக்கிக் கொள்ளுவதற்கு மாந்தர் விளக்கு ஏந்திச் செல்லுவர். அதுபோல உயிரும் ஆணவ மலம் பக்குவமடைந்த காலத்து இறைவன் திருவருளால் ஞானத்தைப் பொருந்தும் என்று கூறினாய். கருவி கரணங்கள் யாவும் அறிவற்றன. அவற்றைப் பொருந்தி அறிவ தாகிய உயிரும் தளைப்பட்ட நிலையில் துரியம் எனப்படும் பேருறக்கத்தில் ஆழ்ந்து கிடக்கும். இவ்வாறு இருக்க உயிர் இறைவனின் ஞான

விளக்கை ஏந்தி நன்னெறிப்படும் என்று நீ கூறியது குருடர்கள் பலரும் கூடிய வழி நெடுஞ்சாலையைக் கண்டு வழி நடந்தனர் என்பது போலப் பொருந்தாக் கூற்றாகும்.

குளிர்ந்த நீரையும் மரத்தின் தண்ணிய நிழலையும் போல வேண்டுதல் வேண்டாமை இலான் ஆகிய இறைவன் தன்னைச் சார்ந்தவர்களுக்கு அருள் பாலிப்பான் என்று நீ கூறினாய். அந்த உவமையும் பொருந்துவதன்று. மரம் அறிவற்ற பொருள். எனவே வழி நடந்து களைத்தவர்களைத் தன்னிடத்து வாருங்கள் என்று அது அழைப்பதில்லை. அதுபோலவே தன்னை வெட்டியவரிடத்து மரம் வெறுப்புக் கொள்வதும் இல்லை. கொடிய வெயிலில் நடந்து வெப்பமான புழுதியில் படிந்ததால் கால்களில் கொப்புளம் வெடிக்க வருந்தி வழி நடப்பவர்களைக் கண்டு மரம் அவர்களிடம் சென்று அவர்களின் துயரத்தைத் தீர்த்தது என்று இதுவரை கேள்விப்பட்டதும் இல்லை. எனவே நீரையும் நிழலையும் இறைவனுக்கு உவமை கூறுவது தவறாகும். பாச ஞானத்தால் கிட்டும் பழி மிக்க வழியை விடுத்து, இறைவனது அருள்வழி இத்தன்மையது எனக் கூறுவேன் கேட்பாயாக.

வையின் திரள் — வைக்கோல் கட்டு. அந்தர் — குருடர்கள். பாதவம் — மரம். பூழி — புழுதி.

## நிமித்தகாரண பரிணாமவாதி சங்கற்பம்

17 புவனம் யாவையும் புனிதனது உருவாம்
சிவமும் சத்தியும் எனத்தெளி அவற்றுள்
அசேதனம் என்றுஒன்று அன்றதற்கு இல்லது அது
சேதனன் நுகர்பொழுது இரண்டும் ஓர்திறத்தே
இதுவெனும் ஒன்றை அதுவாய்ப் படுத்துப் 5

பொதுமையில் நிற்கும் போதம் என்று அறிக
பொற்பணிப் பேதம் புரைவழி ஒருவழி
நற்பொனில் திகழ்வென நயப்பதுஒன்று அன்றால்
ஆவதும் ஆகாது ஒழிவதும் எனும் இப்
பாவகம் உண்மை பாரா தோர்க்கே 10

பாராதோர் எனப் பல்லுயிர் பகர்தலின்
ஆராய்ந்து உரைக்கில் அவைபிற அல்ல
பலபல பேதம் இலஎன் போரும்இல்
கண்ணினது ஒளியைக் கண்ணினது எனில்அது
திண்ணிய இருளில் செறிபொருள் தெரிதலும் 15

இன்மை மின்மினி எனஇரு கண்மணித்
தன்மை தானும் தாவிலது அதனால்
கண்ணினது உருவும் அதில்கதிர் ஒளியும்
நண்ணரும் சத்தி சத்தர்கள் நடிப்பே
உலகுஏழ் எனத்திசை பத்துஎன ஒருவன் 20

பலவாய் நின்ற படிஇது என்றும்
ஊனாய் உயிராய் உணர்வாய் என்றும்
மானக் கண்ணே மணியே என்றும்
தாமே தாமாய்ச் செய்தனன் என்றும்
நாமே சிவமாய் நண்ணினம் என்றும் 25

காயாய்ப் பழமாய்ச் சுவையாய் நுகர்வும்
ஓயாது உண்போன் தானே என்றும்
அறிவோன் தானும் அறிவிப் போனும்
அறிவாய் அறிகின்றோனும் அறிவுறும்
மெய்ப்பொருள் தானும் வியந்துஇது என்பபடும் 30

அப்பொருள் யாவும் அவனே என்றும்
தாய்தலைப் பட்டுஅங்கு ஒன்றாய்த்து என்றும்
ஏதம் அறநான் கெட்டேன் என்றும்
இன்னும் இன்னும் இறையோன் அளித்தவை
பன்னில் எண்ணரும் பான்மைத்து ஆதலின் 35

தருபொருள் கொள்பொருள் தருவோன் கொள்வோன்
ஒருபொருள் இவ்வியல் உவப்புஎன உணர்க
நுகர்பொருள் சத்துஇது நுகர்வோன் சத்தன் என்று
இகல்அறும் உணர்வுவந்து எய்துதல் அரிதே
நான்அவன் எனும் இது நவைவழி நல்வழி 40

தான்அவன் ஆகை இது சாயுச்சியம்
இத்திறன் தெளிய உய்த்திடும் அளவும்
யாதொரு வகையால் நீதியது ஆகத்
தான்அறி வழியே தலைநின்று என்றும்
ஊன்உயிர் சிவத்தில் ஒடுங்கிட நடத்தி 45

மூடும் முழுமலம் வீடும் காலை
கருவிகள் அளவில் புரிதரும் அறிவு
சாக்கிரம் கனவு நீக்கமில் சுழுனை
துரியம் என்றுஇவை பயில் தரும் அறிவு
துரியா தீதம் திரியாத் தன்மையில் 50

**இறையருள் உதவும் கறைஅற மாறி**
**அறிவே ஆகும் பிறியாக் கருவிகள்**
**நிறைமுதல் அவத்தையில் அறிவு இலது ஆகத்**
**துரியா தீதத் தோற்றம்**
**திரியா ததுநற் சிவகதித் திறனே. 55**

இவ்வுலகம் முழுவதும் புனிதனாகிய சிவபரம்பொருளின் திருவுருவ மாகும். அப்பரம் பொருளும் தன்னிலையில் சிவம் என்றும், வெளிப்பட்டு நிற்கும் நிலையில் சத்தி என்றும் இருதிறமாகக் கூறப்படும். இவை இரண்டும் ஒன்றைவிட்டு ஒன்று நீங்குவதில்லை. ஆதலால் உலகத்துப் பொருள் எதனையும் அறிவற்ற சடப் பொருள் என்று கூறுவதற்கு இல்லை. ஏனெனில் அறிவுடைப் பொருளே நுகர்கிறது. அது அவ்வாறு நுகரும்பொழுது அறியும் பொருளும் அறியப்படும் பொருளும் ஒரு தன்மையனவாகவே இருக்கும், எவ்வாறு எனில், அறிவு தான் சுட்டி அறிகின்ற பொருளை தன்மயம் ஆகும்படி செய்து பொதுமையில் நிற்கும் என்று அறிவாயாக

பொன்னும், அதனால் செய்யப்பட்ட அணிகலன்களும் காட்சியில் வேறுபட்டுத் தன்மையில் ஒன்றுவதுபோல உயிரும் உயிரால் காணப் பட்ட உலகும் என்று உவமை கூறப்படுவதும் உண்டு. பொன்னின் மாற்றே அதனால் செய்யப்பட்ட அணிகலன்களிடத்தும் இருத்தலால் அவ்விரண்டும் ஓர் இயல்பினவாகவே இருப்பினும் அவற்றை உயிருக்கும் உயிரால் உணரப்படும் பொருள்களுக்கும் உவமையாகக் கொள்வது ஏன்? என்ற கேள்வி எழும். உவமை சொல்லி ஒன்றினை விளக்க வேண்டிய தேவை பொருள்களின் தன்மையை உணராதவர் பொருட்டே ஆகும். எனவே இந்த உவமை பொருந்தும் என்றலும், இது பொருந்தாது என்றலும் உண்மையைத் தெளியாதவர்களால் கூறப்படுவனவையே என்று விடை பகர்தல் வேண்டும். உண்மையைத் தெளிந்தவர்கள் அதனைத் தெளியாதவர்கள் என்று வகைப்படுத்திச் சொல்வதனாலே உயிர்கள் பல என்பதனையும், அவை தனிப் பொருள் என்பதனையும். உணர்த்தவில்லையா என்று கேட்பின் ஆராய்ந்து பார்த்தால் உயிர் இறைவனில் இருந்து வேறுபட்டது அன்று என்பதை உணரலாம். வேறுபட்டது என்று கொள்வாரும் இல்லை.

கண்ணுக்கு ஒளி உண்டு. அது கண்ணிலிருந்தே தோன்றுவது என்று கூறினால் அது பொருந்துவதில்லை. ஏனெனில் காணும் தன்மை படைத்த கண்ணும் செறிந்த இருளில், பொருள்களைக் காண்பதில்லை, மின்மினிப் பூச்சி கூட இருளில் தன் ஒளியைக் காட்டும். ஆனால் இரண்டு கண்மணிகளும் சேர்ந்து இருளைக் கடிவதில்லை, அதனால் கண்ணும் கண்ணுக்குத் துணை நிற்கும் ஒளிக்கதிரும் ஒப்பற்ற சக்தி சிவம் ஆகியோரின் நாடகமே என அறிக.

ஏழு உலகாகவும், திசைகள் பத்தாகவும் இறைவன் ஒருவனே பல வாகி நின்றான் என்றும், ஊனுயும், உயிராயும், உணர்வாயும் இறைவனே நின்றான் என்றும், கண்ணே, கண்ணின் கருமணியே என்றும், உயிர்கள் தாமே தானாகுமாறு இறைவன் இயற்றினன் என்றும், காயாகியும் பழமாகியும், பழத்தின் சுவையாகியும், சுவையை நுகர்வோனாகியும் இறைவனே நின்றான் என்றும், அறிவோன் ஆகியும், அறிவிப்போன் ஆகியும், அறிகின்ற அறிவேயாகியும் வியந்து கூறுமாறு எல்லாப் பொருள்களும் இறைவனே என்றும், தாயாகித் தலைப்பட்டு அங்கு ஒன்றாகும் என்றும், குற்றம் கெடுமாறு நான் கெட்டேன் என்றும், இவ்வாறு பல இடங்களிலும் அருளாளர் வாக்குகளில் கூறப்பட்டுள்ள வற்றிலிருந்து உயிர்களும் பரம்பொருளும் வேறல்ல என்பதை உணர்க.

எனவே கொடுக்கப்படுகிற பொருள் என ஒன்றும், கொடுப்போன் என ஒருவனும், கொள்வோன் என்று மற்றொருவனும் ஆகிய இவை வேறுபாடு உடையன அல்ல. யாவுமே இறைவன். இவ்வாறு வேறு படுத்திக் காட்டுவது அவனுக்கு ஒரு மகிழ்ச்சி என்று உணர்வாயாக. நுகரப் படுகிற பொருள்கள் யாவும் சத்தியின் வடிவே. அவற்றை நுகர்வோன் சத்தனாகிய இறைவன் என்னும் தெளிவான உணர்வு வந்து கைகூடுதல் அரிது. நான் வேறு இறைவன் வேறு என்று எண்ணுகிற இருமை உணர்வு குற்றமுடையது. குற்றமற்ற உணர்வு என்பது நான் என்ற உயிர் இல்லை என உணர்ந்து சிவனே ஆதல் என்கிற ஒருமை உணர்வே, பரமுத்தி எனப்படும் சாயுச்சியம் ஆகும். இத்திறன் உறுதியாகும் அளவும், அம் முத்திக்குச் சாதனமாக அமைகிற யாதானும் ஒரு சாதகத்தை மேற்கொண்டு எப்போதும் ஊனும் உயிரும் சிவபெருமானிடம் ஒடுங்கி இருக்குமாறு ஒழுகி வருதல் வேண்டும்.

மேற்கூறியவாறு ஒழுகுவதனால் உயிரின் மன்றித்திருக்கிற ஆணவம் உயிரைவிட்டு நீங்கும் காலம் குறுகும். அப்போது உயிருடன் கருவிகள் கூடியும் நீங்கியும் வருவதால் நிகழும் நனவு, கனவு, உறக்கம் பேருறக்கம் என்பனவற்றில் சென்று சென்று மீளும் அறிவு உயிர்ப் படங்கல் என்னும் துரியாதீத நிலையை எய்தும். அந்நிலையில் இறைவனின் திருவருள் உயிரைப் பொருந்தும். சகல நிலையில் உயிர்களைப் பொருந்தியிருந்த கறையாகிய ஆணவ மலம் மாறும். உயிரை விட்டு நீங்காத முப்பத்தாறு கருவிகளும் நனவு நிலையில் அருளோடே பொருந்தி துரியாதீதத் தோற்றத்தைக் கண்டு அதனின்றும் திரியாது நிற்கும். அந்த அருள் விளக்கமே நல்ல சிவகதி எனப்படும்.

மேற்கண்ட பகுதியில் நிமித்த காரண பரிணாமவாதியால் மேற் கோளாக எடுத்துக் காட்டப்பட்ட திருமுன்ற அருட்பாடல்கள் கீழ் வருவன. ஒவ்வொரு பாடலிலும் உள்ள பகுதிகளை நிமித்த காரண

பரிணாமவாதி தன் கருத்தை வலியுறுத்துவதற்குப் பயன்படுத்துகிறான். ஆயினும் அப்பாடல்களுக்கு அவன் கொண்ட பொருள் பொருந்தாது என்பதும் சைவ சித்தாந்தத்தின் படி அத்திருப் பாடல்களுக்கு உரிய நேர்மையான பொருளும், இப்பகுதியின் நிராகரணத்துள் ஆசிரியரால் எடுத்துக் காட்டப்பெறுகிறது.

நிலம்நீர் நெருப்புஉயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனாய மைந்தனோடு எண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்
உலகுஏழ் எனத்திசை பத்தெனத்தான் ஒருத்தனுமே
பலவாகி நின்றவா தோணோக்கம் ஆடாமோ

(திருவாசகம் — திருத்தெள்ளேணம்)

ஊனாகி உயிராகி அதனுள் நின்ற
உணர்வாகிப் பிறவனைத்தும் நீயே ஆனாய்
நானேதும் அறியாதே என்னுள் வந்து
நல்லனவும் தீயனவும் காட்டா நின்றாய்
தேனாரும் கொன்றையனே நின்றி யூராய்
திருவானைக் காவிலுறை சிவனே ஞானம்
ஆனாய்நின் பொற்பாதம் அடையப் பெற்றால்
அல்லகண்டங் கொண்டடியேன் என்செய்கேனே

(அப்பர் — திருத்தாண்டகம்)

திருவேஎன் செல்வமே தேனே வானோர்
செழுஞ்சுடரே செழுஞ்சுடர்நற் சோதிமிக்க
உருவே என் உறவே ஊனே ஊனின்
உள்ளமே உள்ளத்தின் உள்ளே நின்ற
கருவே என் கற்பகமே கண்ணே கண்ணில்
கருமணியே மணியாடு பாவாய் காவாய்
அருவாய வல்வினைநோய் அடையா வண்ணம்
ஆவடுதண் துறையுறையும் அமரர் ஏறே. — அப்பர்

பத்திப்பேர் வித்திட்டுப் பரந்தஐம் புலன்கள்வாய்
பாலே போகா மேகாவாய்ப் பகையறும் வகைநினையா
முத்திக்கே விக்கத்தே முடிக்குமுக் குணங்கள் வாய்
மூடா வூடா நாலந்தக் கரணமும் ஒருநெறியாய்ச்
சித்திக்கே உய்த்திட்டுத் திகழ்ந்தமெய்ப் பரம்பொருள்
சேர்வார் தாமே தாமாகச் செயுமவன் உறையுமிடம்
கத்திட்டோர் சட்டத்தங் கலந்திலங்கு நற்பொருள்
காலே ஓவா தார்மேவும் கழுமல வளநகரே

— திருஞான சம்பந்தர்

அவமாய தேவர் அவகதியில் அழுந்தாமே
பவமாயம் காத்தென்னை ஆண்டுகொண்ட பரஞ்சோதி
நவமாய செஞ்சுடர் நல்கும் பண்டை நாம் ஒழிந்து
சிவமாய வாபாடித் தெள்ளேணம் கொட்டாமோ.

— திருவாசகம் - திருத்தெள்ளேணம்

தீயாகி நீராகித் திண்மையாகித்
திசையாகி அத்திசைக்கோர் தெய்வமாகித்
தாயாகித் தந்தையாய்ச் சார்வு மாகித்
தாரகையும் ஞாயிறும் தண் மதியு மாகிக்
காயாகிப் பழமாகிப் பழத்தில் நின்ற
இரதங்கள் நுகர்வானும் தானே யாகி
நீயாகி நானாகி நேர்மை யாகி
நெடுஞ்சுடராய் நிமிர்ந்தடிகள் நின்ற வாறே

(அப்பர் — திருத்தாண்டகம்)

அறிவானும் தானே அறிவிப்பான் தானே
அறிவாய் அறிகின்றான் தானே - அறிகின்ற
மெய்ப்பொருளும் தானே விரிசுடர்பார் ஆகாசம்
அப்பொருளும் தானே அவன்

(காரைக்கால் அம்மையார் — அற்புதத் திருவந்தாதி)

மோதலைப் பட்ட கடல்வயிறு உதித்த
முழுமணித் திரளமு தாங்கே
தாய்தலைப் பட்டுஅங்கு உருகி ஒன்றாய
தன்மையின் என்னைமுன் ஈன்ற
நீதலைப் பட்டால் யானும்அவ் வகையே
நிசிசரர் இருவரோடு ஒருவர்
காதலிற் பட்ட கருணையாய் கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே

(கருவூர்த் தேவர் — திருவிசைப்பா)

வான்கெட்டு மாருதம் மாய்ந்து அழல்நீர் மண் கெடினும்
தான்கெட்டல் இன்றிச் சலிப்பறியாத் தன்மையனுக்கு
ஊன்கெட்டு உயிர்கெட்டு உணர்வுகெட்டு என் உள்ளமும் போய்
நான்கெட்ட வாபாடித் தெள்ளேணம் கொட்டாமோ

(திருவாசகம் — திருத்தெள்ளேணம்)

நவை வலி— குற்றமுள்ள வலி. சுழுநை—உறக்கம். அசேதனம்—அறிவற்றது.

## நிமித்த காரண பரிணாமவாதி சங்கற்ப நிராகரணம்

18 திறம்பெற நீஇங்கு அறைந்தமை கருதில்
புவனம் யாவையும் புனிதனது உருஎனில்
அவன் முதற் காரணம் அன்றும் என்னில்
நிமித்த காரணம் நிகழ்த்துக எனநீ
அவனே காரணம் அனைத்தும் என்று அறைந்தனை 5

மண்தனிக் குலாலன் தண்டசக்க ராதி
காரணம் மூன்றும் ஓர்போர் அணைந்ததுஇத்
தாரணி அதனில் கண்டது சாற்றுக
அத்தன் இயற்றும் இத்தொழில் பிறர்க்கோ
தனக்கோ வினை எனக்கு ஈது இயம்புக 10

வீண்எனில் பித்தர் மாண்பு அறும் தொழில்போல்
தலைமையும் அறிவும் இலதுஎன இகழ்வர்
தனக்குஎனில் அஃதும் இசைப்பது ஒன்று அன்றே
தன்போல் அறிஞரும் தலைவரும் இலரால்
மின்போல் நிலைமையை வேண்டலும் பழுதே 15

பிறர்க்கு எனில் பிறரும் பிறர்க்கு ஆம் பொருளும்
பொருட்கு அமை கருவியும் அதற்குஉபா தானமும்
செய்கையும் என்று ஓர் ஐவகைத் தானொடு
மாறுச் சைவர் கூறுர் என்றால்
நின்சித் தாந்தம் அவசித் தாந்தம் 20

என்சித்து ஆன்ற அசித்தை மற்று ஈனுது
அசித்து இலது என்னில் வசித்தது என்உலகில்
உலகா யதனும் பூதக் கூட்டம்
சலம்மேல் கொப்புள் தகும்என்ச் சாற்றினன்
தீய கருமச் சீனர் சாவகர் பிறர் 25

ஞேயம் இல்என நிகழ்த்தினர் இலரே
காண்டல் விரோதம் நிற்பிறர் கணித்திலர்
ஈண்டுஉனது உரைக்கும் மற்று யார்கரி உடனும்
சித்தோ சித்தின் சேர்வால் சித்து எனில்
கடபடாதியும் உடல் கண் சிந்தவு என் 30

தாபர உயிர் போல் தனுஒழிந்து அவற்றுள்
மேவிய உணர்வு வீரவிடும் என்னில்
சடத்துஉயிர் போல் எனச் சாற்றினை ஆகலின்
உடற்கு உயிர் இறைவ ஒழிந்து உண்டு அன்றே
தருதிட் டாந்தமும் தாட்டாந் திகமும் 35

ஒருபொருள் ஆகில் உவமை பெறாதே
ஒன்றே ஆகில் உடற்கு இறை தாபரத்து
ஒன்றிய நிலையில் விசேடம் என் உரைக்க
பூதச் சேர்வைப் பேதம் என்று அறையில்
சேர்வைப் பேதம் என்கொடு செப்புக 40

கருமத்து அளவில் வரும் எனில் பித்தர்
உரையில் திகழும் உணர்வுஒழிந் தனையே
கருமம் செய்வோள் கடவுள் அன்று உடலும்
மருவி நின்று இருவினை வாளா நுகரா
கடவுளும் உடலின் கண்படல் துஞ்சல் 45

இடர்நலம் உறுதல் இறங்குதல் ஏறுதல்
எவ்வகை யேனும் செய்கை இன்று ஆதலும்
பலகலை உலகில் நிலவுத லானும்
எண்ணரும் பொருளும் இரவியும் ஒழியக்
கண்என ஒன்று காண்கையி னாலும் 50

பாசப் பகுதியும் ஈசனும் ஒழியப்
பசுவும் உண்டு என்று இசைய வேண்டின்றே
இதுஎனும் ஒன்றை அதுவாய்ப் படுத்துப்
பொதுமையில் நிற்கும் மாயையின் பொற்பு எனப்
பொற்பணி யாவும் பொன்னும் தன்மையின் 55

நிட்கள சகளத் திருவுரு நிலையும்
ஈசனே எனப் பேசுவர் அன்றி
அருவுருவாகி வரும் உலகு என்னில்
அனைத்தும் மாயை எனத்தெளி கிலையே
ஆவதும் ஆகாது ஒழிவதும் இலது எனும் 60

பாவகம் உலகாய்த் தனது பான்மை
கள்கொலை வெகுளி காமம் களவுகள்
உட்படும் இவைவிட மொழியாதார் இலர்
சோம பானம் சுராபானங்கள்
ஆம்என மறைகள் ஆர்செவிப் பறைந்தன 65

மறையோர் புலைச்சியை மருவும் என்பது
முறையோ எனில் அது புகழ்மொழி என்னில்
சாதி பேத நீதிநீ தவறினும்
மேதியை ஏறு விழையா விரும்பும்
கண்ணினது உருவும் அதில் கதிர் ஒளியும் 70

நண்ணரும் சத்தின் நாடகம் எனில் அதற்கு
ஏதுவும் பயனும் ஓத வேண்டும்
நின்மொழி விரோதமும் நீடு உலகு இயற்கையும்
தன்மசாத் திரமும் சகலமும் என் செயும்
உலகுஏழ் எனஇறை பலவாம் தன்மை 75

கடமொடு சாரவம் கலசம் ஆதிகள்
அடல்உறு குயவன் ஆயினன் என்றல்
தானே ஆகா அவைதான் ஆகான்
ஆயினன் என்பது ஆக்கினன் எனவே
ஆனுய் என்பது அனைத்தும் அவ்வகை 80

தான் ஆகாமையைச் சாற்றிடும் என்க
தாமே எனும்இத் தனி ஏகாரம்
அழிந்திலர் அதுவே ஆய்த்திலர் அதுவிட்டு
ஒழிந்திலர் பிரிவிலர் எனும்இவை உணர்த்தும்
காயும் பழமும் சுவையும் நுகர்வது 85

ஆயவன் தானும் அவன் முதற்று என்னும்
அகிலமும் தெளிய அறிவோன் தானும்
அகிலமும் அறிஞரை அறிவிப்போனும்
அறிஞர்க்கு அறிவாய் அறிகின் றோனும்
அறிவிற்கு அறிபொருள் ஆவோன் தானும் 90

அகிலமும் மேனி ஆனவன் என்னும்
தருபொருள் கொள் பொருள் தருவோன் கொள்வோன்
ஒருபொருள் ஆயின் உவப்பு உண்டு என்க
நுகர்வோன் தனக்கு நுகர்பொருள் வேண்டிற்று
இகல்அறக் கிடையாது இருந்தது என் நிரயமும் 95

வேண்டா ராயினும் மெய்யுறு வியாதிகள்
ஈண்டாது ஒழியாது இறைக்கு இவை ஈடுஅல
சத்தியும் சிவமும் தாமே நுகரும் என்று
இத்திறன் உணர்வு வந்து எய்துவது எவர்க்கோ
தமக்கே என்னில் தாம் உணராமையும் 100

அமைப்பு அறஉணர்தலும் அவர்க்கு அடைவு அன்றே
நானும் அவனும் நவையும் நலனும்
தான்அவன் ஆகையும் நின் சாதனத்தில்
சகயோ கத்தைச் சாயுச் சியம்எனப்
பகர்வது பதிபசு பாசத் தவர்க்கே 105

யாதுஒரு வகைஎன ஓதியது இறைநூல்
சொன்னவற்று ஒன்றுஅன்று என்னில் வீடு எளிதே
தான் அறி வழியே தலைப் பொருள் பிடிக்கில்
மேல்நிகழ் பலமும் வீடுஅளித் திடுமே
நிலையாக் கருவியை நிலையாக் கருதிப் 110

புலையாடுதலும் உலகா யதன்பொருள்
குட்டிமம் இன்றிநற் கோலம் எழுதுதல்
இட்டம தாயில் கருவியும் இடங்களும்
கருத்துற உரைக்கத் தெரித்திடும் அதீதத்து
அறிவொன்று இல்லோர்க்கு இறைஅருள் உதவுதல் 115

பிறிவு அறிவு அரிய செறி இருள் இடத்து ஓர்
அந்தகர் காண வந்தோர் எம்மை
நீவிரும் காண வேண்டும் என்றுஆங்கு
எடுத்து ஓர் தீபம் கொடுத்ததை ஒக்கும்
இச்செயற்கு இறைவன் கொச்சையன் அன்றே 120

கருவி வசத்தில் தெரிவுறக் காண
வேண்டுநர் இலரால் ஈண்டு அறிவு யாவும்
சிவமே என்று செப்பினை அவம்உறு
பொறிபுலன் அறியா அறிவது பிரமம்
என்றோர்க்கு உன்போல் இடர்ப்படல் இலதே 125

ஏற்றம் கருவி இருபதோடு இரண்டும்
போற்றும்ஐந்து அவத்தையும் புகல்திரி மலமும்
ஈசனும் உயிரும் பேசினை அஃது ஒழிந்து
ஒன்றே ஆகும் என்றநின் இயல்பு
தாயர் மனைவியர் தாதியர் தவ்வையர் 130

ஆயவர் எவரையும் ஓர்மையில் காணும்
கோகழி தூர்த்தர் கொடுந்தொழில் தகுமே
ஆக மற்று அதன் அருள்நிலை தன்நிலை
ஏக நாயகன் ஆகிய இறைநிலை
நாசம் இல் பாசம் வீசிய வியன் நிலை 135

இனையவை ஒன்றும் நினைவினும் இன்றி
உண்டுஎனும் உணர்வில் கண்டது கருதில்
இழுக்கு எனும் புலன்வழி ஒழுக்கமும் அதுவாய்க்
கொண்டு பண்டையில் எண்தரு மடங்கு
வந்தவா செய்யத் தந்ததை அன்றே 140

புன்மைகள் நீங்க உண்மை கேண்மதி!

திறம்பட நீ கூறியவற்றை ஆராய்ந்து பார்க்கலாம். இவ்வுலகம் முழுவதும் இறைவனது திருவடியிலிருந்து தோன்றியது என்றாய். அவ்வாறாயின் இறைவனே இவ்வுலகுக்கு முதற் காரணம் என்று கொள்ள வேண்டும். அவன் முதற் காரணம் அல்லன் ஆகின் இறைவனை நிமித்த காரணன் என்று கொள்ள வேண்டும். ஆனால் நீயோ இறைவனே உலகுக்கு முதற் காரணம் துணைக் காரணம் நிமித்த காரணம் என்று கொள்ளுகின்றாய். ஒரு குடம் வனையப்படுவதற்கு மண் முதற் காரணமாகிறது. தண்டு சக்கரம் ஆகிய கருவிகள் துணைக் காரணங்கள் ஆகின்றன. வனைகின்ற குயவன் நிமித்த காரணன் ஆகிறான். இவ்வாறு மூன்று காரணங்களும் தனித் தனியாகக் காணப்படுவதேயன்றி மூன்றும் ஒன்றாக இருப்பது இவ்வுலகில் காணப்படவில்லை. அவ்வாறு மூன்றும் ஒன்றாக இருப்பதை நீ கண்டாய் எனின் அது எது என்று எடுத்துரைப்பாயாக.

தலைவனாகிய இறைவன் இயற்றுகின்ற ஐந்தொழிலும் பிறர்க்காகவா? தனக்காகவா? அல்லது வீணுக்கா? என்பதனை எனக்குக் கூறுவாயாக. ஐந்தொழிலும் வீண் எனில் அவை பித்தர் செய்யும் பெருமையற்ற தொழிலாகும். அதுவும் தவிர வீண் தொழில் இயற்றுபவன் முதன்மையும் முற்றறிவும் இல்லாதவன் எனப்பட்டு இகழப் படுவான். இறைவன் ஐந்தொழிலும் தன் பொருட்டே இயற்றுகின்றான் என்று கொண்டால் அதுவும் முன் கூறியது போலப் பொருந்தாக் கூற்று. ஏனெனில் முழு முதன்மையும் முற்றறிவும் உடைய இறைவன் தனக்கென மின்னல் போல் கணப் பொழுதில் தோன்றிக் கணப் பொழுதில் அழியும் இவ்வுலகத்தைப் படைத்துக் காத்து மறைத்து ஒடுக்கி அருளுகிறான் எனப்பட்டு இழுக்காய் முடியும்.

இறைவன் பிறர் பொருட்டே ஐந்தொழில் செய்தான் என்னில் அவன் தவிரப் பிறரும் அவர்களுக்கான பொருளும் அப்பொருளுக்கு ஆவதான கருவியும் முதற் காரணமும் செய்கையும் என்று ஐவகை நிலைகள் வேறு உள என்று கொள்ளப்பட்டு யாவும் சிவமே எனக் கூறும் உன் கொள்கைக்கு மாறுபடும். மேலும் அறிவே வடிவாகிய இறைவனில் இருந்து அறிவற்ற பொருள்கள் தோன்ற மாட்டா. உலகம் அறிவற்றதன்று. யாவும் சிவனது வடிவமே என்று நீ வாதிட்டால் உலகத்தில் அறிவற்ற பொருளே இல்லையா? உலகம் அறிவற்றது என்று மறைகளும் ஆகமங்களும் கூறுவது என்னுக்கும்? உலகாயதர் கூட நான்கு பெரும் பூதங்களின் கூட்டத்தினால் உருப்பெற்ற இந்த உலகம் நீர் மேல் குமிழி போல் நிலையற்றது என்பார்கள்.

ஏற்கத்தகாத கொள்கைகளையுடைய பௌத்தர், சமணர் போன்ற புறச் சமயத்தவர்கள் கூடக் காணப்படும் பொருளை இல்லை

என்று மறுத்ததில்லை. கண்ணுக்கு நேரே தெரிவதை மறுக்கும் உன் கொள்கை காண்டல் விரோதமாகும். உன் போல் இவ்வாறு கூறியவர் வேறு யாரும் இலர். நீ கூறுகின்ற இந்தக் கருத்துக்குச் சான்றாவது எது?

உடல் அறிவுடையதா? உயிராகிய அறிவோடு சேர்ந்ததனால் அதுவும் அறிவுடையதே என்று நீ விடையிறுப்பாய். அவ்வாறு எனின் இறைவனாகிய முற்றறிவுப் பொருள் எவற்றுள்ளும் எங்கும் கலந்து நிற்கவும் குடம் துணி முதலியனவும் இவ்வுடலைப் போல் அலைந்து திரியாமல் அவை கிடந்த இடத்திலேயே கிடப்பது ஏன்? இக்குடம் துணி ஆகியவற்றில் உள்ள உயிர் மரம் செடிகளில் உள்ள உயிர் போன்றது. மரம் செடிகள் எவ்வாறு அசைவதில்லையோ அது போன்றே குடம் துணி முதலியவையும் அசையா என்று மறுமொழி தருகிறாய். இவ்வாறு கூறுவதன் மூலம் தாவரங்களில் உயிர் உண்டு என்று எடுத்துக் காட்டினாய். எனவே உடம்பிலும் இறைவனைத் தவிர உயிர் என்ற தனித்த பொருள் உண்டு என்பதை நீயும் உடன்படுகின்றாய்.

அவ்வாறில்லை எடுத்துக் காட்டு என்பது ஒன்றே கொண்டு வாதிடுவது சரியில்லை. முற்றிலும் பொருந்துமானால் மட்டிலுமே இத்தகைய வாதத்தை ஏற்க முடியும் என்று கூறுவாயானால் உவமை என்பதும் உவமையால் விளக்கப்பட்ட பொருளும் ஒரே பொருளாக இருக்க முடியாது. இருப்பின், பொன் போன்ற கொன்றை என்றும், திங்கள் போன்ற முகம் என்றும் உவமை கூறுவார் கூற இயலாது. இறைவனே எங்கும் நிறைந்திருக்கிறான் என்று நீ கூறுமிடத்து உயிர் என்ற தனித்த பொருள் இல்லை என்று வாதிடுகிறாய், அப்படியாயின் உடலில் பொருந்தியிருக்கும் இறைவனுக்கும் மரம் செடி கொடிகளில் பொருந்தியிருக்கும் இறைவனுக்கும் வேறுபாடு காணப்படுவானேன்? அந்த வேறுபாடு ஐம்பூதங்களின் சேர்க்கையில் ஏற்பட்ட ஏற்றத் தாழ்வு களினால் விளைந்தது என்று நீ கூறுவாயானால் அந்த ஏற்றத் தாழ்வு எதனால் வந்தது என்பதற்கு நீ விடை கூற வேண்டும். அது வினையினால் வந்தது என்று நீ கூறினால் அந்த வினையை இயற்றியவர் யார்? இறைவன் வினையின் நீங்கி விளங்குபவன் ஆதலால் அவன் வினை செய்தான் எனல் பொருந்தாது. உடல் அறிவற்ற சடப் பொருள். ஆதலால் அதனால் வினையை இயற்றலும் வினைப்பயனை நுகர்தலும் இயலா. இவ்வாறு நீ வாதிடுவது பித்தர் கூற்றுப் போன்றது. கடவுளே உடலோடு பொருந்தி நுகர்கிறான் என்று நீ கூறினால் இறைவன் ஐந்தவத்தைப் படுவான். இன்ப துன்பம் உறுவான், கருவிகளோடு கூடியும் நீங்கியும் நிற்பான் எனப்பட்டு இறைவனுடைய முழு முதல் தன்மைக்கு இழுக்கு ஏற்படும். மேலும் இறைவனால் அருளப் பெற்ற அருள் நூல்கள் பல, உலகத்தில் நிலவுவதைக் காண்கிறோம். இறைவன் முற்றறிவினன். பாசங்கள் அறிவற்ற சடப் பொருள். ஆதலால் அருள்

நூல்கள் எவர் பொருட்டு அருளிச் செய்யப்பட்டன என்பதை நீ விளக்கியாக வேண்டும். இந்த அருள் நூல்களால் பயன் கொள்வது உயிரே ஆகும். உலகத்தில் எண்ணற்ற பொருள்கள் உள்ளன. ஞாயிறும் உள்ளது. இந்த இரண்டிலும் வேறுபட்டதாகிய கண் என்ற மூன்றாவது பொருள் இல்லையென்றால் காண்டல் தொழில் இல்லையாகும். பாசத் தொகுதியும் பதிப் பொருளும் தவிரப் பசு என்ற ஒன்று உண்டு என்று அறிவாயாக. இது என்னும் சுட்டறிவைத் தன் மயமாகும்படி செய்து பிரிவின்றி நிற்கும் மாயையின் இயல்பினை உள்ளவாறு அறியாக.

பொன்னும் பொன்னால் ஆகிய அணிகலன்களும் பொருள் தன்மையால் ஒன்றேயாவது போல, இறைவனுடைய அருவம் உருவம் அருஉருவமாகிய மூன்று திருஉரு நிலையும் ஈசனே என்று அருளாளர்கள் சொல்வார்களே யல்லாமல் உலகம் அருவ நிலையில் சிவமாகியும் உருவ நிலையில் சத்தி ஆகியும் திகழும் என்று நீ கொள்வாயானால் அவ்விரண்டு பகுதிகளும் மாயையே என நீ தெளிந்து கொள்ளவில்லை என்பதாகும்.

செய்யத் தக்கது இதுவென்றும், செய்யத் தகாதது இதுவென்றும் பாகுபடுத்தத் தேவையில்லை என்று நீ கொள்வது உலகாயதன் கருத்தோடு ஒத்ததே. கள்ளுண்ணல், கொலை செய்தல், சினம், காமம், களவு போன்றவை தீயன. ஆதலின் அவற்றை விட்டு விடுக என்று கூறுதார் யார் உளர்? சோம பானம் அருந்துதல், சுரா பானம் அருந்துதல் என்பவற்றை எந்த அற நூல் உடன்பட்டது? உயர்ந்த குலத்துப் பிறந்தவன் ஒருவன் தாழ்ந்த குலத்தைச் சார்ந்த ஒருத்தியோடு கூடுவது முறையாகுமா எனக் கேட்பின் அவை எல்லாம் நாமாகப் புனைந்து கொண்ட வரையறைகளே என நீ கூறக்கூடும். சாதிப் பிரிவுகளால் உள்ள முறைமை தவறினால் இயற்கை அரண்களாக் வேறுபாடு உள்ளனவே? காளை எருமையை விரும்புவதில்லை. ஆனால் பசுவையே விரும்பும் ஞானிகளுக்கு இத்தகைய வரைமுறைகள் கிடையா என் நீ வாதிடல் கூடும். அவர்கள் ஞானியர் எனவே முறை பிறழ மாட்டார் என்பதே கருத்து அல்லாமல் அவர்கள் என்ன வேண்டு மானாலும் செய்யலாம் என்பது கருத்தன்று.

கண்ணின் வடிவமும் அதில் படுகின்ற கதிரவனின் ஒளியும் அணுகுதற்கு அரிய சிவசத்தியினுடைய நாடகம் என்று நீ கூறினாய். அந்த நாடகம் நடிப்பதற்கான காரணத்தையும் அதற்கான பயனையும் இன்னது என நீ கூறுதல் வேண்டும். காரணமும் பயனும் இல்லாத விடத்து நீ கூறுவது உலக இயற்கைக்கு மாறுபட்டதே. அதனால் உன் கருத்துப் பிழைபடும்.

உலகு ஏழ் என திசை பத்து எனத் தான் ஒருத்தனே பல ஆகி என்றும், ஊனாகி உயிராகி அதனுள் நின்ற உணர்வாகிப் பிற அனைத்தும் நீயே ஆனாய் என்றும், திருவே என் செல்வமே என்றும் வருகின்ற

அருளாளர்கள் வாக்குகளுக்கு முறையான பொருளை நுணுகி உணர்ந்து கொள்ளுதல் வேண்டும் தவருகப் பொருள் கொள்ளக் கூடாது. குடம், பானை, கலசம் முதலிய பாத்திரங்களாகக் குயவனே மாறினுன் எனில் பொருந்துமா? இறைவனே எல்லாப் பொருளும் ஆயினன் என்று கூறும் போது இறைவனே எல்லாப் பொருளையும் ஆக்கினுன் என்பது தான் கருத்து. 'ஆனுய்' என்ற சொல்லே பொருள்கள் வேறு என்பதும் இறைவன் அவற்ருேடு கலந்து நின்ற தன்மையையும் குறிக்குமேயன்றிப் பொருட்களே இறைவன் என்று குறிப்பனவல்ல.

'தாமே தாமாகச் செய்யுமவன்' என்னும் திருஞான சம்பந்தர் திருப்பாடலைப் பிழையற உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். தாமே என்பதிலே உள்ள ஏகாரம் ஆழ்ந்த பொருளுடையது. இந்த ஓர் எழுத்து இறைவனைச் சார்ந்தும் உயிர்கள் அழிந்தில என்பதனையும், சிவபரம் பொருளே ஆகிலர் என்பதனையும், சிவனை விட்டு நீங்கிலர் என்பதனையும் அச்சிவனை விட்டுத் தமக்கெனச் செயல் இலர் என்பதனையும் உணர்த்து வதாகும். இதே கருத்து நாமே சிவமாய் நண்ணினம் என்று இந் நூலிலும் 'நாம் ஒழிந்து சிவமானவா பாடி' என்ற திருவாசகத்துக்கும் பொருந்தும் என்பதை உணரவேண்டும்.

'காயாகிப் பழமாகி' என்ற அப்பர் திருத் தாண்டகத்தில் வருகின்ற பகுதியில் பொருள்கொள்ளும் போதும் இவ்வாறே நுணுகிப் பொருள் கொள்ளவேண்டும். காயும் பழமும் சுவையும் நுகர்வும் நுகர்வானும் சிவபெருமானின் அருளாலேயே உள்ளன என்பது இப்பாடலின் கருத்தாகும். இவ்வாறே 'அறிவானும் தானே' என்னும் பாடல் எல்லா உலகமும் இறைவனின் திருமேனியே என்பதை உணர்த்தும். 'தாய் தலைப் பட்டு என்ற பாடலுக்கும் 'ஏதமற நான் கெட்டேன்' என்று வரும் பாடலுக்கும் இவ்வாறே அவற்றின் உள்ளுறை அறிந்து பொருள் கொள்ளவேண்டும்.

தருகின்ற பொருளும், தருவோனும், பெறுவோனும் ஆகிய மூன்றும் சிவபெருமானே என்ருல் இந்தச் செயல்களினுலே என்ன மகிழ்ச்சி அல்லது பயன் உண்டாகும்? இம் மூன்றும் ஒன்றே என்று பேசுவது இனிமையாக இருக்கலாம். ஆனுல் பொருந்துவதன்று. மூன்றும் ஒன்றேயாயின் நுகரும் ஆசை உள்ளவனுக்கு நுகர விரும்பும் பொருள் தடையின்றிக் கிடைத்தல் வேண்டும். அவ்வாறு கிடைப்பதை நாம் உலகத்தில் கண்டதில்லை. சொர்க்க நரகங்கள் என்று பேசப்படுவன பயனற்ற பேச்சாகும். பலரை நோய்கள் வருத்துவதும் காணுகிருேம். இறைவன் நோயால் வருந்துகிருன் என்பது பொருத்தமுடையதாகுமா? எனவே எல்லாம் ஒன்று என்பது பொருந்தாது.

சத்தியும் சிவமும் தாமே வினைகளைச் செய்து வினையின் பயன்களை நுகரும் என்று நீ கூறும் இந்த உணர்வு யாருக்கு எழுகிறது? சத்திக்கும் சிவத்துக்குமே எழுகிறது என்று கொண்டால். அவை இவற்றை அறியாமலிருந்து அதன் பின்னர் உணர்ந்தன எனப்பட்டு வழுவாகும். சத்திக்கும் சிவத்துக்கும் இத்தன்மைகள் பொருந்தா.

நானாகிய உயிரும், அவன் எனப்படுகின்ற இறைவனும், என்னைப் பிணித்துள்ள குற்றங்களும் இக் குற்றங்களிலிருந்து நீங்கி அவனை அடைந்து பெறுகின்ற நலமும், உயிர் சிவத்தோடு இரண்டறக் கலத்தலும், நீ கூறும் கொள்கையில் இல்லை. இரண்டறக் கலத்தல் என்னும் பரமுத்தி, பதி பசு பாசம் என்ற முப்பொருள் உண்மை கொண்டவர்களுக்கே பொருந்தும்

ஒவ்வொருவரும் தாம் விரும்பிய வழியிலே ஒழுகி வீடு பேறு அடையலாம் என்று நீ கூறுகிறாய். இக்கருத்தை எந்த அருள் நூலும் கூறவில்லை. அது மட்டிலுமன்று விதித்தன செய்தும் விலக்கியன ஒழித்தும் ஒழுகாமல் வீடு பேறு கிட்டும் என்பது வீடு பேற்றை அரியது என்று கருதாமல் எளியது என்று தாழ்த்தும். மனம் போன போக்கில் வாழ்வதனால் வீடு பேறு அடையலாம் என்பது, உலகப் பொருள்களை நிலைத்தன என்று கருதிக் கொடுஞ் செயல் புரிந்து வாழுகிற உலகாயதன் செயலும் வீடு பேற்றுக்கு வழி என்று கொள்ளப்படும்.

சுவர் இல்லாமல் சித்திரம் எழுதுதல் இயலாது என்பது யாவரும் அறிந்ததே. உடல் கருவி உலகு நுகர்ச்சிப் பொருள் ஆகியவை உயிரின் வினை நீக்கத்துக்காக இறைவனால் அருளப்படுகின்றன என்று எல்லா நூல்களும் முழங்குகின்றன. அப்படியிருந்தும் நீயோ கருவிகள் அற்ற நிலையில் உயிர்களுக்கு இறைவன் அருளை வழங்குவான் என்று கூறுகிறாய். உன் பொருத்தமற்ற வாதம் எத்தகையது எனில், இருள் நிறைந்த அறையிலே குருடன் ஒருவன் இருந்தான். அவனைக் காணச் சென்ற பார்வையுடையவன் ஒருவன் தன் கையிலே ஒரு விளக்கையும் ஏந்திச் சென்றான். எதற்காக இந்த விளக்கு என்று கேட்கப்பட்ட பொழுது "நான் உம்மைப் பார்க்கிறேன். விழியற்ற நீர் என்னைப் பார்ப்பதற்காக இவ்விளக்கை எடுத்து வந்தேன்" என்று கூறியதற்கு ஒப்பாகும். இறைவன் இத்தகைய செயலைச் செய்வதற்கு அறிவற்றவன் அல்லன்.

அருளாளர்கள் நம் கருவி கரணங்களால் இவ்வுலகத்துப் பொருள்களை நுகர்ந்து கொண்டிருப்பதை விரும்ப மாட்டார்கள். ஏனெனில் அவர்கள் பரமே பார்த்திருப்பர். பதார்த்தங்கள் பாரார். நீயோ கருவி கரணங்களால் வரும் அறிவெல்லாம் சிவமேயாகும் என்று

கூறுகின்றாய். பொறி புலன்கள் எதனையும் அறியா என்றும் அறிவது பிரமம் ஒன்றே என்றும் கூறும் மாயாவாதிக்குக் கூட உன் போல் இடர்ப்பாடு இல்லை.

மாயாவாதிகள் தத்துவங்கள் பதினொன்கே உள்ளன என்பர். நீயோ அவரினும் அதிகமான தத்துவங்களை ஏற்றுக் கொண்டு அவை இருபத்து இரண்டு என்பாய். மாயா வாதிகள் அவத்தை நிலைகள் மூன்று என்பர். நீ ஐந்தவத்தை உள என ஏற்றுக் கொள்ளுகிறாய். மும்மலங்களும் இறைவனும் உயிரும் உளவென ஒத்துக் கொள்கிறாய். அவற்றை எல்லாம் மறந்து யாவும் ஒன்றே ஆகும் என்று இப்பொழுது பேசுவது தாயும் மனைவியும் தமக்கையும் ஏவற்பெண்டிரும் மகளிரே ஆதலால் அவர் அனைவரையும் ஒரு தன்மையாகப் பார்க்கும், காமுகர் தன்மையிலும் மிகவும் கொடியது.

நிற்க. ஒப்பற்ற தலைவனாகிய இறைவனது நிலையையும், அவனது திருவருளாகிய சத்தியின் நிலையையும், உயிரின் நிலையையும், உயிரைக் கட்டி இருக்கிற விரிந்த பாசத்தின் நிலையையும் இவை ஒன்றையும் நினையாமல் நீ சொல்லுகிற துரியாதீதத்தில் அடையத் தக்க சிவகதியை ஆராய்ந்தால் புலன் வழி ஒழுகுவோரினும் எட்டு மடங்கு அதிகமாகக் கேடு தரும் வழியே உன் வழி. எனவே உன் குறைபாடுகள் நீங்க உனக்கு உண்மை நெறியைக் கூறுவேன் கேட்பாயாக.

குலாலன் குயவன். அத்தன் — தலைவன், இறைவன். அவசித்தாந்தம் பிழைபட்ட கருத்து. சீனர் சர்வகர் - இந்த இடத்தில் பிற நாட்டினரை உணர்த்தாமல் பிற சமயத்தவரை உணர்த்திற்று. திருட்டாந்தம் எடுத்துக் காட்டு. தாட்டாந்திகம் எடுத்துக்காட்டால் பெறப்படுவது. மேதி - எருமை, சார்வம் — யாவும். குட்டியம் — சுவர். கொச்சையன் — அறிவற்றவன். தவ்வையர் — தமக்கையர்.

## சைவவாதி சங்கற்பம்

19 அறிவாய் அறியும் அறிவுஉயிர் கேவலத்து
அறிவிலன் இருளொடும் பிறிவிலன் அண்ணல்
கலைமுதல் ஆக நிலவிய கருவிகள்
விளக்குஎன உதவும் துளக்குஅறப் பொருந்தி
இருவினை நுகர்வில் வருவினை செய்து 5
மாறிப் பிறந்து வருநெடும் காலத்து
இருள்மல பாகமும் சத்தி நிபாதமும்
மருவுழி அருள்உரு மன்னவன் அணைந்து
செல்கதி ஆய்ந்து பல்பணிப் படுத்திக்
கருவியும் மலமும் பிரிவுறப் பிரியா 10

ஞானம் நல்கலும் தான்அது நோக்கித்
தன்னையும் அதனையும் தன்முதற் பொருளையும்
இன்னஎன்று அறியா இருவரும் முயங்கி
ஒன்றாய் உறுபயன் உவப்பும்
இன்றாய் நிற்கும் இதுசிவ கதியே 15

சகல நிலையில் அறிவோடு கூடிய உயிர் பொருள்களை அறிந்து வரும். அவ்வுயிர் கேவல நிலையில் ஆணவ மலத்தோடும் கூடி அதனை விட்டு நீங்கும் வழியறியாது அறிவின்றிக் கிடக்கும். இறைவன் தன் பெருங் கருணையினால் கலை முதலாகக் கூறப்பட்ட கருவிகளை இருளில் நிற்கும் உயிரின் உதவிக்காகக் கை விளக்கெனத் தந்து அருளுகிறான். உயிரும் அக் கருவிகளோடு கூடி இரு வினை செய்து அதன் பயன்களை நுகரும் போது மேலும் வினைகளை ஈட்டி மாறி மாறிப் பிறந்து வரும். இவ்வாறு பல காலம் கழிந்த பிறகு ஆணவ மலம் பரிபாகப்பட சத்தி நிபாதம் நிகழும். அப்போது அருளே வடிவாகக் கொண்ட ஆசிரியனாக உயிரின் முன் தோன்றி அதனைச் சரியை கிரியை யோகம் ஆகிய தொண்டுகளில் செலுத்திச் சகலத்தில் கூடிய தத்துவங்களும், கேவலத்தில் கூடிய ஆணவ மலமும் நீங்குமாறு தன்னை விட்டு விலகாத சிவஞானத்தை அவ்வுயிர்களுக்கு அருளுவான். அந்நிலையில் தன்னையும் சிவஞானத்தையும் அந்த ஞானத்திற்கு அடிப்படையாக உள்ள சிவபெருமானையும் வேறு படுத்தி அறிய இயலாத தன்மையும் உயிரும் சிவமும் கூடி ஒரே பொருளாகி முத்திப் பயனின் பேரின்பமும் இல்லாமல் நிற்கின்ற நிலையே சிவகதி எனப்படும்.

துளக்கு — குற்றம். மன்னவன் — ஞான ஆசிரியன். பல்பணி — சரியை முதலிய தொண்டுகள்.

## சைவவாதி சங்கற்ப நிராகரணம்

இதுகதி யாக முதல் அறிவு உயிரேல்
பொறிபுலன் நீங்க அறிவுஉயிர் அன்றே
அடைகாய் நூறின் இடைசேர் சிவப்புஎன
இந்தியத் தொகையின் வந்துஅறிவு ஒன்றுநின்று
இன்றாம் என்றல் அன்றே எந்தை 5

அறிவுஇலன் அதீதச் செறிவில்என்று உரைத்த
நின்மொழி விரோதமும் பின்முன் மலைவும்
மன்வயின் நிகழா மலம்இருள் இறைஒளி
ஆன்மா விளக்கில் தரும்மருள் கலாதிகள்
ஊனம்இல் இவன்இடத்து எவ்வாறு இசைந்தன 10

இசைந்தது ஆயினும் இசையாது ஆயினும்
அசைந்திடும் முத்தி சாதனம் அவமே
சத்தி நிபாதமோ தகும்மல பாகமோ
உய்த்த காரண காரியம் ஓதுக
பாகம் காரணம் ஆகில் மற்றுஅது 15

கால அவதியில் காய அவதியில்
மேலாம் என்னும் வினையுறும் அவதியில்
துயர்என உயிர்க்குத் தோன்றிடும் அவதியில்
நயம்மிகும் இறைவன் நல்கிடும் அவதியில்
ஏதில் கூடும் ஓதுக இருவினை 20

ஒத்த எல்லையில் வைத்தனர் என்னில்
அருவினை தூக்க உருவினை நில்லாது
ஒருவினை புரிகால் இருவினை ஆகா
ஒப்புறு மாறு செப்புக தேசிகன்
அருள்உரு என்த பொருளினை ஆயின் 25

மாயா உருவினன் மாயா உருவினை
ஏயான் ஏய்ந்தவர் எம்மனோரே
பல்பணி ஞான காரணம் என்னில்
தொல்பணி தொறும்பயன் தொடுப்பதனாலும்
ஒருபணி செய்யாச் சிரபுரச் சிறுவரும் 30

அரசர் ஆகிய தருணத் தலைவரும்
முதிர் பரசமயத்து இதம்உறும் அரசரும்
ஞானம் பெற்ற நன்மையி னாலும்
ஈனம்இல் பணிஅருட்கு ஏதுஅன்று என்றால்
ஞானோற் பத்தி நிமித்தம் இத்தொழில்என 35

ஏனோர்க்கு இறைநூல் இயம்பிற்று என்னும்
கருவியும் மலமும் பிரிவுற அருள்தரும்
என்றனை கேவலத்து ஏதும் அறிவிலன்
துன்றிய சகலத்து அருள்நிலை தோன்றாது
எவ் அவத்தையில் இறை அருள் பெறுகுவம் 40

செவ்விய ஞான தெரிசனம் ஆவது
நால்வகை மாயைப் பால்வரு ஞானம்
பண்டை ஞானம் இதுபறி தரவரக்
கண்ட ஞானம் இதுவாக் காணில்
ஈனமில் ஞானிகள் என்போர் யாரும்இல் 45

ஞான வேற்றுமை நாடலும் அரிதே
தானும் ஞானமும் தலைவனும் என்றனே
ஆனபின் இவனும் இவனது ஞானமும்
பாசமும் பாச ஞானமும் என்றுஇவை
பேசுவர் ஒன்றுப் பெற்றிய ஆகலின் 50

மும்மைப் பொருட்கும் மும்மைத் தன்மை
செம்மைத்து என்னில் செலவுகள் எழுதுக
இருவரும் கூடி ஒருபயன் ஆய்த்து என்று
அருளினை இவ்வாறு அபேதிகள் நிலையே

சிவகதியைப் பற்றி நீ கூறிய கருத்துக்களைப் பின்னர் ஆராய்வோம். உயிர் தொன்று தொட்டு அறிவாக விளங்கும் என்றால் கருவி கரணங்களும் அவற்றினால் நுகரப்படும் பொருள்களும் நீங்கிய காலத்து உயிர் அறிவுடையதாக இல்லையே அது ஏன்? வெற்றிலை பாக்கு சுண்ணாம்பு ஆகிய மூன்றையும் வாயிலிட்டு மென்றால் அவ்வ மூன்றும் கூடிய விடத்துப் புதியதோர் சிவப்பு நிறம் தோன்றுவது போலப் பொறி புலன்கள் உயிரோடு கூடுவதால் அறிவு தோன்றி அவை கூடாவிடத்து மறையும் என்று கூறினாய். இது பௌத்தர்கள் கூறும் கணபங்கம் ஆதலின் உனக்குப் பொருந்தாது. உயிரை அறிவு என்றும் கூறிவிட்டு, அதே நேரத்தில் கேவல நிலையில் உயிருக்கு அறிவு இல்லை என்று சொல்லுவது முன்னொடு பின் முரணுகுவது மட்டுமின்றி மலைவும் தரும். எனவே பெரியோர் இதனை ஏற்றுக் கொள்ளார். ஆணவம் செறிவான இருளாக இருப்பது. இறைவன் பேரொளிப் பிழம்பானவன். உயிர் சற்றே அறிவினைப் பெறுவதற்காக இறைவனால் கூட்டப் பெற்ற கலை முதலிய தத்துவங்கள் மயக்கஞ் செய்வன. கேவல நிலையில் அழுந்திக் கிடந்த உயிரினிடத்துக் கலை முதலியன எவ்வாறு வந்து பொருந்தின?

கருவிகளோடு பொருந்தி அறியினும், கருவிகளின் நீங்கி அறிவற்று இருப்பினும் எவ்வாறாயினும் ஆகுக முத்திக்கு வழி என்று நீ கூறிய சாதனமும் ஆராய்தற்குரியது. முத்திக்குரிய காரணம் என நீ கூறியது சத்திநிபாதமா அல்லது மல பரிபாகமா கூறுக. மல பரிபாகம் காரணம் என்னில் அது கால எல்லையில் நிகழுமா? அன்றி உடம்பின் எல்லையில் நிகழுமா? நீடித்த வினையின் எல்லையில் வருமா? அல்லது மாறி மாறிப் பிறந்து வரும் உயிர் பிறப்புத் துயரத்தை உணர்ந்த எல்லையில் வருமா? அல்லது இறைவன் மனமிரங்கி அருள் பாலிக்கின்ற எல்லையில் வருமா? இவ்வைந்தனுள் எப்போது சத்தி நிபாதம் நிகழும் என்பதைக் கூறுக.

பெரியோர், அந்நிலை இருவினையொப்பு நிகழ்ந்த காலத்தில் கை கூடும் என்று கூறுவர் என நீ விடை தந்தால், இருவினை என்பது அருவம். அவற்றைக் கணக்கிட்டுக் கூறுதல் இயலாது. அல்லாமலும்.

ஒரு வினையைச் செய்கின்ற போது அவ்வினை இரண்டு பயன்களைத் தருவதில்லை. நல்வினைக்குப் பயன் புண்ணியம், தீவினையின் பயன் பாவம். மாறுபட்ட இந்த இரண்டும் நேர் ஒத்துப் போதல் என்பது எவ்வாறு கூடும்?

மேலும், ஆசிரியர் அருள் வடிவன் என்ற கொள்கையை உடையவனாகிய நீ அவன் வடிவம் கொண்டு தோன்றுவான் என்று கூறினாய். இறைவன் ஆசிரியனாக எழுந்தருளுகின்றபோது அவன் மாயையின் காரியங்களாகிய மேனியைத் தரித்துக் கொள்ளமாட்டான். மாயையால் உண்டான உடலை அவன் தரித்துக் கொண்டான் என்று கூறுவது நம்மில் ஒருவனாக அவனைக் கருதுகின்ற குற்றத்தைத் தரும்.

சரியை, கிரியை, யோகம் என்ற மூன்று நிலைகளிலும் உயிர்கள் பயின்று வந்தமை காரணமாக உயிர் ஞானத்தைப் பெறும் என்றாய். இம் மூன்று வகைத் தொண்டுக்கும் சாலோகம், சாமீபம், சாரூபம் என்ற மூன்று பதமுத்திகள் நூல்களில் சொல்லப்பட்டுள்ளனவே, அதனை நீ விளக்கி ஆதல் வேண்டும்.

திருஞானசம்பந்த நாயனார் கிரியை நெறியில் நின்றவர் என்பர், சுந்தரமூர்த்தி நாயனார் யோக நெறியில் நின்றவர் என்பர். திருநாவுக்கரசு நாயனார் சமண சமயத்தில் குறுகி அதன் பின்னர் சிவபெருமான் திருவருளால் சைவ சமயத்தைச் சார்ந்து சரியைத் தொண்டு ஆற்றினார் என்பர். இம் மூவர் முதலிகளும் ஒரு வகைத் தொண்டே புரிந்து மற்றைய இரண்டு வகைத் தொண்டும் இயற்றாது இருந்தும், ஞானத்தைப் பெற்றுச் சிவபெருமான் திருவடியை அடைந்தனர். இதனால் உன் கூற்றுப் பொருந்துவதில்லை. எனவே குற்றமற்ற மூன்று வகைத் தொண்டுகளும் ஞானத்தின் தோற்றத் திற்குக் காரணம் என்று கொள்ளாமல் ஞானத்தை நோக்கி இட்டுச் செல்வன என்று கூறுவதே பொருந்தும் என அறிக.

உயிருக்குச் சகல அவத்தையைத் தருகின்ற கலை முதலிய கருவிகளும் உயிருக்குக் கேவல நிலையைத் தருகின்ற ஆணவ மலமும் நீங்குமாறு இறைவன் ஞானத்தைத் தருவான் என்று நீ கூறினாய். கேவல நிலையில் கருவிகளோடு கூடாமையால் உயிர் அறிவற்று இருக்கும் என்பதும் சகல நிலையில் சிவப் பேரறிவு உண்டாகாது என்பதும் உன் கொள்கைகள். வேறு அவத்தைகளை உன் கொள்கையில் நீ உடன் படுவதில்லை. அப்படியாயின் எந்த அவத்தையில் உயிர்களாகிய யாம் சிவஞானத்தை அடைவோம்?

உன் கொள்கைப்படி தெளிந்த சிவஞானம் என்பது உடல் கருவி உலகு நுகர்ச்சிப் பொருள் ஆகியவற்றின் வழியாக வருகின்ற அறிவாகும். அவ்வாறாயின் அது மாயையின் நால்வகை வாயில்களின்

மூலமாக வருகின்ற ஞானமேயன்றி வேறில்லை. இவற்றை விடுத்து மேல் நிலை எய்தியவருக்கே சிவஞானம் கிட்டும் எனக் கூறினால் அத்தகைய ஞானிகள் உலகத்திலே இல்லை.

உன் கொள்கைப் படி உயிரும் சிவஞானமும் சிவமும் என மூன்று பொருள்களை எடுத்துரைத்தாய். உயிரின் ஞானமும் பாசமும் பாச ஞானமும் என்கின்ற இவற்றையும் பெரியோர் கூறுவர். ஆகவே பதி பசு பாசம் என்ற மூன்றனுக்கும் பதிஞானம் பசுஞானம் பாசஞானம் என்ற மூவித அறிவுகள் உளவாதல் வேண்டும். நீ கூறிய முத்திப் பேற்றில் உயிர் சிவஞானத்தோடு இயைந்து சிவமாய்ப் போகும் என்றாய் அந் நிலையில் பசுஞானமும் பாசமும் என்னவாகும் என்பதனைக் கணக்கிட்டுக் கூறுக. அல்லாமலும் உயிரும் சிவமும் கூடி ஒன்றாய்ப் போயின என்று நீ கூறுவது கட்டு நிலையில் இரண்டாகவும் வீட்டு நிலையில் ஒன்றாகவும் இருப்பன என்ற மாயாவாதியின் கூற்றாக முடியும்.

அடைகாய் — வெற்றிலை பாக்கு. நூறின் — நொறுங்குமாறு மென்றால். இந்தியத் தொகை — இந்திரியங்களின் தொகை. கலாவதி — கலையின் எல்லை. காயாவதி — உடம்பின் எல்லை. அவதி – எல்லை. முடிவு. சிரபுரச்சிறுவர் — திருஞான சம்பந்த நாயனார். அரசராய தருணத் தலைவர் — சுந்தர மூர்த்தி நாயனார். அரசர் — திருநாவுக்கரசு நாயனார். செலவுகள் எழுதுக — கணக்கிட்டுக் கூறுக. அபேதிகள் — மாயா வாதிகள், ஏகான்ம வாதம் கூறுவோர்.

## சித்தாந்த சைவாசாரியார் அநுக்கிரகம்

பதிபசு பாசம் முதிர் அறிவுகளுடன்
ஆறு முன்னர்க் கூறும் பின்னர்
இருபொருள் கீத்துமற்று ஒருநால் வகையும்
ஈனம்இல் ஞாதுரு ஞானம் ஞேயம் என்று
இசைய மூன்றாய்ப் பசுபதி என்றவற்று 5

இரண்டாய் இரண்டும் ஒன்றின் ஒன்று ஆகத்
திரண்டு ஆம் பயன் எனும் திருவருள் தெளியில்
சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து ஒன்றும்
என்றுஇறை இயற்கை இயம்புதல் தகுமே
ஒன்றும் ஏன்றல் அன்றியும் உவப்பும் 10

இன்றும் என்றால் என்பயன் இயம்புக
என்றனை வினவும் யாவும் விளங்க
வென்றிகொள் கருத்தில் விரும்பினை ஆயின்
நதிக்கரை ஆன்எனக் கொதித்தல் மறந்து
வெண்ணெய் அம்பதி திகழ் மெய்கண்டவன் அருள் 15

உள்நிலை உடையோன் ஒருவன் உரைத்த
தவப்பிர காசத் தன்மையில் விரித்த
சிவப்பிர காசச் செழுந்தமிழ் உண்மையை
அருளுடன் ஆய்ந்து கொள்ளத்
திருவருள் வினவல் திருந்திடும் அன்றே 20

முதலில் இறை உயிர் தளை ஆகிய மூன்றினையும் அவற்றுக்கு உரியனவாகிய பதிஞானம் பசுஞானம் பாசஞானம் ஆகிய மூன்றினுடன் கூட்டிப் பொருள்களை ஆறு எனக் கூறினாய். அதன் பின்னர் பாசத்தையும் பாச ஞானத்தையும் விலக்கிவிட்டுப் பொருள்களை நான்கு என்றாய். அதன் பிறகு பசு ஞானத்தையும் விட்டுவிட்டு அறிபவன் அறிவு அறியப்படு பொருள் என்று வகைப்படுத்துவதற்கேற்பப் பொருள்கள் மூன்று எனக் கூறினாய். அதன் பின்னர் சிவஞானத்தையும் அந்த மூன்றிலிருந்து நீக்கி வீட்டுப் பதி பசு என்கின்ற பொருட்கள் இரண்டே என்றாய். இந்த இரண்டும் ஒன்றாகக் கூடி, அதாவது சிவத்தோடு உயிர் கலந்து சிவம் ஒன்றே மிஞ்சியிருக்கும். இதுவே முத்தி நிலை என்றாய்.

திருவாசகத்தில் ''சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து ஒன்றாம்'' என்ற பாடல் உனக்கு ஆதாரம் என்று நீ தவறாகக் கருதினாய் போலும். அதன் உண்மைப் பொருள் வேறு என்று அறிவாயாக.

முத்தி நிலையில் உயிரும் சிவமும் ஒன்றாகிவிடும் என்றது மட்டு மின்றி அந்நிலையில் உயிருக்கு இன்பமும் இல்லை என்று கூறினாய். அப்படியானால் முத்தி நிலையில் உயிருக்கு விளைகின்ற பயன்தான் என்ன? கட்டு நிலையிலிருந்து விடுபட்ட முத்தி நிலை பயனற்றது என்று கூறுவது எவ்வகையிலும் பொருந்துவது அன்று.

அவ்வாறு எனில் சிவபெருமானின் திருவருள் என்பதும், அதன் தன்மையும், முப்பொருள்களின் இயல்பும், கட்டு நிலை முத்தி நிலை என்பனவும் தெளிவாக உணர்ந்து கொள்ள வேண்டும் என்று நீ விரும்பினால் அதற்கு உனக்கு வழி காட்டுவேன். ஆற்றங்கரையிலே சென்று பசிய புல்லை உண்பதற்காகத் தேடுகிற பசு ஒவ்வோர் இடமாகச் சென்று மேய்வதைப் போல நீ அலமருவதை விடுத்து, திருவெண்ணெய் நல்லூரிலே திகழ்ந்து விளங்கிய மெய்கண்டதேவ நாயனாரின் திருவருளினால் உண்மை உணர்ந்த மரபிலே வந்த, தவப் பயன் கைவந்த ஒருவர் (உமாபதிசிவம்) விரித்துரைத்த சிவப்பிரகாசம் என்னும் செழுந் தமிழ் நூலின் உண்மையைத் தக்க ஞானாசிரியரிடம் பயின்று திருவருளைத் தெளிய உணர்வாயாக.

இங்கே கூறப்பட்ட திருவாசகப் பாடல்,

> ''இன்று எனக்கு அருளி இருள் கடிந்து உள்ளத்து
> எழுகின்ற ஞாயிறே போன்று
> நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்
> நீயலால் பிறிது மற்று இன்மை
> சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து
> ஒன்றும் திருப்பெருந்துறை உறை சிவனே
> ஒன்றும் நீ அல்லை அன்றி ஒன்றில்லை
> யாருன்னை அறியகிற் பாரே''

என்பது. இந்தப் பாடலில் இறைவன் எல்லாப் பொருள்களிலும் நிறைந் திருக்கிறன் என்பதும், அப்படி நிறைந்திருப்பினும் அப்பொருள்கள் எல்லாம் அவனாக மாட்டா என்பதும் மாணிக்க வாசகப் பெருமானால் எடுத்துரைக்கப் பட்டது. ஒன்றும் நீ அல்லை; அன்றி ஒன்றும் இல்லை; யார் உன்னை அறிதற்கு இயலும் என்று வினவுகிற பாடலின் கடைசி அடி இதன் கருத்தைத் தெளிவுறுத்தும். எனவே மாணிக்க வாசகரின் திரு உள்ளம் இறைவனின் இயல்பினை உணர்த்துவதே அன்றி உள் பொருளாவன யாவை என்ற வினவிற்கு விடையிறுப்பது அன்று. ஆயினும் ஏகான்ம வாதம் பேசுவோர் 'சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து ஒன்றும்'' என்ற பாடற் பகுதியைத் தமக்கு ஏற்ப மாற்றிப் பொருள் கொண்டு உள் பொருள் ஒன்றே என்று பிழைபடப் பொருள் காண்பர். அதுதவறு என்பதற்குச் சங்கற்ப நிராகரணத்தில் இப்பாடல் இறைவனின் இயற்கையை இயம்புகிறது என்ற உண்மையை எடுத்துக் காட்டினர் ஆசிரியர் உமாபதி சிவம்.

இதுவரை அகச் சமயங்களும் மாயாவாதமும் கொள்ளுகின்ற கருத்தினை எடுத்துரைத்து மறுத்து வந்த ஆசிரியர் சைவ சித்தாந்தத் தெளி பொருள் சிவப்பிரகாச நூலில் விளங்க உரைக்கப்பட்டுள்ளது என்று சுட்டிக்காட்டி இந்நூலை நிறைவு செய்கிறார்.

திருச்சிற்றம்பலம்




# பாடல் முதற் குறிப்பு அகராதி

எண் : பக்க எண்